# எட்டையபுரப் பள்ளு

பதிப்பாசிரியர்

த. பூமிநாகநாதன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி
சென்னை 600 113.

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | EṬṬAYA PURAP PAḶḶU |
| Authors | : | Mr. D. Boominaganathan |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113. |
| Publication No. | : | 354 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 2000 |
| Paper used | : | 16 kg. TNPL Super Printing |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing types | : | 11 points |
| No. of pages | : | x + 255 |
| No. copies | : | 1200 |
| Price | : | Rs. 60/- |
| Typeset & Printed by | : | **Shri Vignesh Prints**<br>158/5, Lake View Road,<br>West Mambalam, Chennai-33.<br>Ph: 4748486 |
| Subject | : | Minor Literature - Paḷḷu |

முனைவர் ச.சு. இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

## அணிந்துரை

தொல்காப்பியர் நிலத்தை ஐந்து வகையாகப் பிரித்தார். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பனவாகும். அவற்றுள் மருதம் என்பது வயலும் வயலைச் சார்ந்த இடமுமாகும். அந்நிலத்தில் வாழ்ந்த மக்கள் உழவுத் தொழிலைச் செய்து வந்தனர். அவர்களுடைய வாழ்க்கையை மையமாகக் கொண்டு கவிஞர்கள் அக்காலத்தில் பாடல்கள் புனைந்தனர். உழத்திப் பாட்டு என்பது அவ்வாறு உருவான இலக்கிய வகையாகும். உழத்தி அரசனை வாழ்த்தி, உழவுத் தொழிலின் மேன்மையைப் பத்துப் பாடல்களில் கூறும் இலக்கிய வகை 'உழத்திப் பாட்டு' என்று பன்னிருபாட்டியல் என்ற இலக்கண நூல் கூறுகிறது. *(பன்னிருபாட்டியல் 216).* உழவர் வாழ்க்கையைப் புனைந்துரைப்பதால் இதனை உழத்திப்பாட்டு என்றனர். உழத்திப் பாட்டு எனும் இலக்கிய வகை உருவாவதற்குரிய கரு, தொல்காப்பியச் செய்யுளியலில் காணப்படுகிறது. நூலுக்குரிய எட்டு வகை வனப்புகளில் ஒன்றான 'புலன்' என்ற வகையைத் தொல்காப்பியம் பின்வருமாறு சுட்டுகிறது *(செய்யுளியல் 553).*

'சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே'

'வழக்குச் சொல்லினானே தொடுக்கப்பட்டு,ஆராய வேண்டாமல் பொருள் விளங்குவது புலனென்னும் செய்யுளாம்' என இளம்பூரணர் இந்நூற்பாவிற்குப் பொருள் எழுதியுள்ளார்.

இப்பகுதிக்குத் தொல்காப்பிய உரையாசிரியர்களுள் ஒருவரான பேராசிரியர், 'அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன என்பது கண்டுகொள்க' என்று மொழிந்துள்ளார்.

தொல்காப்பிய உரையாசிரியர்களின் குறிப்புகளில் இருந்து அக்காலத்தில் பாமர மக்களின் வழக்குச் சொற்களை அடிப்படையாக வைத்து இலக்கியங்கள் தொல்காப்பியர் காலத்திலும் ஆக்கப்பட்டன என்பதும் அவ்வகை இலக்கியத்தில் ஆடலும் பாடலும் இடம் பெற்றிருந்தன என்பதும் அவை நாடகங்கள் என அழைக்கப்பட்டன என்பதும் நாம் உணரத் தக்க செய்திகள் ஆகும்.

சிலப்பதிகாரத்தில் உழவுத் தொழிலின் சிறப்புக் குறித்த செய்திகள் இடம் பெற்றுள்ளன. உழவர், அல்லது உழத்தியர் தனியாகவோ,குழுவாகவோ கழனியில் வேலைசெய்துகொண்டு இருக்கின்றபோது அவர்களுக்கு வேலைப் பளு தெரியாமல் இருப்பதற்காகப் பாடல்களைப் பாடுவர். வயலில் நாற்று நடும்போது பெண்கள் பாடிய பாடலை 'விருந்திற்பாணி' என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.

உழவர்கள் முதன்முதலாக நிலத்தை உழுவதற்கு முன்னர் ஏரைப் போற்றிப் பாடலைப் பாடுவார்கள். இப்பாடலுக்கு 'ஏர்மங்கலம்' என்று பெயர். இதனைப் 'பொன்னேர் பூட்டுதல்' என்றும் 'நாளேரிடல்' என்றும் குறிப்பிடுவர். உழவர்கள் பாடும் ஏர்மங்கலப் பாடலைச் சிலப்பதிகாரம் சுட்டுகிறது.

நிலத்தில் நெற்கதிர்கள் முளைத்து அறுவடை செய்த பின்னர் அவற்றை மேட்டுப் பகுதியில் இட்டுக் காளைகளை வைத்து மிதிக்க விடுவார்கள். அப்போது உழவர்கள் பாடுகின்ற பாடலின் பெயர் 'முகவைப் பாட்டு' என்பதாகும். 'பொலிப்பாட்டு' என்றும் இதனைக் குறிப்பிடுவர்.

இயல் பாடல்களைக் காட்டிலும் இசைப்பாடல்கள் மிகவும் எளிமையானவை. இவ்வகைப் பாடல்கள் வரிப்பாடல்கள் எனப்பட்டன. சிலப்பதிகாரத்தில் வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை முதலிய வரிப்பாடல்கள் எளிய நடையில் அமைந்துள்ளன.

உழவுத் தொழிலைப் பற்றியும் உழவர்கள் சிறப்பைப் பற்றியும் பாவாணர்கள் பாடிய பாடல்களின் ஒட்டுமொத்த வளர்ச்சி உழத்திப் பாட்டாக உருப்பெற்றது என்று குறிப்பிடலாம். கி.பி. *12* ஆம் நூற்றாண்டில் தோன்றிய பன்னிருபாட்டியல் என்ற இலக்கண நூல் உழத்திப் பாட்டுக் குறித்து இலக்கணம் கூறுகிறது. இலக்கியம் கண்டதற்குத்தான் இலக்கணம். அவர் காலத்தில் உழத்திப் பாட்டு என்ற இலக்கிய வகை இருந்திருக்கலாம். ஆயின் இன்று அவை நமக்குக் கிடைக்கவில்லை.

கி.பி. *14*ஆம் நூற்றாண்டில் தோன்றிய நவநீதப்பாட்டியலில் உழத்திப் பாட்டுப் பகுதியில் பிற்காலத்தில் எழுதப்பட்டதாகக் கருதப்படுகின்ற நான்கு மிகைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்கள் முக்கூடற் பள்ளுவை மனதில் கொண்டு எழுதப்பட்டவை என எண்ணத் தோன்றுகிறது.

மேலும் அந்நூல் 'உழத்திப் பாட்டு' பற்றி விளக்கம் சொல்லுகின்ற போது உழத்திபாட்டைப் 'பள்ளும்' என்பர் என்று குறிப்பிடுகிறது.

வீரமாமுனிவர் எழுதிய சதுரகராதியில் உழத்திப்பாட்டும் பள்ளுப்பாட்டும்

ஒன்றே என்ற குறிப்புக் காணப்படுகிறது. இவ்வாறு நவநீதப்பாட்டியலில் இடம் பெற்றிருந்த மிகைப் பாடல்கள் காரணமாக உழத்திப் பாட்டும் பள்ளுப்பாட்டும் ஒன்றே என்ற கருத்து உருவாயிற்று எனலாம்.

குறத்திப் பாட்டு குறவஞ்சி இலக்கியத்திற்கு அடிப்படையாக அமைந்தது போல் உழத்திப்பாட்டு பள்ளு இலக்கியம் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்தது என்று கருதுவதே ஏற்புடையதாகும்.

கி.பி. *16* ஆம் நூற்றாண்டில் பள்ளு இலக்கியம் தமிழ் இலக்கியத்தில் தோற்றம் பெற்றது. *96* வகை சிற்றிலக்கியங்களுள் பள்ளு,குறவஞ்சி, நொண்டி நாடகம் மக்களிடையே செல்வாக்குப்பெற்ற இலக்கியங்கள் ஆகும்.

கி.பி. *16* ஆம் நூற்றாண்டில் தோன்றிய கமலை ஞானப்பிரகாசரால் எழுதப்பட்ட திருவாரூர்ப் பள்ளு எனும் தியாகேசர் பள்ளு எனும் நூல் பள்ளு இலக்கியத்தில் வெளிவந்த முதல் நூல் என்று கருதப்படுகிறது. இந்நூல் ஞானப்பள்ளு என்றும் ஆதிப் பள்ளு என்றும் பிற பெயர்களால் குறிக்கப்படுகிறது. கோயிலில் இப்பள்ளு பாடப்பட்டுள்ளதாக அறிகிறோம்.

பள்ளு நூல்கள் பல வெண்பா,கலித்துறை,விருத்தம்,சிந்து முதலிய பா மற்றும் பாவினங்களால் இயற்றப்பட்டுள்ளன.

பள்ளு நூல்களின் வழி வரலாற்றுச் செய்திகளையும் பள்ளர் வாழ்க்கையையும் அறியலாம். மேலும் மழை வருவது குறித்தும் ஆற்று வெள்ளம் பெருக்கெடுத்து வருவது குறித்தும் நெல் வகை, மாட்டு வகை,ஏர் வகை முதலியவை குறித்தும் அறிந்துகொள்வதற்கு இந்நூல்கள் துணை செய்கின்றன.

பள்ளன் இருவேறு ஊர்களில் வாழ்ந்த இருவேறு சமயத்தைச் சார்ந்த பெண்களை மணந்துகொள்கிறான். பள்ளன் இளைய பள்ளியிடம் மோகம் கொண்டு அவளிடமே தங்கிவிட, மூத்த பள்ளி பண்ணைக்காரனிடம் பள்ளனைப் பற்றி முறையிடுகிறாள். பண்ணைக்காரன் இளைய பள்ளி வீட்டில் இருந்த பள்ளனை வேலைக்கு வரச்சொல்கிறான். ஆயின் பள்ளன் அவனுடைய பணியில் கவனம் செலுத்தாமல் இருக்கவே பண்ணைக்காரன் மாட்டுத் தொழுவத்தில் அவனைக் கட்டிவிடுகிறான். மூத்த பள்ளி தன்னுடைய கணவனின் இன்னலைக் கண்டு வருந்திப் ,பண்ணைக்காரனிடம் அவனை விடுவிக்கச் சொல்கிறாள். மூத்த பள்ளியின் வேண்டுகோளை ஏற்று பண்ணைக்காரன் பள்ளனை விடுவித்து விடுகிறான்.

பள்ளன் நிலத்தை உழத் தொடங்குகிறான். அப்போது மாடு முட்டிப்

பள்ளன் கீழே விழுகிறான். அங்கே மூத்த பள்ளியும் இளைய பள்ளியும் வருகின்றனர். ஒருவரை ஒருவர் ஏசுகின்றனர். பள்ளன் மயக்கத்தில் இருந்து விழிக்கிறான். இரு பள்ளியரும் மகிழ்ந்து இணைகின்றனர். பள்ளு நூல்களில் காணப்படும் பொதுவான கதை அமைப்பு இதுவாகும்.

'நெல் வகையை எண்ணினாலும் எண்ணலாம், பள்ளு வகையை எண்ணவே முடியாது' என்பது நெல்லை மாவட்டத்தில் வழங்கும் பழமொழி. பள்ளு இலக்கியத்தின் பெருக்கத்தையும் அவை மக்களிடம் பெற்றிருந்த செல்வாக்கையும் இப்பழமொழி மூலம் அறியலாம்.

பள்ளு நூல்களில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது 'முக்கூடற் பள்ளு' என்பதாகும். கி.பி. 17 ஆம் நூற்றாண்டில் வெளிவந்த இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சித்திரா நதியும், கோதண்டராம நதியும் பொருநை நதியுடன் கூடும் இடத்தில் 'முக்கூடல்' எனும் ஊர் அமைந்துள்ளது. அவ்வூரில் எழுந்தருளியுள்ள அழகர் மீது பாடப்பட்டது முக்கூடற் பள்ளு என்னும் நூலாகும்.

முக்கூடற் பள்ளு என்னும் இந்நூலை கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வேளான் சின்னத்தம்பி என்னும் பெயரை உடைய என்னயினாப்புலவர் நாடகமாக அமைத்துள்ளார். முக்கூடற் பள்ளு நெல்லை மாவட்டத்தில் சிறப்பாகப் பாடப்படுகிறது. கல்வி கற்க விரும்பும் சிறுவர்களுக்கு முதன் முதலாக இந்நூலை ஆசிரியர்கள் கற்றுத் தருகிறார்கள்.

பள்ளு நூல்களில் பாட்டுடைத் தலைவர்களாக இறைவனும், இறைவியும் அமையப்பெற்றுள்ளனர். திருவாரூர்ப் பள்ளு, தில்லைப் பள்ளு, சிவசைலப்பள்ளு, கோட்டூர்ப்பள்ளு முதலிய பள்ளு நூல்களில் சிவபெருமான் பாட்டுடைத் தலைவனாக விளங்குகிறார். கண்ணுடையம்மன் பள்ளு என்ற நூலில் உமையாள் பாட்டுடைத் தலைவியாக விளங்குகிறாள். வையாப்புரிப்பள்ளு, திருமலை முருகன் பள்ளு, கொடுமளூர்ப் பள்ளு, கதிரைமலைப் பள்ளு ஆகிய நூல்களில் முருகன் பாட்டுடைத் தலைவனாக அமையப்பெற்றுள்ளான். ஈழத்தில் வெளிவந்த பறாளை விநாயகர் பள்ளு என்ற நூலில் விநாயகர் பாட்டுடைத் தலைவனாக அமையப்பெற்றுள்ளார்.

முக்கூடற் பள்ளுவில் அழகர்(திருமால்),ஞானப்பள்ளுவில் ஏசுநாதர், திருமக்காப் பள்ளுவில் நபிகள் நாயகம் ஆகியோர் பாட்டுடைத் தலைவர்களாக அமையப்பெற்றுள்ளனர்.

குருகூர்ப் பள்ளு என்னும் நூலில் பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான நம்மாழ்வார் பாட்டுடைத் தலைவனாக அமையப்பெற்றுள்ளார். திருநீலகண்டர் பள்ளு என்னும் நூலில் நாயன்மார்களில் ஒருவரான திருநீலகண்டர் பாட்டுடைத் தலைவராக அமையப்பெற்றுள்ளார்.

சிற்றரசர்களும் வள்ளல்களும் பள்ளு நூல்களில் பாட்டுடைத் தலைவர்களாக விளங்குகின்றனர்.

வடகரைப் பள்ளு என்ற நூலில் வடகரை சமீந்தார் பெரியசாமித்துரையும் செண்பகராமன் பள்ளுவில் செண்பகராமனும் சேற்றூர்ப் பள்ளுவில் சேற்றூர் சமீந்தாரும் தண்டிகைக் கனகராயன் பள்ளுவில் கனகராயனும் கங்கநாயக்கர்ப் பள்ளுவில் கங்கநாயக்கரும் பாட்டுடைத் தலைவர்களாக அமையப்பெற்றுள்ளனர்.

சாதியின் பெருமையை விளக்கும் வகையில் பள்ளு நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. ஏழுநகரத்தார் பள்ளு என்ற நூல் நகரத்தாரின் பெருமையையும் வைசியப் பள்ளு என்ற நூல் வைசியரின் சிறப்பையும் எடுத்து இயம்புகின்றன .

மக்களால் என்றும் போற்றப்படுகின்ற பள்ளு நூல்களின் வரிசையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் எட்டையபுரப் பள்ளு என்னும் இந்நூலை வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறது. இந்நூலின் பாட்டுடைத்தலைவன் குமார எட்டேந்திரன். இதனைப் பாடிய புலவர் நாகூர் முத்துப்புலவர்.

எட்டையபுரப் பள்ளு என்னும் இந்நூல் ஊரால் பெயர் பெற்றது எனலாம். எட்டையபுரப் பள்ளு என்ற இந்த நூலுக்குத் ' தென்னிளசைப் பள்ளு' என்ற பிறிதொரு பெயரும் உண்டு.

ஓலைச் சுவடியில் எழுதப்பட்டு இதுவரை நூல் வடிவம் பெறாமல் இருந்த எட்டையபுரப் பள்ளு எனும் இந்நூலினைப் பதிப்பித்த திரு. த. பூமிநாகநாதன் அவர்களைப் பாராட்டுகிறேன். அவர் தொடர்ந்து இப்பணியில் ஈடுபட்டு மேலும் சிறந்த நூல்களை எழுத வாழ்த்துகிறேன்.

இந்நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் காட்டிவருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு.சு.இராமகிருட்டிணன் இ.ஆ.ப. அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலினை நல்ல முறையில் அச்சிட்டுத்தந்த விக்னேஷ் அச்சகத்தார்க்கும் நன்றி.

இயக்குநர்

# முன்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தமிழ் மொழியின்கண் பொதிந்து கிடக்கும் அளவிடற்கரிய பல்லாற்றானும் சிறப்புடைய செய்திகளைப் பலதுறைகளின் வாயிலாக ஆய்வுகள் நடத்தி வெளிக்கொணரும் அரும்பெரும் தொண்டினைக் கடந்த கால் நூற்றாண்டுக்கு மேலாகத் தொடர்ந்து செய்து வருகின்றது. இந்நிறுவனத்தின் உட்பிரிவுகளில் ஒன்றாகிய சுவடியியற் புலத்தில் இலக்கியம், இலக்கணம், மருத்துவம் போன்ற துறைகளில் பல்வேறு ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டு அவை நூல்களாக வெளிவந்துள்ளன.

அவ்வகையில் சுவடியிலிருந்து நூலாக வெளிக்கொணரும் பணிஇப்புலத்தில் ஆய்வு செய்வோரால் முதன்மைப் பணியாக ஏற்கப்பட்டுப் பல நூல்கள் வெளி வந்துள்ளன. சிற்றிலக்கிய வகைகளில் அந்தாதி, சதகம், தூது, பிள்ளைத் தமிழ் போன்ற பொருண்மைகளில் பல நூல்கள் வந்துள்ளன. ஆனால் 'பள்ளு' என்ற இலக்கிய வகையைச் சேர்ந்த நூல் இதுவரை வெளிவரவில்லை. தற்போது வரஇருக்கும் நூலே இவ்வகையில் முதன்மையானது.

நாம் இலக்கிய வரலாற்றைச் சற்றுப் பின்னோக்கிப் பார்த்தால் சமூகப் பிரச்சனைகளை உள்வாங்கி இலக்கியம் படைத்த சங்கப் படைப்புகள் போன்ற ஆழமான படைப்புகள் அதற்குப் பின்வந்த காலகட்டங்களில் மிகக் குறைவாகவே காணப்படுகின்றன. பக்தி இலக்கியக் காலம் அல்லது சிற்றிலக்கியக் காலகட்டத்தில் பக்தி, துதிபாடுதல், அதீத கற்பனை, புராண, தொன்மச் செய்திகளை வெளிக் கொணர்வதில் ஈடுபாடு போன்ற பொருண்மைகளில் இலக்கியங்கள் பலதுளிர்த்தன. இக்காலகட்டத்தில்தான் பள்ளு இலக்கியம் சங்க இலக்கியம் போன்று சமூகப் பிரச்சனைகளை உள்வாங்கிப் பல படைப்புகளாக மலர்ந்தன. புறநானூற்று மறவனின் வீரத்தையும் அகநானூறு காட்டும் பெண்மையின் மென்மையையும் ஒரு சேரக் கொண்டு இலங்கியது பள்ளு இலக்கியம். எளிய மருத நில மக்களின் வாழ்க்கைப் பிரச்சனைகளையும் எண்ணக் கனவுகளையும் இன்சுவையோடு எடுத்து இயம்புவதில் வெற்றியும் பெற்றது. ஆகையால்தான் தமிழகத்தில் இவ்விலக்கியம் பற்றிக் கூறும்போது 'நெல்லை

எண்ணினாலும் எண்ணலாம் பள்ளு இலக்கியத்தை எண்ண முடியாது' என்ற மரபுத் தொடர் ஒன்று அக்காலகட்டத்தில் புழக்கத்தில் இருந்ததைக் காணமுடிகிறது. அத்தகைய படைப்பு களில் ஒன்றுதான் தற்போது அச்சு நூலாக வரஇருக்கும் தென் னிளசைப் பள்ளு.

இதுவரைப் பதிப்பிக்கப் படாத சுவடி நிலையில் உள்ள எட்டையபுரப் பள்ளு என்ற இந்நூலை அச்சு நூலாக உருவாக்கு வதற்கு ஆக்கமும் ஊக்கமும் நல்கிய வணக்கத்திற்குரிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கு உளங்கனிந்த நன்றியை வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் ஆக்கத்தின்போது சொல்லகராதி மற்றும் சிறப்புச் சொல்லகராதியை மேற்பார்த்துத் தந்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், நூல் உருவாக்கத்தில் பெரிதும் என் சுமை குறைத்த நண்பர் மொ. மருதமுத்து அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக் கொள் கிறேன்.

தான் செய்ய எண்ணிய நூலை யான் செய்ய விழைவு தாகக் கூறியவுடன் பெருமனதோடு உவந்து சுவடியை எனக்கு நல்கியவரும் சுவடித்துறைப் பொறுப்பாளருமான முனைவர் டி. மகாலட்சுமி அவர்களுக்கும், இலக்கியத்துறைத் தலைவர் முனைவர் ச. சிவகாமி அவர்களுக்கும், கேட்டபொழுதெல்லாம் வேண்டிய தரவு நூல்களைத் தந்து உதவிய நிறுவன நூலகக் காப்பாளர் திருமதி. யோகம், திருமதி. பார்வதி, திரு. வெங்கடா சலபதி ஆகியோருக்கும், உ.வே. சாமிநாதையர் நூலகத் தார்க்கும், சென்னை அரசு கீழ்த்திசைச் சுவடி நூலகத்தார்க்கும், மறைமலை அடிகள் நூலகத்தார்க்கும், பெருமைமிகு இத்தென் னிளசைப் பள்ளு என்ற ஏட்டை நிறுவனத்திற்குக் கொடையாக நல்கிய திருமதி. புஷ்பம் அவர்களுக்கும், அதற்குத் தக்க முயற்சி செய்த திரு. இரவிச்சந்திரன் அவர்களுக்கும் மற்றும் தோன்றாத் துணையாக நின்ற அனைவருக்கும் என் கரம்குவித்து வணக்கத் தையும் என் மனம்விரித்து நன்றியையும் உரித்தாக்குகிறேன்.

பதிப்பாசிரியர்

**த. பூமிநாகநாதன்**

# எட்டையபுரப் பள்ளு

## பொருளடக்கம்

# பதிப்புரை

தமிழகத்தில் ஓலைச்சுவடியைப் பாதுகாப்பதோடு அவற்றை நூலாக மக்கள் மன்றத்திற்குக் கொண்டு செல்லும் நிறுவனங்களில் தனி இடம் வகிப்பது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமாகும். இந்நிறுவனச் சுவடி நூலகத்தில் உள்ள சுவடிகள் பல, நூல்களாகியுள்ளன. தற்போது இச்சுவடியும் நூலாகும் வாய்ப்பினைப் பெற்றுள்ளது.

இச்சுவடி இந்நூலகத்தில் இந்நூல் வரிசை எண் 742 கட்டு எண் 481 நூல் எண் 742 என்ற நிலையில் அமைந்துள்ளது. இச்சுவடி முனைவர் தி. மகாலட்சுமி அவர்கள் முயற்சியால் நூலகத்திற்குக் கிடைக்கப் பெற்றது.

**ஏடு அருளினோர் வரலாறு:** நமது நிறுவனம் நடத்திய 1995-ஆம் ஆண்டிற்கான சுவடிப் பயிலரங்கில் அன்றைய மாணவராக இருந்தவரும், இன்று பல்லாவரம் வேலன் அறிவியல் கல்லூரி விரிவுரையாளராகத் திகழ்பவருமான திரு. இரவிச்சந்திரன் அவர்கள் முயற்சியால் சென்னை மாநிலக் கல்லூரி, தமிழ்ப் பேராசிரியர், திருமதி புஷ்பம் அவர்கள் மனமுவந்து கொடையாக நிறுவனத்திற்கு நல்கிய ஏடுதான், தற்போது அச்சு நூலாக உள்ள எட்டையபுரப் பள்ளு என்னும் என்னும் இவ்வேடு.

**சுவடி புற அமைப்பு:** சுவடியின் மேலும் கீழுமாகப் பாதுகாப்புக் கருதி மெருகு செய்யப்பட்ட 38.0 செ.மீ. நீளமும் 3.0 செ.மீ. அகலமும் 0.5 செ.மீ. கனமும் கொண்ட தேக்குக் கட்டைகள் இடப்பெற்றுள்ளன. அவற்றில் முறையாகத் துளையிடப் பெற்றுள்ளன. இச்சுவடி ஐம்பது ஏடுகளைக் கொண்டது. இதழ் ஒன்றின் நீளம் 37.5 செ.மீ. அகலம் 3.0 செ.மீ. ஆகும். புற அமைப்பைக் கொண்டு ஏட்டின் வயதைப் பார்க்கும்போது நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முற்பட்டது எனத் தோன்றுகிறது.

**சுவடியின் அக அமைப்பு:** சுவடியின் தொடக்கத்தில் இரு வெற்றேடுகளும் இறுதியில் ஒரு வெற்றேடும் சுவடியின் பாதுகாப்புக் கருதிக் கோர்க்கப்பட்டுள்ளன. சுவடியின் வலது இடது ஓரங்கள் காலத்தின் காரணமாக சிறிதளவு தெறித்தும் சிதைந்தும் காணப்படுகின்றன. சில இடங்களில் ஏடுகள் சற்றுக்

கிழிந்தும் உள்ளன. ஆனால் இராமபாணப் பூச்சியின் தாக்குதல் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

தலைப்பு ஏட்டில், ‘எட்டையபுரம் எசமான் மகாஸ்ரீ மகாராசா அவர்கள் பேரில் பள்ளு பிரபந்தம் நன்றாக’ என்ற தொடர் இடம் பெற்றுள்ளது. இரண்டாவது ஏட்டில் காப்புப்பாடல் அமைந்துள்ளது. மூன்றாவது ஏட்டிலிருந்து நூல் தொடங்குகிறது.

ஏட்டின் இடது ஓரத்தில் வழக்கம்போல் ‘நன்றாக குரு வாழ்க குருவே துணை’ என எழுதப்பட்டுள்ளது. இதழ் தோறும் தமிழ் எண்கள் வரிசை எண்களாகக் கொடுக்கப் பட்டுள்ளன. இச் சுவடியில் நூல் 50 ஏடுகளில் முழுமையாகக் கூறப்பட்டுள்ளது. இதழ் ஒன்றுக்கு ஒருபக்கத்தில் 5 முதல் 7 வரிகள் இடம் பெற்றுள்ளன. சுவடியின் இறுதி ஏட்டில் கீழ்க்கண்ட வாசகம் காணப்படுகிறது.

> ‘‘குமாரெட்டப்ப மகாராசா அய்யனவர்கள் பேரில் பள்ளுப் பிரபந்தம் எழுதி முகிந்தது முற்றும். இந்த யேடு எழுதினேன். மேற்படி பிரபந்தம் பாடிய நாகூர் முத்துப் புலவர் மகன் ராமசாமிப் புலவர் மகன் நாகூர் முத்துப்புலவன் கையெழுத்து தேவிசகாமுண்டாக வேண்டியது.’’

**நூல் அமைப்பு:** நூலின்கண் தொடக்கம் முதல் இறுதிவரை 210 பாடல்கள் பல்வேறு யாப்புகளில் அமைந்துள்ளன. ஒவ்வொரு பாடலுக்கும் உரிய யாப்பின் பெயர் அதன் அருகிலேயே எழுதப்பட்டுள்ளன. சில பாடல்களில் மெய்யெழுத்துக்கள்புள்ளி பெறாமலும்சில பாடல்களில்பெற்றும் எழுதப் பெற்றுள்ளன. இந்நூலிற் காணும் பாவகைகள் வருமாறு:

சிந்து 154; கலிப்பா 45; ஆனந்தக் களிப்பு 5; தரு 2; தாழிசை 1; விருத்தம் 1; கொச்சகம் 1 ஆக மொத்தம் 209 அதோடு காப்புப் பாடல் சேர்த்து 210 ஆகும்.

இந்நூலிற்கான வேறு பிரதிகள் இந்நூல் ஆய்வு செய்யும்போது கிடைக்கப் பெறவில்லை. எனவே உள்ள நூலைக் கொண்டே பதிப்புப்பணி செய்யப்பட்டது.

**எழுத்துக்கள் அமைப்பு முறை :** இச் சுவடியில் எழுதப் பெற்றுள்ள எழுத்துக்களில் சில எழுத்துக்கள் கூட்டு

எழுத்துக்களாக அமைந்துள்ளன. இந்நூலில் லகர / ளகர; ளகர/ ழகர மற்றும் ரகர / றகர மாற்றங்கள் உள்ளன. பொதுவாகப் பிரதி செய்தவர் தென்பாண்டி நாட்டுக்காரராக இருப்பதால் எழுத்து மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன எனலாம்.

**பதிப்பிற் கையாண்ட முறை:** இப்பதிப்பிற் தேவை யின்றிக் கூடுதலாக இடம் பெறும் ஒற்றெழுத்துக்கள் அல்லது பிற எழுத்துக்கள் போன்றவைகள் பிறை வடிவக் குறிக்குள் இடம் பெறுமாறு அமைக்கப்பட்டுள்ளது. விடுபட்ட ஒற்றெழுத்து அல்லது பிற எழுத்துக்கள் பகர அடைப்பில் இட்டுக் காட்டப்பட்டுள்ளன.

பாடல்களில் பயின்று வரும் அரிய சொற்களுக்கு மட்டுமே அருஞ்சொற் பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது. பாடல் எண் வரிசையே அருஞ்சொற் பொருள் விளக்கம், சொல்லகராதி, சிறப்புச் சொல்லகராதி போன்றவற்றிற்கும் பின்பற்றப்பட்டுள்ளது.

முன்னோர் மொழி பொருளே யன்றி அவர் மொழியும்

பொன்னே போற் போற்றுவர் - என்று நன்னூல் காட்டும்

கோட்பாட்டிற்கேற்ப, சொற்களின் திரிந்த வடிவங்களுக் குரிய நேரான வடிவம் முறையாகக் காட்டப்பட்டுள்ளன. ஆயின் வட்டார வழக்குகள், பேச்சுமொழி சொற்கள் ஆகியவற்றின் சிறப்புக் கருதி அவற்றில் தனிக்கவனம் செலுத்திச் சொல்லகராதியில் உள்ளபடியே சொற்கள் தரப்பட்டுள்ளன. ஆனால் இவற்றிற்குரிய நேர் வடிவம் அருஞ் சொற்பொருளுரையில் தரப்பட்டுள்ளது.

இப்பள்ளு இலக்கியத்தில் நாட்டுப்புறக் கூறுகள் மிகுந்திருப்பதால் கூடியவரையில் அவற்றை வெளிக் கொணர முயற்சி செய்யப்பட்டுள்ளது. இதற்கென்றே சிறப்புச் சொல்லகராதி தயாரிக்கப்பட்டு இணைக்கப்பட்டுள்ளது. பதிப்பின்போது சீர்திருத்த எழுத்துமுறையே பின்பற்றப் பட்டுள்ளது.

பின் இணைப்பு வாயிலாக நூலுக்குத் தொடர்புடைய பல அரிய செய்திகள் திரட்டித் தரப்பட்டுள்ளன.

எடுத்துக்காட்டாக, நாயக்கர்களின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட 72 பாளையங்களின் பட்டியல், பள்ளு நூல்களின் பட்டியல், எட்டையபுரம் சமத்தானத்துடன் தொடர்புடைய புலவர்கள் பட்டியல், எட்டையபுர மகாராசா வேங்கடேசுவர யெட்ட பூபதி மீது பாடப்பெற்ற சில தனிப்பாடல்கள் போன்றவை வரலாற்று முக்கியத்துவம் கருதித் தொகுத்துச் சேர்க்கப்பட்டுள்ளன.

இவையன்றி, பாடற் முதற்குறிப்பு அகராதி, துணைநூற் பட்டியல் முதலியனவும் இடம் பெற்றுள்ளன. இந்நூலுக்குச் சிறப்பு சேர்க்கும் வாயிலாக முன்னுரை ஒன்றும், நூலைப் பற்றித் தனியாக என் ஆய்வுரையும் சேர்க்கப் பட்டுள்ளன.

தமிழ் ஆர்வலர்களும், பெரியோர்களும் ஆசிரியப் பெருமக்களும் அன்னப் பறவை போல் குறை மறந்து, நிறை ஏற்று மகிழ்வாராக. முன்னோர் செய்த பல்வேறு நூல்களைத் தன் அணிகலனாக ஏற்று மகிழும் தமிழ் அன்னை இதனையும் ஏற்று அருள்பாலிக்க இறைவனை வேண்டுகிறேன்.

**பதிப்பாசிரியன்**

# ஆய்வுரை

## தமிழிற் சிற்றிலக்கியம்

''எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே
உன்சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே''

என்று இன்றும் தமிழ் மக்கள் அனைவரும் வணங்கும் படியான பேற்றினைப் பெற்ற நம் தமிழ் மொழியின் இலக்கியச் செல்வம் அளப்பரியது. பேரிலக்கியம் சிற்றிலக்கியம் என்ற வகையில் அதன் பொருண்மைகளின் வீச்சினை அறியலாம். உரைநடை வழியாகவும், செய்யுள் வடிவமாகவும் தமிழ் இலக்கியங்கள் சொல்லப்பட்டிருப்பதை நாம் அறிவோம். இதனில் முற்காலத்தில் செய்யுள் நடையே இலக்கியத்திற்கு ஏற்ற செந்நெறி என்ற வகையில் பேரிலக்கியங்களும் சிற்றிலக்கியங்களும் செய்யுளிலேயே எழுந்துள்ளன.

செய்யுட்குரிய அணியிலக்கணம் வகுத்துரைக்கும்போது, தண்டியாசிரியர் தமது நூலான தண்டியலங்காரத்தின் தொடக்கத்தில்,

''செய்யுள் என்பவை தெரிவுற விரிப்பின்
முத்தகம் குளகம் தொகை தொடர்நிலையென
எத்திறத் தனவும் ஈரிரண்டாகும்''[1]

என விளக்குகிறார். இவற்றுள் இறுதியில் குறிக்கப்பட்ட 'தொடர்நிலைச் செய்யுள் என்பது பெருங் காப்பியமும் சிறு காப்பியமுமாகவுள்ள இலக்கியங்களே. தொடர்நிலைச் செய்யுள் என்பது பொருள் தொடர்நிலை, சொல் தொடர்நிலை என இருவகைப்படும். அவற்றைத் தண்டியாசிரியர் தம் நூலில் சிறப்புற விளக்கியுள்ளார். பெருங்காப்பியமும் சிறு காப்பியமு மாக வரும் நூல்களைப் 'பொருள் தொடர்நிலை' என்கிறார். அந்தாதி, கலம்பகம் போன்றவற்றை, 'சொல் தொடர்நிலை' எனப் பகுத்துள்ளார். பொதுவாக நோக்குவோமேயானால் பெருங்காப்பியம் ஒழிந்தவற்றைச் சிறுகாப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் எனக் கொள்ளலாம்.

இதுபற்றிப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை **திராவிட மொழிகளின் ஆராய்ச்சி** என்னும் தம் நூலுள் மொழி இலக்கியம் பற்றிய ஆராய்ச்சிகள் எவ்வெம் முறையில் பல்கிப் பெருகுதல் வேண்டும் என்பது குறித்து இரு அட்டவணைகளின்

வாயிலாகத் தெளிவுபடுத்தியுள்ளார். அவற்றுள் இலக்கியம் பற்றிய பாகுபாட்டில் உள்நிகழ்ச்சி, புறநிகழ்ச்சி பற்றியன என இருபெரும் பாகுபாடு செய்துள்ளார். காதல், தியானம், நீதி, பக்தி, கலையுணர்ச்சி முதலியவற்றை அகநிகழ்ச்சி பற்றியன என வகுத்துள்ளார். புறநிகழ்ச்சி பற்றி எழும் இலக்கியங்களை மக்கள் வாழ்க்கைச் செயலை ஒட்டியவை எனவும் இயற்கை எனவும் இருவகைப்படுத்துகின்றார். நாடு, மக்கள், அரசியல், சமூக வரலாறுகள் கதைப் பாட்டுகள், பிரபந்தங்கள், நாடகங்கள், நவீனங்கள், சிறுகதைகள் எல்லாம் மக்களின் புறவாழ்க்கையுடன் ஒன்றி வருவன என்பது அவர்தம் கணிப்புரை.

பொதுவாக, தமிழில் நூல் என்பது எல்லாவகையான பொருண்மைகளிலும் எழுந்த எல்லாவகை நூல்களையும் சுட்டும் பொதுப்பெயராக இன்று வழங்கி வருகின்றது. ஆனால் பண்டை நாளில் இலக்கண நூல்களைச் சுட்டுவதற்கே இச்சொல் பயன்பட்டுள்ளது. இலக்கியம் என்று இப்பொழுது பேசப்படும் நிலையில் உள்ளவற்றைச் செய்யுள் என்று குறித்தனர். பாட்டு என்ற பெய்ராலும் கூட செய்யுள் வழங்கப்பட்டது. ஆனால் வடமொழியில் நூல் என்பது பிரபந்தம் என்ற சொல்லால் குறிக்கப்படும். அதுவே பெரும்பாலும் சிற்றிலக்கியத்தைக் குறிக்க அக்காலக் கட்டத்தில் தமிழகத்தில் பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இலக்கியங்களைப் பிரபந்தம் என்பது பிற்பட்ட வழக்கே. நாலாயிரத் திவ்விய பிரபந்தம், ஆர்த்திப் பிரபந்தம், அட்ட பிரபந்தம், தேசிகப் பிரபந்தம் என்னும் வழக்குகளைக் கொண்டு இவ்வட சொல்லைத் தமிழகத்தில் பழக்கத்திற்குக் கொண்டுவந்தவர்கள் வைணவ சமயத்தாரே என்பது பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை அவர்கள் துணிபு. இதுபற்றி அவர் கூறும்போது, உரிச்சொல் என்றதன் இடத்தை நிகண்டு என்னும் வடசொல், தனதுரிமை ஆக்கிக்கொண்டது போன்று சிறுகாப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் என்னும் பொருளில் பிரபந்தம் என்பது பெருவழக்காயிற்று' எனக் கூறுவார்[2]. அடுத்து இதுபற்றிப் பேராசிரியர் ந.வீ. செயராமன் கூறுவதும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. அது வருமாறு: 'தமிழில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, காப்பியங்கள், பக்தி நூல்கள் ஆகியன இலக்கியம் என்னும் சொல்லால் குறிப்பிடப் பெற்றமையால் அந்தாதி, சதகம், பிள்ளைத்தமிழ், பரணி

போன்ற இலக்கியங்கள் எழுந்த காலத்தில் அவற்றைக் குறிக்கப் பிரபந்தம் என்னும் வடசொல் பயன்படுத்தப் பெற்றது. பின்னர், பிரபந்தம் என்னும் சொல், இலக்கியம் என்பதையே குறிப்பது என்ற பொருளுணர்ச்சியின் விளைவாக அந்தாதி முதலானவற்றைச் சிறு பிரபந்தங்கள் அல்லது சில்லறைப் பிரபந்தங்கள் என்று அடை கொடுத்து வழங்கும் வழக்காறு ஏற்பட்டது. பின்னர், தனித்தமிழாட்சி வளர்ச்சியுற்ற காலத்தில் சிறுபிரபந்தங்கள் என்ற சொல்லால் குறிப்பிடப்பெறும் அந்தாதி முதலானவற்றைச் சிற்றிலக்கியங்கள் எனக் கூறும் வழக்கு ஏற்பட்டு நிலை பெற்றது.'[3]

தனக்கொரு நிலையான பெயரைப் பெறுவதில் பெரும் போராட்டத்தைக் கண்ட சிற்றிலக்கியம், இறுதியில் சிற்றிலக்கியம் என்ற பெயரில் நிலை பெற்றதைக் கண்டோம். இதுபோன்றே இதன் வகைகளை ஆராய முனைந்தோர் பல்வேறுவிதமான கருத்துக்களை முன்வைத்தனர். அவ்வகையில் சிற்றிலக்கியத்தின் வகைகள் தொண்ணூற்றாறு என்று பட்டியல் இட்டனர். இதுபற்றி ஈண்டு விளக்குவது ஏற்புடைத்ததாக அமையும்.

இலக்கிய வரலாற்றைப் பின்நோக்கிப் பார்ப்போமே யானால் சங்க காலத்தில் மேற்கணக்கு நூல்கள், அகம், புறம் என்ற பொருண்மைகளின் வழி தொகுக்கப்பட்டன. சங்கம் மருவிய காலத்தில், அகம், புறம் என்பவற்றுடன் நீதிக்குத் தனியிடம் கொடுத்து அதனையும் சேர்த்து பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் வகைதொகை செய்யப்பட்டுத் தொகுக்கப் பட்டன.

ஆகவே, சங்ககாலம் மற்றும் சங்கம் மருவிய காலத்தில் பல்வேறு புலவர்கள் செய்த இலக்கியப் பணிகள் மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்ற வகையில் முப்பத்தாறு நூல்களே நமக்கு இன்று கிடைக்கின்றன. இதற்குப் பின் எழுந்த காப்பியக் காலத்தில் பொருண்மை நோக்கில் பெருங்காப்பியங்கள், சிறுகாப்பியங்கள் என்ற நிலையில் வகைப்படுத்தப்பட்டு பெருங்காப்பியங்கள் ஐந்து, சிறுகாப்பியங்கள் ஐந்து என்று தொகுக்கப்பட்டன. அதன்பின் புராண இலக்கியங்கள் எழலாயின. இவற்றையும் அவற்றின் பொருண்மை கொண்டு புராணம் மற்றும் தல புராணங்களாக வகை செய்யப்பட்டு, புராணங்கள் பதினெட்டு என்று தெரிவு செய்யப்பட்டன. தலபுராணங்கள் எண்ணிக்கைக்கு விஞ்சி அமைந்தன. பக்தி

இலக்கியக் காலத்தில் சமய அடிப்படையில் அவ்வச் சமயச் சார்பு நோக்கி இலக்கியங்கள் வகைதொகை செய்யப்பட்டன. இதனைத் தொடர்ந்து எழுந்த சிற்றிலக்கியக் காலக் கட்டத்தில் தான் பல்வேறுபட்ட பொருண்மைகளிலும் யாப்பு முறைகளிலும் வகைதொகை செய்யப்பட்டு நூல்கள் பல்கிப் பெருகின.

இவ்வாறு பல்கிப் பெருகிய இலக்கியங்களை வகை தொகை செய்ய வேண்டிய கடப்பாடு தமிழ் இலக்கண அறிஞர்களின்பால் அமைந்தது. அவ்வகையில் பல்வேறுபட்ட இலக்கண நூல்கள் இச்சிற்றிலக்கியங்களை வகைதொகை செய்வதில் முனைந்து பல்வேறுபட்ட முடிவுகளைக் கண்டன. அவ்வாறு அமைந்த இலக்கண நூல்களின் வளர்ச்சியைச் சற்றுச் சுருக்கமாக ஈண்டுக் காண்போம்.

தமிழில் கிடைக்கப் பெறும் தொன்மையான இலக்கண நூலாக அமைவது தொல்காப்பியமே ஆகும். இதனில் தொல்காப்பியர் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று பெரும் பிரிவுகளில் தமிழ் இலக்கணத்தைக் கூறியுள்ளார். எழுத்துக்களின் இலக்கணம் பற்றி எழுத்ததிகாரத்திலும் அதன் பயன்கொண்டு அமையும் சொற்களின் இலக்கணம் சொல்லதிகாரத்திலும், நுவலும் சொற்களால் உணர்த்தப்படும் பொருண்மைக் கூறுகள் பற்றிப் பொருளதிகாரத்திலும் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். **தொல்காப்பியம்** பொருளதிகாரத்தில் அமைந்த செய்யுளியல் என்ற பகுதியில்தான் செய்யுளின் வரைமுறை பற்றிப் பேசும் யாப்பிலக்கணம் என்பது குறித்தும், கவிஞனின் கற்பனைக்கு அணி செய்யும் அணியிலக்கணம் என்பது குறித்து உவமையியலிலும் பேசுகிறார். அவ்வகையில் தொல்காப்பியம் மூன்று அதிகாரத்தில் ஐவகை இலக்கணப் பொருண்மைகளைக் கூறுவதைக் காணலாம்.

**நான்வகை:** எழுத்து, சொல், பொருள் என்ற மூவகைகளுடன் 'யாப்பு' என்ற ஒன்றையும் கூட்டித் தமிழ் இலக்கணம் நால்வகைப் பகுப்புகளை உடையது என்ற நிலை தொல்காப்பியத்திற்குப் பின்னே உருவாகியது. **இறையனார் களவியல், சிறுகாக்கைப் பாடினியம்** ஆகியன இக் கொள்கையுடைன. காக்கைப் பாடினியம் இதுபற்றிக் கூறும்போது, 'நாட்டில் வழக்கம் நான்மையான் கடைக்கண் யாப்பினதிலக்கணம் அறைகுவன் முறையே' என்ற குறிப்பின் மூலம்

நால்வகைக் கூறுகள் இலக்கணத்தில் காக்கைப் பாடினியார் ஏற்றுக்கொண்டார் என்பது தெளிவாகிறது. ஆகவே, இவர் காலத்தில் பேசப்பட்ட நான்மைக்கூறு கோட்பாடு கி.பி. எட்டாம் நூற்றாண்டு வரையிலும் தமிழுலகில் நிலவியது[4] என்ற ந.வீ. செயராமன் அவர்கள் கணிப்பு ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

**ஐவகைமை:** தமிழ் இலக்கணக் கூறுகளை ஐந்தாகக் கொள்ளும் மரபு பிற்காலத்திலே ஏற்பட்ட ஒன்றாகும். ஐந்திலக்கணங்களையும் விரித்துக் கூறும் முழு நூல்களாக **வீரசோழியம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சாமிநாதம்** ஆகியன தோன்றின. இவை எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற தமிழ் இலக்கணத்தின் ஐவகைக் கூறுகளையும் விளக்கி நிற்பனவாகும்.

இவற்றுள் வீரசோழியம் கி.பி.11ஆம் நூற்றாண்டில் புத்தமித்திரன் என்பவரால் இயற்றப்பட்டது. எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம், யாப்பதிகாரம், அலங்காரம் என்ற ஐவகை இயல்களால் இந்நூல் ஐந்திலக்கணம் பகர்கின்றது. கி.பி.19 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த முத்து வீரியரால் எழுதப்பட்ட முத்துவீரியம் முன்னது போலவே ஐந்து பிரிவுகளில் ஐந்திலக்கணங்களை இயம்புகிறது. இந்நூலின் சமகாலத்தில் எழுந்த சாமிகவிராயர் என்பவரால் செய்யப்பட்ட சாமிநாதம் என்ற நூலும் முன்னது போன்ற அமைப்பை உடையதாகும்.

**அறுவகை இலக்கணம்:** தமிழின் ஐந்திலக்கணக் கூறுகளுடன் 'புலமை' என்பதையும் ஒரு கூறாகக் கூட்டி **அறுவகை இலக்கணம்** என்ற பெயரால் நூலொன்று யாத்தவர் கௌமார முனிவர் என்றும் முருகதாசர் என்றும் போற்றப்படும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார்.

இவ்வாறாகத் தமிழ் இலக்கணக் கொள்கை மூன்று, நான்கு, ஐந்து, ஆறு என்ற வகையில் காலந்தோறும் கண்ட வளர்ச்சிப் பரிமாணத்தில் ஓர் உண்மையை நாம் அறியலாம். சிற்றிலக்கியங் களைப் பற்றி இலக்கணவியலாரைச் சிந்திக்கத் தூண்டிய காலம், இலக்கணத்தை ஐந்து கூறுகளாகப் பகுத்துக் கண்ட காலமே என்பதாகும். அவ்வகையில் ஐந்தாவதாக இடம் பெற்ற யாப்பு பற்றிய சிந்தனையில் இலக்கணவியலார் சிற்றிலக்கியத்தை வகைதொகை செய்த பாங்கினை இனிக் காண்போம்.

தமிழ் இலக்கணக் கொள்கை காலந்தோறும் பெற்ற பரிமாண வளர்ச்சியில் ஒரு கருத்து முக்கியமானதாக அமைகிறது. அஃதாவது இலக்கியத்தின் பொருண்மையையும் வடிவத்தையும் பெரும்பாலும் பொதுவான நோக்கிலேயே அப்பரிமாண வளர்ச்சி தீர்மானம் செய்தது என்பதாகும். ஆனால், சிற்றிலக்கியங்கள் பற்றிய சிந்தனை ஏற்பட்ட காலத்தில் இலக்கணவியலார் ஆழ்ந்த கண்ணோட்டம் காட்டியதன் காரணமாகச் சிற்றிலக்கிய வகைகள், இலக்கண வரையறைகள் குறித்து மேலும் நூல்கள் பல எழுந்தன.

பொதுவாகக் கூறுவோமேயானால் 'யாப்பு' என்னும் இலக்கணத்தாய் ஈன்றெடுத்த 'பாட்டியல்' என்ற சேய்தான் இலக்கிய வகைகளை வகைப்படுத்தி முறைப்படுத்தியது. யாப்பிலக்கணம் விரிந்த நோக்கில் வளர்ச்சியுற்றபோது அந்த வளர்ச்சி நிலையில் பாட்டியல் இலக்கணம் தனித்தெழுந்தது. இப்படிக் கிளைத்து எழுந்த பாட்டியல் வளரத் தொடங்கிய காலம் கி.பி.7ஆம் நூற்றாண்டு எனலாம். எனினும் கி.பி.12ஆம் நூற்றாண்டில்தான் முழுமையான பாட்டியல் நூலின் தோற்றத்தைக் காண இயலுகிறது. கி.பி.12ஆம் நூற்றாண்டில்தான் தனி இலக்கண வகையாக உருப்பெற்ற பாட்டியல் **பன்னிரு பாட்டியல்** என்னும் நூலின் உருவில் வளரத்தொடங்கி, கி.பி.19ஆம் நூற்றாண்டில் எழுந்த **முத்துவீரியம், சாமிநாதம்** என்னும் பாட்டியல் நூல்களின் பெயரால் பாட்டியல் இலக்கணம் என நிலைபெற்றது.

தமிழிலுள்ள சிற்றிலக்கிய வகைகளின் இலக்கணத்தை வரையறுத்துக் கூறும் பாட்டியல் நூல்கள் பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், பிரபந்த மரபியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், பிரபந்த தீபிகை, சுவாமிநாதம் ஆகியன. இவையன்றி சதுரகராதி, அபிதான சிந்தாமணி, தொகையகராதி ஆகியவற்றுள்ளும் சிற்றிலக்கிய வகைகளின் விளக்கங்கள் அமைந்துள்ளன.

இப்பாட்டியல் நூல்கள் உணர்த்தும் செய்திகள் இருவகை. ஒன்று, இருவகைப் பொருத்தங்களை விளக்குதல்; பிறிதொன்று இலக்கியங்களுக்குரிய இலக்கணங்களை உணர்த்துதல் ஆகும்.

### தொண்ணூற்றாறு வரையறையும் பாட்டியல் நூல்களும்

பொதுவாகத் தமிழகத்தில் சைவ சமயத் தத்துவங்களைத் தொண்ணூற்றாறு எனக் கூறும் வழக்கு உண்டு. அதுபோல

சமய சாத்திரக் கோவையைத் தொண்ணூற்றாறு எனக்கூறும் வழக்கும் எழுந்திருக்கலாம் எனக் கருத முடிகிறது.

தொண்ணூற்றாறு எண் வரையறை எல்லாப் பாட்டியல் நூல்களிலும் ஒருமித்துக் கூறப்படவில்லை என்பது முதலில் அறிந்துகொள்ள வேண்டிய செய்தியாகும். தொண்ணூற்றாறு என்ற வரையறையைச் சுட்டும் பாட்டியல் நூல்கள் **பிரபந்த மரபியல், பிரபந்த தீபிகை** என்ற இரண்டு மட்டுமே. பிற பாட்டியல் நூல்களில் இந்த எண் வரையறை சுட்டப் படவில்லை.

அந்தாதி, உலா, ஊசல், ஏசல், கலம்பகம் என்பன போன்று 'பள்ளு' என்பதும் சிற்றிலக்கிய வகைகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. இவ்வகை இலக்கியம் கி.பி.17 ஆம் நூற்றாண்டில் தோன்றிய நாடக இலக்கிய வகைகளுள் ஒன்றாகும் என வாழ்வியற் களஞ்சியம் கூறுகிறது. 'நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது' என்பது தமிழகத்தில் உலவி வரும் பழமொழிகளில் ஒன்று. இப்பழமொழியின் வாயிலாகத் தமிழகத்தில் பள்ளு இலக்கியம் பெற்றிருந்த செல்வாக்கினை உணரலாம். ஏனெனில், மக்கள் செல்வாக்கு இல்லாத எந்த ஓர் இலக்கியமும் பல்கிப் பெருகி வளர்ச்சியடைவது அரிது என்பது இலக்கிய வரலாறு காட்டும் உண்மை. இத்தகைய சிறப்புகளை உடைய பள்ளு இலக்கியம் பொதுவாக, மருதநில மக்கள் அல்லது உழவுத் தொழிலைத் தலையாய தொழிலாகக் கருதும் மக்களின் பழக்க வழக்கங்கள், ஒழுகலாறுகள், வேளாண்மைச் செயல் முறைகள், பள்ளர்களிடையே வழங்கும் சமுதாயக் கோட் பாடுகள், மரபுகள், அவர்கள் குடும்ப அமைப்பு முதலாய பல்வேறு செய்திகளைப் பற்றி எடுத்தியம்பும் இலக்கியமாகும்.

பள்ளு என்னும் சொல் 'பள்' எனும் சொல்லடியாகப் பிறந்தது. இப்பள் ஒரு மக்கள் இனத்தையும், நாடகப் பிரபந்த வகையையும், காளி முதலிய தெய்வங்கட்குப் பலி கொடுக்குங் காலத்துப் பாடப்படும் பண்வகையையும் குறிக்கின்றது[5] எனக் கூறுவார் பேராசிரியர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள்.

பள்ளு என்பது, பிரபந்த வகைகளில் ஒன்றைக் குறிப்பதும், அவ்வகையின் முதல் நூல் என்று கருதப்படுகின்ற **திருவாரூர்ப் பள்ளு**வில் சொல் நிலையிற் பயில்வதும் சுட்டத்தக்கன.

சிற்றிலக்கியங்களின் இலக்கணம் கூறும் பன்னிரு பாட்டியல் முதலான பாட்டியல் நூல்கள் 'பள்ளு' என்னும் இலக்கிய வகையைப் பற்றிக் குறிப்பிடவில்லை. ஆனால் 'உழத்திப் பாட்டு' என்னும் ஓர் இலக்கிய வகையின் இலக்கணங் கூறுகிறது. அரசனை வாழ்த்தி உழவுத்தொழிலைக் கூறும் பத்துப் பாட்டுக்களைக் கொண்டது உழத்திப் பாட்டு எனப்படும்.

பன்னிரு பாட்டியலுக்குப் பின்னர்த் தோன்றிய நவநீதப் பாட்டியலில் மிகைச் செய்யுளாகக் காணப்படும் நான்கு பாடல்களில் உழத்திப் பாட்டின் இலக்கணம் உரைக்கப் பட்டுள்ளது. அப் பாடல்கள் வருமாறு:[6]

கடவுள் வணக்கம் உழத்தியருங் குடும்பன் வரலொன்று
நடைமுறை நாடுவளங் குயில்கூ மழைக்காங் குறியோர்ப்
படுமாறு வரற்சிறப்புட்டுறைத் தலைவன் வரற்கூப்
படுமவ னன்னாள் உரப்பல் வெளியாம் பண்ணைச் செயலே.

வினாச் சொலல் ஆயர் வருவிக்க வரல் தகை முதலாள்
தனாதுரைக் கேட்டுக் குடும்பன் கிடையிருந்தா னெனவந்
தனாற் றொழு மாட்டப் புலம்பல் முறப்பள்ளி
கூழ்கொண்டு வரல்
சொனானவள் மன்னித்திற் கேட்க வேண்டற்கு மறுத்திடலே.

சூளவனை மீட்பவனைப் பணிவித் துழவருழக்
காளை வெருட் பாளை பாயப் புலம்பல் எழுந்து வித்தல்
ஆளத் தலைவற் குணர்த்தல் நடல்விளை செப்பம் செய்நெல்
நீள அளத்தல் முதற்பள்ளிகூ வேசல் மூட்டவையே.

இவ்வம யங்களிற் பாட்டுடைத் தலைவன் பெருமை
யாங்காங்
கொவ்விய சிந்து விருத்தம் விரவிவரத் தொடர்பு
செவ்விதிற் பாடுமது உழத்திப் பாட்டு பள்ளு மென்பர்
நவ்வி எனக் கண்மடவீர் பிறர்தம் நாட்டுவரே.

மேற்கண்ட நான்கு பாடல்களிலும் உழத்திப்பாட்டின் இலக்கணம் உரைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். இதைப் பின்பற்றிச் சதுரகராதி ஆசிரியர் வீரமாமுனிவரும் உழத்திப் பாட்டு என்னும் இலக்கியத்தின் இலக்கணமாக நவநீதப்

பாட்டியல் மிகை நூற்பாக் கருத்தினையே கூறியுள்ளார். பள்ளு இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள நிகழ்ச்சிகளே இப்பகுதியில் கூறப்பட்டுள்ளன. இதனால் உழத்திப் பாட்டு என்பதும் பள்ளு என்பதும் ஒன்றே என்ற தவறான முடிவுக்கு இது அடிகோலியது. குறத்திப்பாட்டு என்னும் இலக்கியவகை குறவஞ்சி இலக்கியம் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்ததைப் போன்று உழத்திப்பாட்டு என்னும் இலக்கியத்தின் இலக்கணம், பள்ளு இலக்கியம் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்தது என்பதே பொருத்தமானதாக அமையும்.

'கோயிலொழுகு' என்பது திருவரங்கம் பெரிய கோயிலின் ஒழுகலாறுகளை விரித்துரைக்கும் நூலாகும். இக்கோயிலில் தொண்டு செய்துவந்த இறைநேயரான வரந்தரும் பெருமாளரையர் என்பார் பறைச்சேரி யொன்றிற்குச் சென்று அங்கு நடைபெற்ற பள்ளுப்பாட்டு, பறைப்பாட்டு முதலிய பாடல்களிலும், ஆட்டத்திலும் மயங்கி, அங்கேயே தங்கிவிட்டார் எனவும் பின்னர் திருவூறல் விழாவின்போது அவ்வடியாரின் பெருமையை இறைவன் அனைவருக்கும் உணர்த்தியதோடு மட்டுமன்றித் தாமும் பள்ளுப் பாட்டும் பறைப் பாட்டும் கேட்பதை ஆண்டுதோறும் நடைபெறும் கோயில் விழாவில் ஒரு அங்கமாக்கினார் எனவும் ஒரு வரலாற்று நிகழ்ச்சியைக் கோயிலொழுகு நூலின் மூலம் அறியலாம்.[7]

உழவர்களின் தொழில் வாழ்வை மையமாகக் கொண்டு எழுந்த இவ் இலக்கிய வகை, முழு வடிவமைப் பினை மிகப் பிற்காலத்தே பெற்றபோதும் உழவு-உழவர் தொடர்பான பாடல் நிலைகள் இதற்கு முன்னையே இருந்ததனை முந்தைய இலக்கணங்களும் இலக்கியங்களும் உணர்த்துகின்றன.

எந்த ஓர் இலக்கியமும் பரிணாம வளர்ச்சிக்கு உட்பட்ட பின்னரே மக்கள் மனத்தில் செவ்விய இலக்கியமாகவோ அல்லது நாட்டுப்புற இலக்கியமாகவோ திகழ்கிறது. அவ்விலக்கியம் காலந்தோறும் பெற்றுக் கொள்ளும் கொண்டு கொடுப்புகளைக் கொண்டே அவ்விலக்கியத்தின் தரத்தை அறிந்து மக்கள் தங்கள் மனத்தை நிலைப்படுத்திக் கொள்ளுகின்றனர். அவ்வகையில் பள்ளு இலக்கியம் சிற்றிலக்கிய காலத்திற்கு உட்பட்டு அதன் வகைகள் 96இல் ஒன்றாக விளங்குகிறது என்பதனை முன்னரே கண்டோம்.

பள்ளு இலக்கியங்கள் தமிழ்நாட்டில் குறிப்பாகத் தென்பாண்டி நாட்டில்தான் மிகுத்துக் காணப்படுகின்றன. தமிழகத்தைப் புவியியல் நோக்கில் நீள்வயமாகப் (தென்வடலாக) பிரிப்போமேயானால் மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். மேற்குப் பக்கமாகிய பகுதி, மலை சார்ந்த குறிஞ்சிப் பகுதியாகவும், மையப் பகுதி வயல் சார்ந்த மருதநிலப் பகுதியாகவும், அதற்கடுத்த பகுதி நெய்தல் நிலப்பகுதியாகவும் அமையும். இதில் நாஞ்சில் நாடு நீங்கிய தமிழகத்தின் மையப் பகுதியைப் பார்த்தோமேயானால் தாமிரபரணி மற்றும் வைகை வளஞ் செய்யும் தென்பாண்டி நாட்டு மருத நிலப் பகுதியையும் அதற்கு வடக்கே காவிரி, தென்பெண்ணை, பாலாறு வளஞ் செய்யும் பிற வயல் சார்ந்த பகுதிகளையும் காண முடியும்.

சங்கம் வளர்த்து செந்தமிழுக்கு வித்திட்ட பாண்டி நாடுதனில் தென்பாண்டி நாடு ஓர் அங்கம் என்பதால் பல்வேறு இலக்கியங்கள் பூத்துக் குலுங்கும் சோலையாக அந்நாடு விளங்குகிறது. அவ்வகையில் வேளாண் மக்களின் வாழ்க்கையை விதந்து கூறும் மக்கள் இலக்கியமாகப் பள்ளு இலக்கியங்கள் பல இங்கு எழுந்ததில் வியப்பு ஒன்றுமில்லை. இத்தகைய தேசிய தொழிலின் சிறப்பு கருதியே ''மேழிச் செல்வம் கோழை படாது'' என்பார் ஔவைப் பிராட்டி.

''உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின் செல்பவர்'' (குறள்.1033)

என வேளாண்தொழிலுக்குச் சிறப்புச் செய்வார் வள்ளுவர். வேளாண் மக்களின் சமூகக் கோட்பாடுகள், மரபுகள், அவர்கள் குடும்ப அமைப்பு, பழக்க வழக்கங்கள், ஒழுகலாறுகள், வேளாண்மைச் செயல்முறைகள் முதலான பல்வேறு செய்திகளை எடுத்தியம்பும் பணிகளைச் செய்கின்றன இப்பள்ளு இலக்கியங்கள். இத்தகைய இலக்கியத்தின் தோற்றுவாய்க்கான அடிப்படைக் கூறுகள் சங்க இலக்கியத்தில் எவ்வாறெல்லாம் விரவிக் கிடக்கின்றன என இங்குக் காண்போம்.

**மேற் கணக்கும் மேழித் தொழிலும்**

உலகிலேயே தமிழ் இலக்கியம் ஒன்று தான் புவியியலை ஒட்டி இலக்கணம் அமைத்துக் கொண்டது. காலத்தால் முற்பட்ட தொல்காப்பியம் என்னும் இலக்கண நூல்

இத்தன்மையது. இந்நூலைச் செய்த தொல்காப்பியர் முதல், கரு, உரி என நிலத்தையும், பொழுதையும், பிற இனங் களையும் கொண்டுகூட்டி தனது இலக்கணக் கோட்பாட்டை வகுத்துத் தந்துள்ளார். மொழிக்கு இலக்கணம் செய்ய வந்த புலவர்பெருமான், தமிழர்தம் பண்பாட்டைத் தமிழர்கள் கூறிய வழியினின்று வகைப்படுத்த விழைந்தபோது முன்னர் சொன்ன மும்மைக் கோட்பாட்டின்படி (முதல், கரு, உரி) நின்று உலகம் வியக்கும்படியான விந்தையைச் செய்தார்.

அன்றைய சங்ககாலப் புலவர் பெருமக்கள் மன்னர் மாண்பு, கொடைமறம், வீரம், காதல், பண்பாடு போன்ற வற்றைப் பேசுவதற்குத் தாம் வாழுகின்ற மண்ணை (நிலத்தை)த் துணையாகக் கொண்டனர். இதனை உணர்ந்த காரணத்தால்தான் தொல்காப்பியரும் நிலத்தை (தாம் வாழும் மண்ணை) குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப் புவியியல் கோட்பாட்டின் அடிப்படையில் ஐந்தாக வகுத்துக் கொண்டு 'அன்பின் ஐந்திணை' என்ற பொருண்மையில் தாம் சொல்ல வந்தவற்றைச் சொல்லிச் செல்கின்றார்.

பொதுவாக, உலகில் நிலப் பிரபுத்துவம் ஏற்பட்ட காலத்தில் கடவுளுக்கு அடுத்து மக்களைக் காக்கும் பணியைச் செய்யும் மன்னர்களே கடவுளர்களாகப் போற்றப்பட்டனர். ஆகையால்தான்,

> **''நெல்லும் உயிரன்றே, நீரும் உயிரன்றே**
> **மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்''** (புறம். 186:1-2)

எனப் புறநானூறு பேசுகிறது. 'ஆறு போவது கிழக்கு அரசன் சொல்வது வழக்கு' என்ற மரபுத் தொடரும் மேற்சொன்ன கருத்தை உறுதி செய்வதாக அமைகிறது. தம் மன்னர்களைப் பற்றிச் சொல்லும்போது அவர்களை அடையாளம் சுட்டிக் காட்டுவதற்குக் கொடி, தார், முரசு, நாடு என்ற நான்கு பொருண்மைகளின் வழியாகக் கூறுவர். இதனில் நாடு என்பது இடவாகு பெயராக அமைந்து அங்கு வாழும் மக்களைச் சுட்டும். முன்னர் சொன்னதுபோல மன்னர்கள் தங்களை மன்பதை காக்கும் மாண்புடைய தெய்வங்களாகவே எண்ணிக் கொண்டனர். அதனால்தான் கற்றுத் துறைபோகிய புலவன் வறுமை உற்ற காலத்து, சேய் தன் தாயிடம் கேட்பது போலப் புரவலனிடம் தன்னிலை எடுத்துக் கூறிப் பசிப்பிணி நீக்க வேண்டுகிறான். அப்படி வேண்டிப்பாடும் புலவன், தான்

எண்ணிய கருத்தை வலியுறுத்த எண்ணும்போது தன் பசி போக்க மட்டும் வழி கூறித் தன் புலமையைச் சிறுமைப் படுத்திக் கொள்ளாது, பொதுவுடமைச் சிந்தனையோடு மன்பதையின் உறுபசி அகல வழி என்ன என்று விதந்து கூறும் காலத்து 'மேழித் தொழில் மேன்மைப்பட வேண்டும்' என்றும், வேளாண் மக்கள் காக்கப்பட வேண்டும் என்றும் அடிக் கோடிட்டுக் காட்டுவதைச் சங்கச் செய்யுள்களில் பல இடங்களில் காண முடிகிறது.

பள்ளு இலக்கியத்தின் அடிநாணாக விளங்கும் வயல், வயல் சார்ந்த செய்திகளுக்கு அல்லது பொருண்மைகளுக்கு இத்தகைய பாடல்களே முன்னோடி எனக் கருதலாம். சங்க இலக்கிய நூல்களான புறநானூறு, பதிற்றுப்பத்து போன்றன வீரம் பற்றிப் பேசுவதாக அமைந்தாலும், இன்றைய சமூகச் சிக்கல்களையும், பொருளாதார நலிவுகளைச் சீரமைக்கப் பயன்படும் கருத்துரைகளையும் கொண்ட பல பாடல்கள் அக்காலப் புலவர்களால் பாடப்பெற்றுள்ளன. மன்னர்கள் கூட போர் மேற்செல்வதற்கு முன், வஞ்சினம் பேசும்போது பிறநாட்டிற்கு எவ்வாறெல்லாம் சீர்கேடுகளைச் செய்ய உள்ளனர் என்பதைப் பற்றி கூறும்போது வேளாண் தொழிலைக் குறிவைத்தே பேசியுள்ளனர், என்பதைக் கீழ்வரும் பாடல் வாயிலாக அறியலாம்.

**''போர்அடு தானைப் பொலந்தார்க் குட்டுவ!**
**நின் நயந்து வருவேம் கண்டனம்; புன்மிக்கு,**
**வழங்குநர் அற்றென, மருங்கு கெடத் தூர்ந்து,**
**பெருங்கவின் அழிந்த ஆற்ற வேறுபுணர்ந்து**
**அண்ணல் மரையா அமர்ந்து இனிது உறையும்**
**விண் உயர் வைப்பின காடு ஆயின - நின்**
**மைந்து மலி பெரும் புகழ் அறியார் மலைந்த**
**போர் எதிர் வேந்தர் தார் அழிந்து ஓராயின் -**
**மருது இமிழ்ந்து ஓங்கிய நளிஇரும் பரப்பின்**
**மணல் மலை பெருந்துறைத் ததைந்த காஞ்சியோடு**
**நந்து நாரையொடு செவ்வரி உகளும்**
**கழனி வாயிற் பழனப் படப்பை**
**அழன் மருள் பூவின் தாமரை, வளைமகள்**
**குறாஅது மலர்ந்த ஆம்பல்,**
**அறாஅ யாணரவர் அவர் அகன்தலை நாடே.''**

(பதிற். 23:10-25)

நாடுகளுக்கிடையே போர் மூண்டு விடுதல் என்பது தவிர்க்க முடியாத ஒன்று போரின் போது ஆநிரை கவர்தல், கோட்டையை முற்றுகையிடல், உயிர்ச்சேதம் செய்தல் என்பது மட்டும் அக்கால மன்னர்களின் குறிக்கோளாக அமையவில்லை. பகைவரின் பாசறையை அழித்து இன்புறுவதோடு அவரது நாட்டின் பொருளாதாரத்தைச் சீர்குலையச் செய்வதும் ஒரு கடமையாகவே கருதினர். அது கருதியே மேழித் தொழிலுக்கு அடிப்படையாக விளங்கும் உழும் நிலப்பரப்பை, அது அத்தொழிலுக்கு பயன்படாதவாறு கழுதையை விட்டு நாசப்படுத்துதல் அன்றைய போர் முறையில் ஒரு மரபாகவே இருந்ததை அறிந்திருந்த பாலை கௌதமனார், பல்யானை செல் கெழு குட்டுவன் வீரத்தைப் போற்ற விழைந்தபோது, அவனும் மரபு மாறாமல் பகை நாட்டுக் கழனியிற் கழுதையைக் கட்டி உழச் செய்தான் என்றும் அதன் காரணமாக அப்பகை நாடு வளம் குன்றிப் பொருளாதார சீர்கேடு அடைந்தது என்றும் கீழ்வரும் பாடல் வாயிலாக தெரிவிக்கிறார்:

''மா ஆடிய புலன் நாஞ்சில் ஆடா;
கடாஅஞ் சென்னிய கருங்கண் யானை
இனம் பரந்த புலம் வளம் பரப்பு அறியா;
நின் படைஞர், சேர்ந்த மன்றம் கழுதை போகி,
நீ உடன் றோர் மன்னெயில் தோட்டி வையா.''

(பதிற். 25:1-5)

பதிற்றுப்பத்து, பதின்மூன்றாம் பாடலிலே இமயவரம்பன் சேரலாதனின் வெற்றிச் சிறப்பைப் பாட விழைந்த குமட்டூர் கண்ணனார், இவன் படையெடுப்பால், பகை நாட்டில் ஏற்பட்ட முன்பின் நிலைகளை எண்ணிப் பார்க்கிறார். அது பாடலாக மலர்கிறது. அதில் படையெடுப்பிற்கு முன்அப்பகை நாட்டின் மருத நிலம் எத்தனைச் சிறப்புடையதாக இருந்தது என்பதனை எத்தனை அழகாக புலவர் படைத்துக் காட்டியுள்ளார். பாடல் வருமாறு:

தொறுத்தவயல் ஆரல்பிறழ்நவும்
ஏறுபொருதசெறு உழாதுவித்து நவும்
கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல்
இருங்கண் எருமையின் நிரைதடுக் குநவும்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்

வளைதலை மூதா ஆம்பல் ஆர்நவும்
ஒலிதெங்கின் இமிழ்மருதின்
புனல்வாயிற் பூம்பொய்கை
பாடல் சான்ற பயங்கெழு வைப்பின்
நாடுகவின் அழிய நாமம் தோற்றிக் (பதிற். 13:1-10)

பகைவர் நாட்டு வயல்களின் ஆட்டுக்கிடைகள் மடக்கி யிருந்தனர். நீர் வளமோ ஆரல் மீன்கள் உகளுவதற்கு ஏற்ப நிரம்பியிருந்தது. ஏறுகள் தம்முட் பொருதமையின் விழாம லேயே வயல்கள் சேறாயின. கரும்பின் பாத்தியில் பூத்த நெய்தலானது உணவு தேடி வந்த எருமையை மேல் சென்று கரும்பை அழிக்க விடாது தம்மை விரும்பி உண்ணுமாறு தடுத்து நிறுத்துவன போன்று வளிமக்கு ஓங்கி நின்றன. வளம் கண்டு மகிழ்ந்த துணங்கை ஆடும் மகளிர் ஆடி வீழ்த்த ஆம்பல் மலர்களைப் பசுக்கள் உண்டு மகிழ்ந்தன.

பகைவர் நாடு மண் வளமும் மர வளமும் மலர் வளமும் மக்கள் வளமும் நிறைந்த நாடு. நாளும் நீங்காத புது வருவாயை யுடைய இடமகன்ற அந்நாடுகள் நின் வலியும் புகழும் அறியா வேந்தரின் பேதமையால் மக்கள் போக்குவரவற்ற பாலை நிலமாயிற்று; புல் நிறைந்து சிற்றடமுமின்றி முட்செடிகள் மண்டித் தூர்ந்தன. தமக்கே யுரிய பெரிய அழகை யெல்லாம் அவை இழந்து நின்றன. நெடுநிலை மாடங்கள் நிறைந்த அவ்வூர்கள் காட்டுப் பசுக்கள் தம் ஏறுகளுடன் கூடி உறையும் காடுகளாயின. குட்டுவ! நின்னைக் காண விரும்பி வரும் யாங்கள் அவற்றைக் கண்டோம் என்ற கருத்தில் பாலை கௌதமனார் இமயவரம்பன் சேரலாதன் மீது பாடிய பாடல் வருமாறு:

நின்னயந்து வருவேம் கண்டனம் புன்மிக்கு
வழங்குநர் அற்றென மருங்குகெடத் தூர்ந்து
பெருங்கவின் அழிந்த ஆற்ற வேறுபுணர்ந்து
அண்ணல் மரையா அமர்ந்தினி துறையும்
விண்ணுயர் வைப்பின காடா யினநின்
மைந்துமலி பெரும்புகழ் அறியார் மலைந்த
போரெதிர் வேந்தர் தாரழிந் தொராலின்
(பதிற். 23:11-17)

பகைஞர் நாட்டில் ஒரு கால், தேர் ஓடிய வயல்கள் அது ஓடிய அளவிலே சோதிப்பின் உழுதற்கென்று ஏர் படிவா

ஆயின. பன்றிகள் கிழங்கு உண்ண உழுத கொல்லைப் புனங்கள் அவை உழுத அளவிலே புழுதியாகிப் பின்பு கலப்பை செலுத்த வேண்டாவாயின. மத்துக்கள் ஒலிக்கின்ற மனைகள் அம்மத்தொலி மிகுதியால் இனிய வாத்திய ஒலிகள் ஒலியா ஆயின. இவ்வாறு வளம் செழித்தது உன் பகைவர் நாடு. உன் சினத்தின் காரணமாகத் தற்போது,

மழை பெய்யாததால் செழிப்பெல்லாம் சிதைந்தது. இது காலக் கொடுமையென்று கண்ணீர் உகுத்துக் கையைப் புடைத்தவராய் மெலிந்த நெஞ்சுடன்சிறுமை மிக்கனர் மக்கள். அவர்கள் வாழ்ந்த மனைகள் பாழானமையால் பீர்க்கு படர்ந்து கடிய காட்டு வழிகள் ஆயின. முன்பு இந்நாட்டின் வளத்தை கண்டறிந்தவர்க்கும் பழைய நிலையை நினைக்குமிடத்துத் துன்பம் பெரிதும் தோன்றும். யானும் அதற்கு நோகின்றேன் என்ற பொருளில் அமைந்த பாடல் வாயிலாக, மருத நிலத்தின் இயற்கை வனப்பை நம் கண் முன்னே நிறுத்துகிறார் பாலை கௌதமனார். பாடல் பின்வருமாறு:

தேளர் பரந்தபுலம் ஏளர் பரவா
களிறா டியபுலம் நாஞ்சில் ஆடா
மத்து உரறியமனை இன்னியம் இமிழா
ஆங்குப் பண்டுநற்கு அறியுநர் செழுவள நினைப்பின்
நோகோ யானே நோதக வருமே
பெயன்மழை புரவின் றாகிவெய் தற்று
வலமின் றம்ம காலயது பண்பெனக்
கண்பனி மலிர்நிறை தாங்கிக் கைபுடையூ
மெலிவுடை நெஞ்சினரி சிறுமை கூரப்
பீரிவர் வேலிப் பாழ்மனை நெருஞ்சிக்
காடுறு கடுநெறி யாக மன்னிய
முருகுடன்று கறுத்த கலியழி மூதூர்
உரும்பில் கூற்றத் தன்னநின்
திருந்துதொழில் வயவர் சீறிய நாடே (பதிற். 26:1-15)

**மருதநில மாட்சி**

ஒரு நாட்டின் வளத்தை விளக்கப் புலவர்கள் இயற்கை படைத்த மலை, அருவி, ஆறு, கடல் என்று மட்டும் நில்லாது ஒரு நாடு பெற்றிருக்கும் மண்ணின் வளத்தையும் கொண்டு சிறப்பித்துக் கூறுவர். மண்ணின் வளம் பற்றிப் பேசும்போது வயல் வளம் பற்றிச் சிந்திக்க வேண்டியுள்ளது. அவ்வாறு

சிந்திக்கும்போது வயலின் சிறப்பை விளக்க அங்கு நடாத்தப் படும் முதன்மைப் பணியான வேளாண்மைப் பணி எனப் எடுத்தோதப்படுகிறது. மேழிச் செல்வத்தைப் பேசினால் மேதினியின் மேன்மையைக் கூறியதாக இது அமைகிறது.

அவ்வகையில், சேரனின் நாட்டைச்சிறப்பிக்க விரும்பிய புலவர் அந்நாட்டு வளம் பற்றிக் கூற முனைகிறார். அந்நாட்டு மக்கள் அவல் எறிந்து விட்டு உலக்கையை வாழை மரத்தின் கண்ணே இடர்த்தி வைத்துவிட்டு, வள்ளைப் பூக்களைப் பறிப்பதற்கு வயலில் இறங்குவார்கள் என்றும், அவ்வயல்கள் பழுத்த உதிர்களினால் விளைந்துள்ள தாட்கள் சாய்ந்து கிடக்கும் தன்மை என்றும் கூறுகிறார். இதனால் உணரப் படுவது, நெல் வயல்களில் வள்ளைப் பூக்கள் மலர்ந்துள்ளன என்பதும், நெல்மணிகள் மலிந்துள்ளன என்பதும் ஆம். நெல்மணியின் பொறையினைத் தாங்க முடியாமல் தாள்கள் வளைந்து கிடக்கின்றன என்பதை ''முடந்தை நெல் என்பதனால் கவிஞர் தெரிவிக்கின்றார், அது வருமாறு

''அவலெறிந்த உலக்கை வாழைச் சேர்த்தி
வளைக்கை மகளிர் வள்ளை கொய்யும்
முடந்தை நெல்லின் விளைவயற் பரந்த
தடந்தாள் நாரை யிரிய அயிரைக்
கொழுமீன் ஆர்கைய மரந்தொறும் குழாஅலின்
வெண்கை மகளிர் வெண்குருகு ஓப்பும்
அழியா விழவின் இழியாத் திவவின்
வயிரிய மாக்கள் பண்ணமைத்து எழீஇ
மன்ற நண்ணி மறுகுசிறை பாடும்
அகன்கண் வைப்பின் நாடுமன் அளிய'' (பதிற். 29:1-10)

மருத நிலத்தின் வளமான காட்சியைக் கூறும்பொழுது அத்துடன் அந்நிலத்து மக்கள் இயல்புகளையும் இயற்கை வருணனைகளையும் புலவர் மிகத் தெளிவாகவே நம் முன் கொண்டு வந்துள்ளார். இதுபோன்ற வருணனைகளே பிற்கால பள்ளு இலக்கிய மருதநில வருணனைகளுக்கு மூல வித்துகளாக அமையக் காரணமாயின எனத் துணிந்து கூறலாம் அன்றோ!

நீர்வளம் நிறைந்த பகுதி மருதம். அங்கே மருத மரங்கள் தம்பால் பல புள்ளினம் தங்கி ஒலிக்க ஓங்கி நிற்கும். செறிவினையுடைய பெரிய பிறப்பிடமாகிய மணல் மலிந்த பெருந்துறைக்கண் விளையாடும் இளமகளிரால் பூவும்

தளிரும் பறிக்கப்படுதலால் காஞ்சி மரங்கள் சிதைந்த நிலையில் காட்சி அளிக்கும். முருக்க மரங்கள் தாழ்ந்து பூக்களைச் சொறிதலால் உயர்ந்த நெருப்புப் போலத் தோன்றும். அடைகரையில் சங்குகளும் நாரைகளும் செவ்விய வரிகளுடைய நாரையினத்துப் பறவைகளும் திரியும். கழனிக்கு வாயிலாக உள்ள பொய்கையைச் சார்ந்த விளைநிலத்தில் அழல் போலும் பூவினை உடைய தாமரை மலர்ந்திருக்கும். வளையணிந்த விளையாட்டு மகளிர் பறிக்காமையால், தானே மலர்ந்த ஆம்பல் எங்கும் நிறைந்திருக்கும். இத்தகைய காட்சிகள் நிறைந்தது, நீங்காத புது வருவாயுடைய அகன்றலை நாடு.

**மருதிமிழ்ந் தோங்கிய நளியிரும் பரப்பின்**
**மணன்மலி பெருந்துறைத் ததைந்த காஞ்சியொடு**
**முருக்குத்தாழ் பெழிலிய நெருப்புறழ் அடைகரை**
**நந்து நாரையொடு செவ்வரி யுகளும்**
**கழனி வாயிற் பழனப் படப்பை**
**அழன்மருள் பூவின் தாமரை வளைமகள்**
**குறாஅது மலர்ந்த ஆம்பல்**
**அறாஅ யாணரவர் அகன்தலை நாடே** (பதிற். 23:18-25)

மேற்சொன்னது போன்றே பிரிதொரு மருத நில காட்சியைக் காணலாம். மருத வளநாட்டில் நீர் வளம் இடையறாமல் இருத்தலின் காலமல்லாத காலத்தும் கரும்பு முற்றிக் கிடக்கும். அதனை அறுத்துக் கொள்வதோடு ஒழியாது அதன் அரிகாலையும் அகழ்ந்து சிதைத்து ஆங்கு மலரும் பலவகைப் பூக்களையும் கொண்டு மக்கள் விழா எடுப்பர். தேன் சொரிய நின்ற மருத மரங்களை வெள்ளிய நுரையைச் சுமந்து பாய்ந்து வரும் சிவந்த புதுவெள்ளம் அடியோடே சாய்க்கும். அவ்வெள்ளத்தை அணைகோலித் தடுப்பான் வேண்டிக் கனத்த வைக்கோற் புரிகள் கொண்டு, மணற் கோட்டைகளைக் கட்டுவர். அவையும் அவ்வெள்ளத்தில் சிதைந்து கரைந்து போகும். அது கண்ட மக்கள் முன்னினும் அதிக முயற்சியோடு உயரமும் திண்மையும் பொருந்திய அணைகளை ஆக்கி, நீரைத் தடுத்து வென்றி காண்பர். அப்போது அவர்கள் செய்யும் மகிழ்ச்சி ஆரவாரம் மிகப் பெரிதாக விளங்கும். வெள்ளத்தைச்சிறைப்படுத்தி வெற்றியும் மகிழ்ச்சியும் கொண்ட மக்கள் கூட்டம், நாட்டின் மூதூர்க்கண் நிகழும் திருவிழாவிற்குச் சென்று அதனைக் கண்டு மிகுந்த

ஆரவாரத்துடன் மீளும் என்ற கருத்தில் அமைந்த பல்யானை செல்கெழு குட்டுவனின் வீரத்தைச்சிறப்பிக்க எணணிப் புலவர் பாலை கௌதமனார் பாடிய பாடல் வருமாறு:

காலம் அன்றியும் கரும்பறுத்து ஒழியாது
அரிகால் அவித்துப் பலபூ விழவின்
தேம்பாய் மருத முதல்படக் கொன்று
வெண்டலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்
பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்
சிறைகொள் பூசலின் புகன்ற ஆயம்
முழவிமிழ் மூதூர் விழவுகாணூஉப் பெயரும்
செழும்பல் வைப்பின் பழனப் பாலும் (பதிற். 30:14-21)

மேற்சொன்ன பாடலில் அமைந்த பாட்டுடைத் தலைவனைப் பாலை கௌதமனார் பிரிதொரு பாடலால் சிறப்பித்துக் கூறும்போது, தழை உடையையும் மலர் மாலையையும் அணிந்தவரும் கள்ளுண்டு களித்துக் கூடியிருப் போருமான உழவர் மகளிர் பறவைகள் வயல்களில் புகுந்து பயிர்கட்குத் தீங்கு புரியாதிருக்க வேண்டித் தெளிந்த குரலோ சையால் அவற்றை ஒட்டுவர். ஆனால் தம்மைக் கடிய எழுந்த பெண்கள் ஒலியை இனிய இசை முழக்குவோரின் ஒலி கேட்ட பழக்கத்தாலே பண் ஒலியாகவே கருதிக் கோலமயில்கள் சோலைகளிலே தோகை விரித்தாடும். சேறுபட்ட வயல்களில் சிக்கிய வண்டிகளின் வலிய சக்கரங்கள் உருண்டு விரைந்து செல்லும்படித் தூண்டி வெருட்ட நல்ல எருதுகள் அவற்றைக் கடப்பதற்காக வருந்தி முயலும் காலத்து ஒட்டுவோர் கடும் ஆரவாரம் அல்லாமல் போரின் ஆரவாரத்தை என்றும் அறியாத நாடு பகைவர் நாடு. அத்தகைய நாடு நின் சினத்தால் சீர்குலைந்து அழிந்து ஒழிந்தது எனக் கூறுகிறார்.

சிதைந்தது மன்றநீ சிவந்தனை நோக்கலின்
தொடர்ந்த குவளைத் தூநெறி யடைச்சி
அலர்ந்த ஆம்பல் அகமடி வையர்
சுரியலஞ் சென்னிப் பூஞ்செய் கண்ணி
அரியல் ஆர்கையர் இனிதுகூ டியவர்
துறைநணி மருதம் ஏறித் தெறுமார்
எல்வளை மகளிர் தெள்விளி யிசைப்பிற்
பழனக் காவிற் பசுமயில் ஆலும்
பெய்கை வாயில் புனல்பொரு புதவின்

நெய்தல் பரபின் நிரைகள் செறுவின்
வல்வாய் உருளி கதுமென மண்ட
அள்ளற் பட்டுத் துள்ளுபு துரப்ப
நல்லெருது முயலும் அளறுபோகு விழுமத்து
சாகாட் டாளர் கம்பலை யல்லது
பூசல் அறியா நன்னாட்டு
இயாணர் அறாஅக் காமரு கவினே. (பதிற். 27:1-16)

இப்பாடலில் காணும் கழனிக் காட்சிகள் பிற்காலப் பள்ளு இலக்கியப் புலவர்களுக்கு அவர்கள் விரும்பும் வண்ணம் கற்பனையை வழங்கவல்ல கற்பனைப் பெட்டகமாகத் திகழக்கூடியன அன்றோ!

பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாராட்டிப் பாடும்போது,

''கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்இனம் பூட்டிப்
பாழ் செய்தனை, அவர் நனந்தலை நல்எயில்.''
(புறம். 15:1-3)

என்ற அடிகளில் இவ்வாறு அவன் வீரத்தைச்சிறப்பித்துப் பாடுகிறார். இதேபோல் அதியமான் நெடுமான் அஞ்சி மகன் பொகுட்டெழினியை ஔவையார் பாராட்டிப் பாடும்போது இதே கருத்துத் தொனிக்கப் பின்வருமாறு பாடுகிறார்.

''வெள்வாய்க் கழுதைப் புல் இனம் பூட்டி,
வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்
வைகல் உழவ'' (புறம். 392:9-11)

அன்றைய மன்னர்கள் தங்கள் மண்ணைத் தாயகமாகக் கருதினர் என்றாலும், வளம் செறிந்த பிறர் நிலத்தை அவ்வாறு கருதவில்லை. தன்னுடைய கோலாட்சி உயர பிற நாட்டினரது விவசாய உற்பத்தியைத் தடை செய்தல் வேண்டுமென்ற கோட்பாடு இம்மன்னர்தம் மனத்தில் பதிந்து இருப்பதைக் காணமுடிகிறது. அழிவு நோக்கி வேளாண் தொழிலை இம்மன்னர்கள் பாழ் செய்து இருந்தாலும், மறுபுறம் மக்கள் முன்னேற்றத்திற்கு இத்தொழில் பல்கிப் பெருகுதல் வேண்டுமெனப் புலவர்களால் வலியுறுத்தப்பட்டிருப்பதையும் காண முடிகிறது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை வெள்ளைக்குடி நாகனார் செவியறிவுறூஉ துறையில் அவனுக்குச் சொல்லும் செய்தியில், நீயும் குரலை கூறுவாரது உறுதியில்லாத வார்த்தையை உட்கொள்ளாது ஏரைப் பாதுகாப்பாருடைய குடியைப் பாதுகாத்து அக்காவலாலே ஏனைக் குடிகளையும் பாதுகாப்பாயாகலின் நின் அடியைப் போற்றுவர் என்ற பொருள் விளங்கும்படியாகப் பின்வரும் பாடலடிகளைப் பாடியுள்ளார்.

''நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது,
பகடு புறந் தருநர் பாரம் ஓம்பி,
குடிபுறந் தருகுவை ஆயின், நின்
அடி புறந் தருகுவர், அடங்கா தோரே'' (புறம். 35:31-34)

இந்த இடத்தில் காழ்ப்புணர்ச்சிகளுக்குச் செவிசாய்க்காது குடிமக்களைப் புரத்தற்கு வேளாண் தொழிலுக்கு வேண்டிய வாங்கள் பல செய்வித்தால், அந்நிய நாட்டு மக்களும் கையெடுத்து வணங்குவர் என்று கூறுவதன் மூலம் மனித வாழ்க்கைக்கு அடிப்படையாக அமையும் வேளாண் தொழிலையும், அதனைச் செய்வார் தம் குடியையும் சிறப்பித்துப் பேசுவதைக் காண முடிகிறது.

மற்றோரிடத்தில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை இடைக்காடனார் பரிசில் வேண்டிப் பின்வருமாறு பாடுகிறார்.

''புலிபுறங் காக்கும் குருளை போல
மெலிவுஇல் செங்கோல் நீபுறங் காப்ப,
பெருவிறல் யாணர்த் தாகி யரிநர்
கீழ்மடைக் கொண்ட வாளையு முழவர்
படைமிளிர்ந் திட்ட யாமையு மறைநர்
கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை
வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரும்
மென்புல வைப்பின் நன்னாட்டுப் பொருந''
(புறம்.42:10-18)

என்ற பாடலின் வழியாக, ''புலி பாதுகாக்கும் குட்டி போலக் குறைவில்லாத செவ்விய கோலால் நீ பாதுகாப்பாய். பெரிய விசேடத்தை உடைய வருவாயை உடைத்தாய். நெல்லறுப்பார் கடைமடைக்கட் பிடித்துக் கொள்ளப்பட்ட

வாளையும், உழுவார் படைவாளால் மறிக்கப்பட்ட ஆமையும், கரும்பறுப்பார் கரும்பினின்றும் வாங்கப்பட்ட தேனும், பெரிய துறைக்கண் நீரை முகந்து கொள்ளும் பெண்டிர் பறித்த செங்கழு நீருமென இவற்றை வன்புலத்தானின்றும் வந்தச் சுற்றத்தார்க்கு விருந்தாக விரும்பிக் கொடுக்கும் மென்புலத்தூர் களையுடைய நல்ல நாட்டுக்கு வேந்தே'' என விளித்துக் கூறுவதன் மூலம் புலவர் மருத நிலத்தின் மாண்பினையும் மக்கள் விருந்தோம்பும் பாங்கினையும் சித்தரித்துக் காட்டுவது பின்னெழுந்த பள்ளு இலக்கியத்திற்கு இதயத் துடிப்பன்றோ.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், சோழன் முடித் தலைக் கோப்பெருநற் கிள்ளியை வாழ்த்தும்போது அவன் நாட்டின் பெருமை வெளிப்படும்படியாகவயலில் நெற்சூட் டோடு மயிற்பீலியையும் திரட்டிச் சூடு தட்டும்படியான ஒரு காட்சியை வருணிக்கிறார். மன்னர் புகழுக்கு ஏற்ற எடுத்துக் காட்டுகள் எத்தனையோ கூறி இருக்கலாம். வேளாண் மக்களின் வளத்தை வேந்தன் மேல் ஏற்றிக் கூறுவது மேழித் தொழிலிடத்துப் புலவருக்குள்ள சமூக விழிப்புணர்ச்சி உணர்வை வெளிக்காட்டுகிறது. இவ்வகைக் காட்சிகள் பிற்காலப் பள்ளு இலக்கியத்தில் சமூக சிந்தனைகள் அங்கதப் பொலிவோடு பல்லாற்றானும் பயின்று வரக் காரணமாக அமைந்திருக்கக் கூடும்.

''பழன மஞ்சை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழ வோனே.'' (புறம். 13:10-14)

உலகத்துத் தோன்றும் உயிர்கள் அத்தனைக்கும் உணவு என்பது இன்றியமையாதது. மாந்தர் இனம் ஒன்றே உணவைப் பயிரிட்டுப் பெற்றுக் கொள்கிறது. மன்பதையில் பசித்த ஒருவருக்கு உணவிடுதல் என்பது அறமாகப் போற்றப் படுகிறது. பண்பாட்டில் உயர்ந்து நின்ற தமிழன் விருந்தோம் பலைத் தன் தலையாயக் கடனாகக் கருதினான். பொதுமறை யாம் திருக்குறள் விருந்தோம்பலைப் பற்றி,

'இருந்து ஓம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு' (திருக். 81)

என்று கூறும்போது வேளாண் தொழிலை மேற்கொள் பவன் செய்ய வேண்டிய அன்றாட நிகழ்வுகளில் பிறர் பசி போக்கவதும் ஒன்று என்று வலியுறுத்திக் கூறுகிறது. இதனையே புறநானூற்றுப் புலவன் குடபுலவியனார், பாண்டியன் நெடுஞ்செழியனைப் பற்றிப் பாடும்போது,

''நீர் இன்றி அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே;
உண்டி முதற்றே உணவின் பிண்டம்;
உணவு எனப் படுவது நிலத்தொடு நீரே;
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசினோரே'' (புறம். 18:18-23)

வலிய தோள்களைக் கொண்ட வீரர்களைக் கொண்டு வெற்றிகளைக் கணடாலும் அவற்றால் அத்தனைப் பெருமை சேராது. ஒரு நாட்டின் வளமெனக் கருதப்படுவது மேழிச் செல்வமே. பசித்து வந்தவனுக்கு ஒரு பிடிச் சோறிடுவதே மனித நேயமாகும். ஆகவே தான் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் ஆகிறார். ''வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணான்'' என்ற மரபுத் தொடரும் இதனை வலியுறுத்தும். இந்தக் கோட்பாட்டின் தாக்கமே பிற்காலத்தில் பள்ளு இலக்கியங்கள் பல எழ வாய்ப்பு நல்கியது என்றால் மிகையாகாது.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை மாங்குடி கிழார் போற்றிப் பாடும்போது மழை நீரை உண்டு மீண்டும் மழையாகப் பெய்து ஆறு, குளம், சுனை என முந்நீராகப் பிரிந்து கிடக்கும் நீரை வேளாண் தொழிலுக்குப் பயன்படுத்திக் கொள்ளும் படியான அமைப்பினைப் பெற்ற நன்னாடனே என விளித்துக் கூறுகிறார்.

''முந்நீர் உண்டு முந்நீர்ப் பாயும்;
தாங்கா உறையுள் நல்லூர் கெழீஇய'' (புறம்.24:16-17)

பயிர்த் தொழிலுக்குப் பாசனம் தேவையென்பதை உட்பொருளாக வைத்து இவ்வரிகளில் விளக்கியுள்ளார். பள்ளு இலக்கியத்தில் மழை வரவும், ஆற்றில் வெள்ளம் மிகுதல் போன்ற வருணனைக் காட்சிகள் இடம் பெற இக்கருத்தே முன்னோடியாக இருக்கலாம்.

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாண்டரங் கண்ணனார் புகழ்ந்து பாடும்போது,

''முருகற் சீற்றத்து, உருகெழு குருசில்!
மயங்கு வள்ளை, மலர் ஆம்பல்,
பனிப் பகன்றை, கனிப்பாகல்,
கரும்பு அல்லது காடு அறியாப்
பெருந்தண் பணை பாழ் ஆக'' (புறம். 16:12-19)

பகைவர் தம் வளமான உழுநிலத்தைப் பாழ்படச் செய்யும் தன்மையைப் பெற்ற பெரிய படையை உடைய வேந்தனை வருணிக்கப் புகும்போது காடெனத் திகழ்ந்தது பகைவர்தம் கரும்புத் தோட்டம் என பகைவர் நாட்டின் மருத நிலத்தை வருணிக்கிறார்.

மேற்சொன்ன வரிகளின் வாயிலாக நாட்டிற்குப் பெருமை சேர்ப்பது பயிர்த்தொழிலே; அது பாழ்படும்போது நாடும் பாழாகும். பள்ளு சொல்லும் கருத்தும் இதுவன்றோ!

இப்பள்ளு இலக்கியம் தொடர்பான பல்வேறு வயல் சார்ந்த நிகழ்வுகளைப் பெரும்பாணாற்றுப்படையில் மிக விரிவாகவே பேசப்பட்டுள்ளது. பத்துப் பாட்டில் ஆராய்ச்சி செய்த டாக்டர் மா.இராசமாணிக்கனார் இச்செய்திகளை யெல்லாம் தம் நூலில் மிக அழகாக வடித்துத் தந்துள்ளார். அவற்றுள் சிலவற்றை ஈண்டுக் காணலாம்.

**மருதநில இல்லங்கள்**

உழவர் வயல் வரப்பில் தங்கிப் பயிர்களைக் காவல் காக்கப் புதிய வைக்கோலால் வேய்ந்த கவிந்த குடிலை அமைத்துக் கொண்டனர். அதன் முற்றத்தில் உழத்தியர் அவல் இடித்தனர். (பெரும்.224-226). வளமுடைய ஊர்களில் உழவர் வீடுகளின் முற்றத்தில் பசுங்கன்றுகளைக் கட்ட நெடிய தாம்புக் கயிறு கொண்ட முளைகள் நடப்பட்டிருந்தன. நீண்ட ஏணிக்கு எட்டாத உயரமான வடிவினை உடைய குதிர்கள் இருந்தன. பிள்ளைகள் முற்றத்தில் சிறுதேர் உருட்டி விளையாடினார்கள். (243-49). தென்னந்தோப்புகளுக்கு இடையில் மருதநிலச் சிறுவர்கள் கூடி விளையாடுவர். பெரியோர்கள் ஓலை வேயும் தொழிலில் ஈடுபட்டு இருப்பர். வீட்டு முற்றத்தில் மஞ்சள் பயிராகி இருந்தது. வீடுகளின் கூரைகள் தென்னை ஓலையால் வேயப்பட்டு இருந்தன.

வீட்டின் பின்னே மணங் கமழும் பூந்தோட்டம் இருந்தது (350-56).

மருதநிலப் பகுதியில் தான் மறையவர் வாழ்ந்து வந்தனர். வீட்டின் முன்புறம் பந்தல் அமைத்து இருந்தது. அதன் சிறிய கால்களுள் ஒன்றில் பசுங்கன்று கட்டப்பட்டு இருந்தது. அவ்வீட்டை கோழியும் நாயும் நெருங்கவில்லை. வீட்டில் கிளி வளர்க்கப்பட்டது. அதற்கு வேத ஓசை கற்பிக்கப்பட்டது (297-300).

மருதநிலத்தில் வலைவீசி மீன்பிடித்து வாழ்ந்தவர் வலையர் எனப்பட்டனர். அவர்கள் வஞ்சி மரக்கொட்டி களையும் காஞ்சி மரக்கொட்டிகளையும் கலந்து நட்டு, வேடிக்கோலை வரிச்சாக நிறைத்து, தாழை நாரால் கட்டித் தருப்பைப் புல்லாலே வேயப்பட்ட சிறிய இறப்பை குடில் களில் வாழ்ந்தார்கள். அவர்களது குடிலின் முற்றத்தில் மீனை வாரி எடுக்கும் பறிகார் இருந்தன. குடிலை அடுத்து வளைந்த கால்களை உடைய புன்னைமரக் கொம்புகள் அமைந்த பந்தர் இருந்தது. அப்பந்தரின் மீது சுரைக்கொடி முதலிய படர் கொடிகள் படர்ந்து காய்களோடு விளங்கின (263-67).

சோழநாட்டின் ஒரு வேளாண் குடியிருப்பைப் பற்றி பொருநராற்றுப்படை தரும் காட்சி ஒன்றினை ஈண்டுக் காணலாம். நிறைந்த வளமுடையது சோழநாடு. ஒரு மாநிலத்திற்கு ஒன்றாக மேடுகள் எங்கும் நெற்கூடுகள் திகழ்வதை ஆங்குக் காணலாம். உழவர்கள் தென்னைமரச் சோலையில் குடியிருப்பர். உழத்தியர் கடற்கரை மணலில் வண்டல் (மணல் விளையாட்டு) விளையாடுவர். மருதநில காக்கைகள் குருதி பெய்த சோற்றை குறைவில்லாது உண்டு பசித்தபோது தின்பதற்கென நொச்சியின் நிழலில் நெய்தல் நில ஆமைக் குட்டிகளை மறைத்து வைக்கும். பாகற் பழமும் பலாமரச்சுளையும் தின்ற மயிர்ப்பெடைகள் காஞ்சி மரத்திலும் மருத மரத்திலும் இருந்து ஆரவாரிக்கும். ஆண் மயில்கள் வண்டுகளின் ஓசை கேட்டு மருத நிலத்தை விட்டு நெய்தல் நிலத்து நிலா மணலிலே சென்று தோகை விரித்து ஆடும். மருத நிலத்தே அரும்பும், பகன்றையும், புனுகும், ஞாழலும், ஏனைய மரங்களும் திரண்டு வளம் பெருக்கும். அவ்விடத்து வாழ்வார் கரும்பையும் நெல்லையும் அறுக்கின்ற களமரு டைய ஓசையை வெறுத்ததால் முல்லை நிலத்தே சென்று

விரும்பி உறைவர். முல்லை நிலத்தே தளவும் தோன்றியும் முல்லையும் கொன்றையும் காயாவும் செழித்து மலர்ந் திருக்கும். அங்கு வசிப்பவர் அவ்விடத்தை வெறுப்பின் மருத நிலத்தே சென்று அதனைப் புகழ்ந்து அங்கே தங்குவர். நெய்தல் நிலத்தே கடல்மீனைத் தின்று புன்னைக் கிளையில் தங்கிய நாரைகள் அலை ஓசையை வெறுத்து மருத நிலத்துப் பனையில் சென்று தங்கும். நெய்தல் நில ஊர்களான பாக்கங் களில் தெங்கும், வாழையும், காந்தலும், சரபுன்னையும் பேர் ஆந்தைகளும் உள்ளன. அங்கு வாழும் பரதவர் அவ்வாழ்வை வெறுத்து, குறிஞ்சி நிலத்தே சென்று தங்குவர். கானவர் மருதம் பாடுவர். பரதவர் குறிஞ்சி பாடுவர். தேனும் கிழங்கும் விற்பவர் மீனின் நெய்யும் கள்ளும் பண்டமாற்றாகப் பெறுவர். கரும்பும், அவலும் கொடுத்தவர் மான் தசையும், கள்ளும் கொண்டு போவர். குறிஞ்சிக் குறவர் நெய்தற் பூக்களைச் சூடுவர். காட்டுக் கோழிகள் தினைக் கதிரை கவரும். மலைக் குரங்கு கழியிலே மூழ்கும். கழியிடத்து நாரைகள் மலையிலே தங்கும். இப்படிச் சோழநாட்டில் தொழில் வயப்பட்டார் எவ்வாறெல்லாம் உவகை கொள்கின்றனர் என்பதை மருத நிலத்தை மையமாக வைத்துப் பொருநராற்றுப்படை (178-224) ஆகிய வரிகளில் படம் பிடித்துக் காட்டியுள்ளதைக் காணலாம்.

இன்றைக்குக் கிடைக்கும் பல்வேறு பள்ளு நூல்களில் ஊடாடிக் கிடக்கும் செய்திகள் மேற்கண்ட செய்திகளையே நமக்கு நினைவுபடுத்துகின்றன. மருதநில மக்களின் மகிழ்ச்சியான வாழ்க்கையையும் அயராத உழைப்பையும் எடுத்துக் கூறும் பள்ளு நூல்களில் பெரும்பாணாற்றுப்படை சொல்லும் செய்திகளை உள்வாங்கிச் சொன்ன வளர்ச்சியைக் காணமுடிகிறது. அவ்வகையில் பார்க்கும்போது பள்ளு இலக்கியத்திற்கான கால்கோள் பெரும்பாணாற்றுப்படையி லேயே தொடங்கிவிட்டதைக் காணமுடிகிறது.

பொருநர் ஆற்றுப்படையில் காவிரியின் வெள்ளச்சிறப்பு என்ற பொருண்மையில் (232-248) மருத நிலத்தில் தவழ்ந்து செல்லும் காவிரியின் வெள்ளத்து அழகை வருணிக்கும் வாயிலாகச் சோழநாட்டு விவசாயத் தொழிற் சிறப்பையும் விவரிக்கும் வகையில் வயலில் உழவர்கள் வேலை செய்த விதம், சூடு அடித்து நெல்மணி பிரித்தது, அவற்றை

மூடைமூடையாகக் கட்டியது, மூடைகளை ஒழுங்கு செய்தது போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன.

''மன்னர் நடுங்கத் தோன்றி, பல்மாண்
எல்லை தருநன் பல்கதிர் பரப்பி,
குல்லை கரியவும், கோடுளரி நைப்பவும்,
அருவிமா மலை நிகழ்த்தவும், மற்றுஅக்
கருவி வானம் கடற்கோள் மறப்பவும்,
பெருவறன் ஆகிய பண்பு இல்காலையும் -
நறையும் நரந்தமை அகிலும் ஆரமும்,
துறைதுறைதோறும், பொறை உயிர்த்து ஒழுகி,
நுரைத் தலைக் குரைப் புனல் வரைப்பு அகம் புகுளாறும்
புனல் சூடு மகளிர் கதுமெனக் குடைய-

கூனி குயத்தின் வாய்நெல் அரிந்து
கூடு கோடாகப் பிறக்கு, நாள்தொறும்
குன்று எவக் குவைஇய குன்றாக குப்பை
கடுந் தெற்று மூடையின் இடம் கெடக் கிடக்கும்,
சாலி நெல்லின், சிறைகொள் வேலி,
ஆயிரம் விளையுட்டு ஆக,
காவிரி புரக்கும் நாடு கிழவோனே'' (பொருந. 232-248)

பள்ளு இலக்கியத்தை உற்று நோக்கினால் மழைக்குறி, ஆற்று வெள்ளம் வருதல், நடவு நடுதல் போன்ற செய்திகள் மிக விரிவாகவும், சுவையாகவும் பேசப்படுகின்றன. பள்ளு இலக்கியம் அன்றி குறவஞ்சி போன்ற பிற இலக்கியங்களும் வெள்ளத்து வருகையைச் சிறப்பித்துக் கூறுவதைக் காணுகிறோம். உழவுத் தொழிலுக்கு நீர் இன்றியமையாதது. ஆகவேதான் புது வெள்ளத்தின் வருகை மக்களுக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. வேளாண்மை என்பது சங்க காலத்தில் இருந்தே இருந்து வருவது. ஆகவே அம்முன்னோர்கள் பாராட்டிய வெள்ளத்து வருகை பள்ளு இலக்கியத்திற்குக் கருவாக மலர்ந்ததில் வியப்பு ஒன்றுமில்லை. இத்தகைய சிறப்புக்கு முதுபெரும் நூலாகிய சங்க நூல்கள் முன்னோடிகளாக விளங்கின என்பது ஈண்டு எண்ணத்தக்கது.

இவையன்றிச் சங்க இலக்கியத்தில் அங்கும் இங்குமாக எத்தனையோ செய்திகள் விரவிக் கிடக்கின்றன. அத்துணுக்குகளையெல்லாம் தொகுத்துக் காணும்போது பள்ளு இலக்கியத்திற்கு இவையெல்லாம் எந்த அளவிற்கு மூலக்

கூறுகளாக விளங்கியிருக்கின்றன என்பதனை உணர முடிகிறது.

நெய்தல் நில வயல்களில் நெல்லை அறுக்கும் உழவர்கள் ஆம்பல் இலைகளைப் பறித்து அவற்றைப் பாத்திரமாகப் பயன்படுத்தி அதனில் கள்ளைச் சொரிந்து குடித்து மகிழ்வர்.

''பொய்கை நாரை போர்விற் சேக்கும்
நெய்தலால் கழனி நெல்லறி தொழுவர்
கூம்புவிடு மென்பிணி யவிழ்ந்த வாம்பல்
அகலடை யரியன் மாந்தித் தெண்கடற்'' (புறம். 209:1-4)

அடுத்து, ஒரு பாடலில் வயலில் களை பறிக்கும் மகளிரைக் கடைசியர் எனவும், ஆங்குப் பணிபுரியும் உழவர் குடி ஆடவரை வன்கை வினைஞர் என்றும், அவர்கள் வேலை செய்யும்போது கள்ளுண்டு மகிழ்தல் இயல்பு என்றும் கீழ்வரும் பாடல் அடிகள் மூலம் விளக்குகிறது.

''கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்
சிறுமா ணெய்த லாம்பலொடு கட்கும்
மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட
பழன வாளைப் பரூஉக்கட் டுணியல்
புதுநெல் வெண்சோற்றுக் கண்ணுறை யாக
விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி
நீடுகதிர்க் கழனிச் சூடுதடு மாறும்
வன்கை வினைஞர்'' (புறம். 61:1-8)

மற்றொரு பாடலில், நெல்லறுக்கும் அரிவாள், அறுவடை செய்யும்போது கூர்மழுங்கிப் போகுமாயின் சேற்றில் படிந்து இருக்கும் வயல் ஆமையின் முதுகு ஒட்டில் அவ்வரி வாளினைத் தீட்டிக் கூர் ஆக்குவது மாவிலங்கை உழவர் வழக்கமென இப்பாடல் கூறுகிறது.

''நெல்லரி தொழுவர் கூர்வாண் மழுங்கிற்
பின்னை மறத்தோ டரியக் கல்செத்
தள்ளல் யாமைக் கூன்புறத் துரிஞ்சும்
நெல்லமல் புரவி னிலங்கை கிழவோன்'' (புறம். 379:3-6)

மாவிலங்கையில் விளையாடும் சிறுமிகள் கேழப் பன்றி உழுத கரிய சேற்றைக் கிளறுவர். அச்சேற்றின் அடியில் ஆமை முட்டைகள் கிடைக்கும். இச்சிறுமியர் அம்முட்டைகளை

எடுத்துக் கொண்டு அவ்விடத்தில் சேற்றை நிரப்பி விடுவர். பின்னர் அம்முட்டைகளையும் தேன் நாறும் ஆம்பற் கிழங்குகளையும் சமைத்து உண்பர் என்ற செய்தி புறநானூற்று நன்னாகனார் பாடல் வழியாக அறிய முடிகிறது.

''ஓரை யாயத் தொண்டொடி மகளிர்
கேழ லுழுத விருஞ்சேறு கிளைப்பின்
யாமை யீன்ற புலவுநாறு முட்டையைத்
தேனா றாம்பற் கிழங்கொடு பெறூஉம் (புறம். 176:1-4)

பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்து வேள் நன்னன்சேய் நன்னனைப் பாராட்டிப் பாடும்போது அவனது நாட்டின் வயலில் பணிபுரியும் உழவர் எருதை அதட்டி எழுப்புகின்ற ஓசைக்கு ஏற்ப அந்நாட்டுப் பாணர் யாழில் மரகதப்பண் இசைத்ததாக,

''எருது எறி களமர் ஓதையொடு நல்யாழ்
மருதம் பண்ணி, அசையினீர், கழிமின்''
(மலைபடு. 469-70)

பள்ளு இலக்கியம் தோன்றுவதற்கான மூலக்கூறினைத் தொல்காப்பியத்திலேயே காணமுடிகிறது. 'ஏரோர் களவழி' என்ற பொருண்மையில் ஒரு குறிப்பு ஒன்று தொல் காப்பியத்தில் (1022) உள்ளது. போர்க்கள வெற்றி பாடப்படல் போன்றே ஏர்க்கள வெற்றியும் புகழப்படுவதாகக் கருதலாம். வாகைத்திணையின் மற்றொரு நூற்பா: 'இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்; என்றதால் வேளாளர் பற்றி நினைந்ததும் இங்குச்சிந்திக்கத்தக்கது. மேலும், தொல்காப்பியர் செய்யுளிய லில் நூல்களுக்குரிய வனப்பு எட்டு என்று குறிப்பிடுகிறார். அவற்றுள் புலன் என்பதும் ஒன்று. அதற்கு விளக்கம் கூறவந்த இளம்பூரணர், வழக்குச் சொல்லினானே தொகுக்கப்பட்டு ஆராய வேண்டாமற் பொருள் தோன்றுவது புலனென்னுஞ் செய்யுளாம் என்றவாறு' எனக் கூறுகின்றார். அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன' என இதற்குப் பேராசிரியர் உரைவிளக்கம் எழுதிச் செல்கிறார். விளக்கத்தார் கூத்து முதலியன இன்று கிடைக்கப் பெறவில்லை. உரையாசிரியர் களின் உரைக்குறிப்புகளின் வாயிலாகச் செய்யுள் வனப்பில் புலன் என்பது ஒன்று எனவும், பாமர மக்கள் வழங்கும் சொற்களால் புனையப்பட்டு அவர்கள் ஆடியும் பாடியும்

வரும் நாடகச் செய்யுளே அதற்கு இலக்கியம் எனவும் அறியப்படுதலால், அவர் காலத்துக்கு முன்னே அவ்வகை நூல்கள் பல இருந்தன என்பது தெளியப்படும்.

உழவோடு ஓரளவு தொடர்புறும் வள்ளைப் பாடலைச் சங்க இலக்கியத்தில் காண்கின்றோம். கலித்தொகையில் வள்ளை அகவும் செய்தி மற்றும் நெற்குற்றும்போது பாடுவதாக அமைந்த பாடலும் மக்கள் இலக்கிய மரபை காட்டுவனவாக அமைவன.

பொதுவாக, உழவர்கள் உழவுத் தொழிலில் ஈடுபட்டிருக்கும்போது வேலையின் கடுமையும் அதனால் ஏற்படும் களைப்பும் தோன்றா வண்ணம் தனியாகவோ அல்லது குழுவினருடனோ சேர்ந்து பாடல்கள் பாடுவது என்பது இன்றும் காணப்பெறும் மரபு ஆகும். வயலில் முதன் முதலாக ஏர் பூட்டுவதைப் 'பொன்னேர் பூட்டுதல்'என்றும் நாளேரிடல் என்றும் கூறுவர். அவ்வமயம் ஏரைச் சிறப்பித்தும் போற்றியும் பாடும் பாடல் ஏர்மங்கலம் எனப்படும். நெற்கதிரின் தாள்களை அரிந்து போட்ட பின்னர், சூட்டைப் பரப்பிக் கடாவிடுங் காலத்து உழவர்கள் பாடும் பாடல் 'முகவைப் பாட்டு' என்று வழங்கப்படும். இது பொலிபாடுதல் என்று தமிழகத்தில் ஒருசில இடங்களில் வழங்கப்படுவதை இன்றும் காணலாம். தொடர்ந்து வரும் காலத்தினதான சிலப்பதிகாரத்திலும் உழவுத்தொழிலைச் சார்ந்த பாடல் நிலையைக் காண முடிகின்றது.

சிலப்பதிகாரத்தில் கதை மாந்தராக மன்னர்களையும் மன்னர் மனைவியர்களையும் பெருவணிகர்களையும் மையமாக வைத்துப் பின்னப்பட்ட போதிலும் நாட்டு நடப்புகள் பின்புல ஓவியமாகக் கதையோடு வரையப் பட்டுள்ளதைக் காணலாம். நாடுகாண் காதையில் வழி வருணனையாக விருந்திற் பாணியும், ஏர்மங்கலமும் முகவைப் பாட்டும் பற்றிச் சுட்டியுள்ள (10-131-137) செய்தியையும், நீர்ப்படைக் காதையில் ஏர் உழவரோதைப் பாணியை எடுத்து மொழிந்துள்ளதையும் காணலாம். இவை உழவும் பாடலும் தொடர்புறுவதைக் காட்டுவதுடன், பள்ளிலக்கியத்தின் விதைகளையும் சுட்டுகின்றன எனலாம். கலித்தொகை போன்றே சிலம்பிலும் வள்ளைப் பாடல் வாழ்த்துக் காதையில் அமைந்துள்ளது ஈண்டு நினைவு கூறத்தக்கது.

சிலம்பில் அடியார்க்கு நல்லார் உரைப்பகுதியில் பள்ளிலக்கியத்தில் விதை, தெளிவாக அமைந்ததாக எடுத்துக் கூறுவர். அரங்கேற்றுக் காதை வரையில் பல்வகையான வரிகளை விளக்குவதுடன் பாம்பாட்டிபறை, குரவை, அம்மானை, பந்து, கழங்காடல், பகடி, பகவதி, சாழல், உந்தி, அவலிடி, குணாலை போன்ற கூத்துகள் பற்றிச் சுட்டிக் காட்டப் பட்டுள்ளன. இவற்றுடன் ‘ஐயனுக்குப் பாடும் பாட்டுஆடும் படுபள்ளி’ என ஒருவரியை எடுத்துக் கூறுகிறார். இதைப்பற்றி இலக்கிய வரலாற்று ஆசிரியர் மு. அருணாசலம் கூறும்போது, ‘பள்ளியரும் பள்ளிரும் சேர்ந்து ஆடும் கூத்தெனக் கொள்ளலாம் என்பர்[8]. பேராசிரியர் ச.வே. சுப்பிரமணியன் இதுபற்றிக் கூறும்போது, ‘ஆடும் படுபள்ளி எனும் வகை பிற்காலப் பள்ளின் முன்னோடியாகக் கருதத்தக்கது’ என்பார்[9].

கச்சியப்ப முனிவர் பாடிய பேரூர்ப் புராணத்தில் ‘பள்ளுப் படலம்’ எனும் பகுதி இடம் பெற்றுள்ளது. இறைவனே பள்ளனாக வந்து உழவுத் தொழில் செய்த செய்தி இங்கு அமைவது குறிப்பிடத்தக்கது.

கலம்பகத்தின் பதினெண் உறுப்புகளுள் ஒன்றாகக் குறம் அமைய, உறுப்புநிலை வளர்ந்த காலத்தில் பள்ளும் ஒரு புது உறுப்பாக இணைந்தது. எவ்வளூர் இராமசாமிச் செட்டியாரின் இடைமருதூர்க் கலம்பகம் இவ்வுறுப்பைத் தருகின்றது.

**பள்ளும் கருவும்**

மருத நில மக்களின் வாழ்க்கையை மையமாகக் கொண்டு இந்நூல் பின்னப்பட்டுள்ளது. பள்ளு இலக்கியங்களில் பொதுவாக அமையும் கதைப்பகுதி எல்லா நூல்களிலும் ஒன்றாகவே காணப்படுகிறது. சிற்சில நூல்கள் ஆசிரியரின் கற்பனைவளத்திற்கு ஏற்ப சிறுசிறு விகற்பகத்தோடு காணப்படுகிறது எனலாம். எல்லா வளமும் பெற்ற பண்ணை ஒன்றில் பள்ளன் ஒருவன், தன் இரு மனைவியரோடு வழிவழியாகப் பணி செய்து வருகிறான். பள்ளனுக்குத் தன் இளைய மனைவி மீதுள்ள மிகுந்த காதலால், மூத்தவள் மீது அவனுக்குள்ள அன்பில் ஆழமில்லை. இந்நிலையில் மழைக் காலத்தில் மழை பெய்து ஆற்றில் வெள்ளம் வருகிறது. நிலத்தை மேற்பார்வையிடும் பண்ணைக்காரன் உழவுத் தொழிலை மேற்பார்வையிட வருகிறான். மூத்த பள்ளி

அவனிடஞ் சென்று பள்ளன் பண்ணைப் பணியை மறந்து வேலை செய்யாமல் இளைய பள்ளியின் மீதுள்ள மிகுந்த காதலால் அவள் வீட்டிலேயே இருப்பதாகப் பொறாமை உணர்வின் உந்துதலாற் கூறிவிடுகின்றாள். பண்ணைக்காரன் இளைய பள்ளியின் வீட்டிற்குச் சென்று அவனைச் சினந்து பேசுகிறான்.

பண்ணைக்காரன் திட்டியதும் மறைந்திருந்த பள்ளன், வீட்டை விட்டு வெளியே வருகின்றான். விதைவகை, மாட்டுவகை முதலியவற்றின் கணக்குகளைக் கூறுமாறு பள்ளனைப் பண்ணைக்காரன் கேட்கின்றான். பள்ளனோ அதற்குரிய விடையைக் கூறாமல் சிலேடை முறையில் தவறான கணக்கைக் கூறுகின்றான். பள்ளன் தவறாக விடை தருவதை உணர்ந்த பண்ணைக்காரன் அதுபற்றிப் பின்னர் வினவிக் கொள்ளலாம் என்று எண்ணி, நிலங்களுக்கு உரமிட ஆட்டிடையனை அழைத்து வருமாறு பள்ளனை ஏவுகிறான்.

கழனியில் உரமிடுமாறு ஆட்டிடையனை ஏவிவிட்டுப் பள்ளன், இளையபள்ளியின் இல்லத்திற்குச் சென்று விடுகிறான். இதனைக்கண்ட மூத்தபள்ளிஎப்படியாவது பள்ளனுக்குப் புத்தி கற்பிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் பண்ணைக்காரனிடம் சென்று பள்ளன், இளைய பள்ளியின் வீட்டில் இருப்பதைப் பற்றி முறையிடுகின்றாள். இதனை அறிந்த பள்ளன், கிடை வைத்து வருபவன் போல் பாசாங்கு செய்து பண்ணைக்காரனிடம் வருகிறான். மூத்த பள்ளி கூறியதற்கேற்பக் கள்ளத்தனமாக நடிக்கும் பள்ளனைத் தொழுவில் மாட்டுகின்றான் பண்ணைக்காரன்.

பண்ணைக்காரனால் பள்ளன் படும் துன்பத்தைக் காணப் பொறுக்கமாட்டாத நிலையில் மூத்தபள்ளி அவன் வேண்டிய வாறே பண்ணைக்காரனிடம் சென்று அவனுக்காகத்தான் பிணைபட்டு அவனைத் தொழுவத்தில் இருந்து விடுவிக்கிறாள். விடுவிக்கப்பட்ட பள்ளனும் கணக்குகளை முறையாகக் கூறிப் பண்ணைக்காரன் குறிப்பிட்ட நன்முகூர்த்தத்தில் பள்ளர் எல்லோரையும் கூட்டிச் சென்று உழுகின்றான். அவ்வேளை யில் பள்ளனை மாடு ஒன்று முட்ட, மயங்கி வீழ்கிறான். இதன் காரணமாகப் பள்ளியர் இருவரும் வருந்துகின்றனர். சிறிது நேரத்தில் பள்ளன் தேறி எழுந்து வேலையைக் கவனிக் கின்றான். நாற்றுப் பறித்தல், நடுதல் முதலிய உழவு வேலைகள்

நடைபெறுகின்றன. பயிர் நன்கு விளைந்து அறுவடை நிகழ்கின்றது. பண்ணைக்காரன் முன்னிலையில், பள்ளன் அனைவருக்கும் நெல் அளக்கிறான்.

பள்ளன் தன்னைப் புறக்கணித்துத் தனக்குரிய பங்கைச் சரியாகத் தரவில்லை என்றும், இளையவளுக்கு மட்டும், அவள் பங்கிற்கு மேலும் அளந்தான் என்றும் மூத்தவள் முறையிடுகின்றாள். அதைக்கேட்ட இளையபள்ளி மூத்தவளை ஏசுகிறாள். மூத்தபள்ளியும் ஏசுகிறாள். பொதுவாகத் தொடங்கிய சண்டை சமயப் போராக நீள்கிறது. பின் இருவரும் தாமே அமைதியாகிப் பாட்டுடைத் தலைவனை வாழ்த்திப் பாடுவதுடன் பள்ளு நிறைவுறுகிறது. இதுவே பள்ளு இலக்கியத்தில் அமையும் கதையின் பொதுக்கருவாகும்.

இவ்விலக்கியம் எவ்வாறு அமையவேண்டும் என்ற இலக்கணம் பற்றி வீரமாமுனிவர் தமது சதுரகராதி நூலில் உழத்திப்பாட்டு எனும் பகுதியைக் கூறும் போது, "கடவுள் வணக்கம், முறையே மூத்தபள்ளி, இளையபள்ளி, குடும்பன் வரவோடு அவன் பெருமை கூறல், முறையே அவர் வரலாறு, நாட்டு வளம், குயிற்கூவக் கேட்டல், மழை வேண்டிக் கடவுட் பரவுதல், மழைக்குறியோர்தல், ஆற்றின்வரவு, அதன் சிறப்புக் காண்டல் இவற்றிற்கிடையிடை அகப்பொருட்டுறையும் கூறிப் பண்ணைத் தலைவன் வரவு, பள்ளிகளிருவர் முறையீடு, இளையவளை அவன் உரப்பல், பள்ளன் வெளிப்படல், பண்ணைச் செயல் வினவல், அவன் அது கூறல், ஆயரை வருவித்தல், அவர் வரல், அவர் பெருமை கூறல், மூத்தபள்ளி முறையீடு, குடும்பன் கிடையிருந்தான் போல வரல், அவனைத் தொழுவில் மாட்டல், அவன் புலம்பல், மூத்தபள்ளி, அடிசிற் கொண்டுவரல், அவன் அவளோடு கூறல், அவன் அவளிடம் மன்னிப்புக் கேட்டு வேண்டல், அவள் மறுத்தல், அவன் ஆற்றல், அவள் அவனை மீட்க வேண்டிப் பண்ணைத் தலைவனைப் பரவல், விதை முதலிய வளம் கூறல், உழவர் உழல், காளை வெருளல், அது பள்ளனைப் பாய்தல், பள்ளிகள் புலம்பல், அவன் எழுந்துவித்தல், அதைப் பண்ணைத் தலைவர்க்கு அறிவித்தல், நாற்றுநடல், விளைந்தபின் செப்பம் செயல், நெல் அளத்தல், மூத்தபள்ளி முறையீடு, பள்ளிகளுள் ஒருவருக்கொருவர் ஏசல், என இவ்வுறுப்புகள் உறப் பாட்டுடைத் தலைவன் பெருமை

ஆங்காங்கு தோற்றச் சிந்தும் விருத்தமும் விரவிவர இவற்றாற் பாடுவது'' எனக் கூறுகிறார்.[10]

இங்குக் கூறப்பட்ட இலக்கணம் முழுக்க முழுக்கப் பள்ளின் இலக்கணமே ஆயினும், உழத்திப்பாட்டு என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது. எனவே 18ஆம் நூற்றாண்டில் பள்ளும் உழத்திப்பாட்டும் ஒன்றே எனக் கருதும் குழப்ப வளர்ச்சியைக் காண முடிகிறது. இம்முறையிலேயே வீரமாமுனிவர் இயற்றிய தொன்னூல் விளக்கத்திலும், வேங்கடசுப்பையரின் பிரபந்த தீபிகையிலும் பள்ளின் இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

**பள்ளும் பெயரும்**

பள்ளு நூல்கள் பிற சிற்றிலக்கியங்கள் போன்றே குறிப்பிட்ட வரையறைக்குட்பட்டுத் தத்தம் பெயர்களைப் பெற்று விளங்குகின்றன. பெரும்பாலான பள்ளு நூல்கள் பாட்டுடைத் தலைவனோடு தொடர்புடைய ஊர்ப்பெயரோடு இணைந்துள்ளன. **முக்கூடற் பள்ளு, குருகூர்ப் பள்ளு, தில்லைப் பள்ளு, சீகாழிப் பள்ளு** பாட்டுடைத் தலைவனாகிய இறைவன் எழுந்தருளியுள்ள ஊர்ப் பெயரோடு தொடர்பு பெற்றுள்ளன.

**வடகரைப் பள்ளு, சேற்றூர்ப் பள்ளு, திருப்புனவாயிற் பள்ளு** ஆகியன பாட்டுடைத் தலைவனாகிய குறுநில மன்னரின் ஊர்ப் பெயரோடு தொடர்பு பெற்றுள்ளன.

சில பள்ளு நூல்கள் பாட்டுடைத் தலைவன் பெயராலேயே விளங்குகின்றன. **செண்பகராமன் பள்ளு, கண்ணுடையம்மை பள்ளு** ஆகியன இதற்குச்சான்றுகளாகும்.

இவ்வாறாகப் பள்ளு நூல்கள் அவை கொண்டுள்ள பொருண்மைகளுக்கு ஏற்ப பெயர்களைப் பெறுகின்றன.

பள்ளு இலக்கியத்தின் பொதுத் தன்மையையும் அது பெயர் பெறும் விதத்தினையும் கண்ட நாம் பள்ளு இலக்கியங்களுக்குள்ளே உள்ளசிலசிறப்பானமுரண்பாடுகளைக் காண்போம்.

பிற்காலத்து எழுந்த பள்ளு இலக்கியங்களில் சிற்சில கூறுகளை மாற்றியும், புதிய உறுப்புகளை இணைத்தும் தத்தம் கவித்திறனைக் கவிஞர்கள் வெளிப்படுத்தினர். ஆற்று

வெள்ளத்தில் அணையடைப்பு, இளையபள்ளி பள்ளனுக் கிட்ட மருந்தைச் செய்யும் முறை, அம்மருந்தின் இயல்பு மற்றும் தாலாட்டு என்னும் புதிய உறுப்புகளைப் பெற்று விளங்குகிறது **குருகூர்ப் பள்ளு**.

மாடு முட்டியமையால் பள்ளன் மயங்கி வீழ்ந்தான் என்றே பொதுவாகப் பெரும்பாலான பள்ளு இலக்கியங்கள் கூறுகின்றன. ஆனால் இதற்கு மாறாகக் **குருகூர்ப் பள்ளு, திருவாரூர்ப் பள்ளு** முதலியன காலில் கொழுக்குத்தி மயங்கி வீழ்ந்தான் பள்ளன் என்று செப்புகின்றன. **திருமலை முருகன் பள்ளு, கண்ணுடையம்மை பள்ளு** ஆகியவற்றில் இது போன்ற காட்சியே இடம்பெறவில்லை என்பதும் குறிப் பிடத்தக்கது.

குருகூரார் என்று வைணவர்கள் விதந்து போற்றும் நம்மாழ்வாருடைய புகழ் பேசும் **குருகூர்ப் பள்ளு, பராங்குசப் பள்ளு** எனவும் **பள்ளேசல்** எனவும் **திருக்குருகூர்ப் பள்ளிசை** எனவும் பிற பெயர்களைக் கொண்டும் அழைக்கப் படுகிறது. பிற பள்ளினைவிட வடிவால் சிறிய இந்நூல், ஏறத்தாழ நூறு செய்யுட்களையே கொண்டு, காப்பு, பாயிரம், தாலாட்டு முதலிய பகுதிகளையுடையதாகப் புதுமை பயக்கிறது. அகத்துறைப் பாடல்கள்இருபதாகப் பெருகி, நூல் தொடர்பற்று அமைகின்றன. பள்ளுக்குரியனவான ஏசல், பண்ணையார்பெருமை கூறல்முதலியன அளவில் சுருங்கியே வருகின்றன. எனவே பள்ளு வடிவின் வாயிலாக நம்மாழ் வாரின் அருளிச் செயல்களை எடுத்துரைப்பதையே இந்நூல் முக்கிய நோக்கமாகக் கொண்டு அமைகிறது.

தத்தம் நாட்டு வளத்தைப் பள்ளியர் மாற்றி மாற்றி பாடுவது என்பது பள்ளு இலக்கிய மரபு. **வையாபுரிப் பள்ளு,** மூத்த பள்ளி நாட்டின் வளம்பாட, இளைய பள்ளி ஊர்வளம் பாடுவதாக அமைந்துள்ளது. மழை வேண்டி முப்பது தெய்வங்களுக்குரிய பலிபூசைகள் படைத்துத் தொழுது பரவிய பள்ளருக்கு, முருகப்பெருமான் பெரியாள் என்பவள் மீது அருள் ஏறி 'மழை தந்தோம்' என்று வரமளிப்பதாக வரும் பகுதியும் இப்பள்ளில் காணப்படும் புதிய உறுப்பு ஆகும்.

**திருமலை முருகன் பள்ளு**, கும்மி பாடல்களையும் தருகின்றது. **கண்ணுடையம்மன் பள்ளு** நூலில், முளைப்

பாட்டும், கும்மிப்பாட்டும், ஊர்த்தேவதைகளைப் பாடிப் பரவலும் உண்டு.

பெரும்பான்மையான பள்ளுகள் இறைவனைப் பாடற்றலைவனாகக் கொண்டு பாடுவதே மரபு என்பதை முன்னரே கண்டோம்.

ஆனால், **செண்பகராமன் பள்ளு** போன்றனவே மானிடனைப் பாடல் தலைவனாகக் கொண்டு எழுந்துள்ளன. இப்பள்ளுவின் பிறிதொரு தனித்தன்மை, இதன்கண் அமையும் கிறித்தவச் சார்புச் செய்திகளே. கோவைக் குளத்திலுள்ள இஞ்ஞாசியார் கோயில், கன்னியாகுமரி அலங்கார நாயகிக் கோயில், கோட்டாற்றின் சவேரியார் கோயில் முதலிய கிறித்தவ ஆலயங்களுக்கு இவர் உதவியாக இருப்பதுடன், மருமக்கள் பேரர் பெயர்களும் கிறித்தவப் பெயர்களாக உள்ளன. இந்நூலின் தனிச்சிறப்பே சமயத்தோடு தாய்மொழி பற்றுப் பற்றி வலிந்து பேசுவதாகும் என்பார் பேராசிரியர் ச.வே. சுப்பிரமணியம் அவர்கள்.[11]

இவ்வாறு காலச் சூழலுக்கேற்பவும், புலவர் தம் கற்பனைத் திறனுக்கேற்பவும், பிற்காலத்து எழுந்த பள்ளு நூல்கள் அமைப்பில் சற்று மாறுபட்டு விளங்குகின்றன என்பதை மேலே கண்ட செய்திகளால் அறியலாம்.

**பள்ளு நாடக இலக்கியம்**

பள்ளு இலக்கியங்கள் என்று கூறுவதைவிட, பள்ளு நாடகங்கள் என்று கூறுவதே பெரும்பாலான வழக்கு. பள்ளு இலக்கியங்கள் உழவுத் தொழில் பற்றிய செய்தியைப் பொருண்மையாகக் கொண்டிருந்தமையாலும், சமுதாயத்தின் உழைக்கும் வருக்க மக்களாகிய மருதநிலத்துப் பள்ளர்களின் வாழ்க்கை வரலாறு, பழக்க வழக்கங்கள், ஒழுகலாறுகள் ஆகியவற்றை விரித்துரைப்பன ஆதலாலும் இவ்விலக் கியங்கள் நாடகங்களாகவும் நடிக்கப் பெற்றன. எந்தெந்த ஊரின் இறைவன் மீது பள்ளு நாடகங்கள் இயற்றப்பட்டிருக் கின்றனவோ, அந்தந்த இறைவன் திருமுன்னர்த் திருவிழாக் காலங்களில் பள்ளு நாடகமாக நடத்தப் பெற்றது. திருவரங்கத்தில் திருவூறல் விழாவின் போது பள்ளுநாடகம் நடந்ததைக் குறித்து, 'கோயிலொழுகு நூல் குறிப்பிடும் செய்தியை முன்னரே கண்டோம். **திருவாரூர்ப் பள்ளும்**

திருவாரூர்க் கோயிலில் நாடகமாக நடிக்கப்பெற்றதாகச் செவிவழிச் செய்தி ஒன்று உண்டு என ந.வீ. செயராமன் கூறுவார்.[12]

இன்றும் சில ஊர்களில் திருவிழாக் காலங்களில் பள்ளு நாடகம் நடத்தப்படுகிறது. குறவஞ்சி, பள்ளு, நொண்டி நாடகம் ஆகிய மூவகை நாடகங்களும் பிற்காலத்தில் பொதுமக்களால் விரும்பப்பட்ட, புகழ்பெற்ற நாடகங்கள். பள்ளு நாடகம் கிராமப்புறங்களில் நடத்தப்பட்டமைக்கு,

> **''பள்ளேசலுக்கும் கள் சாராயத்துக்கும்**
> **பத்தெருதையும் வித்தான் காணாண்டே''[13]**

எனவரும் **வையாபுரிப் பள்ளு** நூலின் அகச்சான்று பகுதிகள் துணை செய்கின்றன.

**தனிநாடக நூல்கள்**

பள்ளு நாடகங்கள் பொதுமக்களால் விரும்பி வரவேற்கப்பட்ட நிலையில் பள்ளு இலக்கியங்களினின்று வேறுபட்ட பள்ளு நாடக நூல்களும் தனியே எழுந்தன. **'முக்கூடற் பள்ளு நாடகம்**, இம்முறையில் எழுந்ததே. **'முக்கூடற் பள்ளு' 'முக்கூடற் பள்ளு நாடகம்'** இரண்டும் முற்றிலும் வேறான இலக்கியங்கள். **முக்கூடற் பள்ளு** நூலை இயற்றிய ஆசிரியர் பெயர் அறிதற்கியலவில்லை. ஆனால் **முக்கூடற் பள்ளு** நாடகத்தின் ஆசிரியர் வேளான் சின்னத்தம்பி என்னும் என்னயினாப் புலவர் எனத் தமிழ்ப் புலவர் வரிசை மூலம் அறியலாம். இந்நாடகத்துள் மிகுதியான நாடகப் பாக்கள் - புதிதாக நாடகத்துக்கென்றே எழுதப்பட்ட இசைப்பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அத்துடன் **வையாபுரிப் பள்ளு** நூலிலிருந்தும் கூட இந்நாடக நூலுள் இருபாக்கள் இடம் பெற்றுள்ளன. மேற்சொன்ன இவ்விரண்டு நூலைப் பற்றிக் குறிப்பிடும்போது பேராசிரியர் ந.வீ. செயராமன் கூறும் கருத்து ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. இவ்விரண்டு நூலுக்கும் வேறுபாடு அறியாத நிலையில் முக்கூடற் பள்ளை இயற்றியவர் வேளான் சின்னத்தம்பி அல்லது என்னயினாப் புலவர் என்று பிழையாகக் கூறுவாரும் உளர். **முக்கூடற் பள்ளு** 175 பாடல்களை உடையது. **முக்கூடற் பள்ளு நாடகம்** 320 செய்யுட்கள் உடையது''[14] என்பதன் மூலம் பள்ளு நூலில் **முக்கூடற் பள்ளு** வேறு **முக்கூடற் பள்ளு நாடகம்** வேறு என நாம் தெற்றென அறியலாம்.

**அகத்துறைப் பாடல்கள்**

பள்ளு இலக்கியங்களில் இடையிடையே அகத்துறைப் பாடல்களும் சில இடம் பெற்றுள்ளன. வெள்ளம் வரவு என்னும் பகுதியில் பல நூல்களிலும் ஒவ்வொரு பகுதிக்கு முன்னதாகவும் வேறுசில நூல்களில் இடையிடையேயும் இத்தகைய அகத்துறைப் பாடல்களைக் காணமுடிகிறது.

வெள்ளம் வரவுப் பகுதியில் அகத்துறைப் பாடல்கள் இடம்பெற வேண்டும் என்பது பள்ளின் இலக்கணத்தைக் கூறும் சதுரகராதியிலும் கூறப்பட்டுள்ளது. புதுவெள்ளம் காணச் செல்லும் நிலையில் ஆடவரும் பெண்டிரும் ஒன்று கூடுதல் இயல்பு. ஆதலால், இத்தகைய காட்சியில் அகத் துறைப் பாடல்கள் அமைய வேண்டும் எனப் பள்ளு ஆசிரியர்கள் எண்ணியிருக்கலாம். பண்டை இலக்கியமான சிலப்பதிகாரத்தில் ஆற்று வெள்ளம் பெருகிவரும் காலத்து, சோழ நாட்டு மக்கள் புதுவெள்ளத்தில் நீந்திக் குளித்து இன்புறுதலை ஆதிமந்தி ஆட்டனத்தி வரலாறு நமக்கு எடுத்துக் கூறுகிறது. அதுபோன்று பண்டை மரபின் எச்சமாக அல்லது நினைவு கூறுவதாக இப்புது வெள்ள வரவுப் பகுதியில் அகத்துறைப் பாடல்களைப் பள்ளு ஆசிரியர் அமைத்தாரோ என்று எண்ணத் தோன்றுகிறது. எது எவ்வாறாயினும் நாடக இயக்குநர்கள்போலே, கதை அமைப்பின் சீர்மை குறையாமல் இடையிடையே அந்த இடத்தில் அகத்துறைப் பாடல்கள் அமைய வேண்டும் எனப் பள்ளு ஆசிரியர்கள் அகத்துறைப் பாடல்களை அமைத்திருப்பது அவர்தம் நுண்மாண் நுழைபுலத்திற்குத் தக்க சான்றாக அமைகிறது எனலாம்.

வெள்ளம் வரவுப் பகுதியில் முதலில் இடம் பெற்ற அகத்துறைப் பாடல்கள் காலப்போக்கில் நூல் முழுதும் ஒவ்வொரு பகுதியிலும் இடம் பெற்றிருக்கலாம் எனக் கருதுகிறார் பேராசிரியர் ந.வீ. செயராமன் அவர்கள்.[15]

இறைவன் மீது இயற்றப்பெற்ற **திருமலை முருகன் பள்ளு** போன்ற நூல்களில் இப்பகுதிகளில் அகத்துறைப் பாடலுக்குப் பதிலாக இறைவனைப் போற்றும் துதிப்பாடல்கள் இடம் பெற்றுள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கது.

தமிழ் இலக்கிய மரபில் அகத்திணை யொழுகலாறுகளுக் கேற்ப, நாடகவழக்கைச் சார்ந்த இத்தகைய அகத்துறைப் பாடல்கள் பள்ளு இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.

**பள்ளும் ஏசற் கூறும்**

பள்ளு நூல்களின் இறுதிப் பகுதியாக அமைந்தது பள்ளியரின் ஏசல் பகுதி ஆகும். இப்பகுதியில் மூத்த பள்ளியும் இளைய பள்ளியும் ஒருவரையொருவர் ஏசிக் கொள்வர். வாழ்க்கையில் ஒரே கணவரை ஏற்றுக்கொண்டு அவன் அன்பைப் பெறுவதற்காக இருமனைவியரும் போட்டி போடுகின்ற முறையில் இவ்வேசல் பகுதி தொடங்கும். இரு பள்ளியருக்குமிடையே உரிமைப் பூசலாக எழுந்த பொருண்மை பின்னர் சமயப் பூசலாக மாறுகிறது. பள்ளு இலக்கியங்களில் மூத்த பள்ளி ஒரு சமயத்தவளாகவும், இளைய பள்ளி மற்றொரு சமயத்தவளாகவும் இருப்பது மரபு. இருவரும் ஒரே சமயத்தினராக இருந்தால் அவர்கள் வழிபடும் கடவுளர்கள் வேறுபட்டிருப்பர். இம்முறையில் பள்ளியர் களின் பாத்திரப் படைப்பை அமைப்பது பள்ளு இலக்கியத்தின் மரபு. நூலின் இறுதியில் சமய வேறுபாடுகளோ உருவ வேறுபாடுகளோ ஒழிந்து இரண்டும் ஒன்றே என்ற பெரும் சமயக் கோட்பாட்டுத் தத்துவம் சிறப்பான முறையில் விளக்கப்பட்டிருக்கும். இத்தகைய பொருட் சிறப்பால் பள்ளு இலக்கியத்துள் ஏசல் பகுதியே சிறப்புடைய பகுதியாகப் பலரால் கொள்ளப்படுகிறது.

இவ்ஏசலின் சிறப்பு கருதியே பள்ளு இலக்கியத்தைப் 'பள்ளேசல்' என்று பல நூல்கள் குறிப்பிடுகின்றதைக் கூறலாம். மேலும் இப்பகுதிக்குரிய பொருட் சிறப்பால் பள்ளு என்ற இலக்கியத்தினின்றும் ஏசல் என்ற தனி இலக்கியவகை ஒன்று பிற்காலத்தில் தோன்றியது குறிப்பிடத்தக்கதாகும். **தாய் மகளேசல், திருக்கோட்டியூர்-திருப்புத்தூர்ப் பள்ளேசல், வள்ளி தெய்வானை ஏசல், இலட்சுமி-பார்வதி ஏசல்** முதலியன இவ்வகையில் கிளைத்து எழுந்த சில இலக்கிய நூல்களாகும்.

சிற்றிலக்கிய வரிசையில் நீண்ட நெடிய வரலாற்றினைப் பெற்ற, பள்ளு இலக்கியத்தின் தோற்றம் வளர்ச்சி நோக்கி

செலுத்தப்பட்ட ஆய்வில் கீழ்கண்ட செய்திகள் நம்மால் உய்த்துணர முடிகிறது.

தொல்காப்பியம் காலம் தொட்டே இவ்விலக்கியத்திற் கான மூலக்கூறுகள் விரவிக் கிடந்தன என்றும், செவ்வியல் இலக்கியத்தில் நாட்டுப்புறப் பொருண்மைகளை உள்வாங்கிக் கொண்ட இலக்கிய வகைகளில் இதுவும் ஒன்று என்பதும், உழவுத் தொழிலுக்கும் உழுதுண்டு வாழ்வார்தம் புகழுக்கும், செப்புப் பட்டையமாக விளங்கும் இலக்கியப் படையல் இப்பள்ளு இலக்கியம் என்றும் நாம் துணிந்து கருதலாம்.

அவ்வகையில் இவ்எட்டையபுரப் பள்ளு தென்பாண்டி நாட்டின் பெருமை பேசும் சொல்லோவியம் என்றால் மிகையாகாது. இதுவரை பள்ளிற் சிறந்த நூலாக முக்கூடற் பள்ளையே கூறுவர். தென்னிளசைப் பள்ளைப் படிப்போர் இதன் இலக்கியத் தரம் கருதி, முக்கூடற் பள்ளுடன் ஒப்பக் கருதுவர் எனத் துணிந்து கூறலாம்.

## அடிக்குறிப்பு

| | | |
|---|---|---|
| *1.* | தண்டியலங்காரம் | *ப.2* |
| *2.* | தமிழ் இலக்கியக் கொள்கை | *ப.70* |
| *3.* | சிற்றிலக்கியத் திறனாய்வு | *ப.12* |
| *4.* | ....... மேலது ....... | *ப.15* |
| *5.* | இலக்கிய வகையும் வடிவும் | *ப.388-389* |
| *6.* | நவநீதப் பாட்டியல் | *ப.75* |
| *7.* | கோயிலொழுகு | *ப.35* |
| *8.* | இலக்கிய வகையும் வடிவும் | *ப.388* |
| *9.* | ....... மேலது ....... | *ப.389* |
| *10.* | சதுரகராதி | *ப.321* |
| *11.* | இலக்கிய வகையும் வடிவும் | *ப.372* |
| *12.* | சிற்றிலக்கியச் செல்வம் | *ப.178* |
| *13.* | வையாபுரிப் பள்ளு | *ப.76* |
| *14.* | சிற்றிலக்கியச் செல்வம் | *ப.178* |
| *15.* | ....... மேலது ....... | *ப.178* |

# எட்டையபுரப் பள்ளு நூல் ஆராய்ச்சி

தமிழகத்தின் வடபகுதியில் நெற்களஞ்சியமாக விளங்கும் தஞ்சையைப்போல், தென் பாண்டி நாட்டின் நெற்களஞ்சிய மாக விளங்குவது திருநெல்வேலிச் சீமை என்றால் மிகை யாகாது. ஒரு சமயம் ஈண்டு விளைந்த நெல்லைச் சிவபிரான் இயற்கைச் சீற்றத்தின் போது வேலியாக இருந்து காத்ததால் இச்சீமை திருநெல்வேலி என்றும் ஈண்டு எழுந்தருளியிருக்கும் இறைவனுக்கு நெல்லையப்பர் என்றும் பெயர்கள் அமைந்ததாகத் திருநெல்வேலி புராணம் கூறும்.

தாமிர வருணி ஆற்றின் இருமருங்கும் சோலைகளாகக் காட்சிதரும் இத்திருநெல்வேலிச் சீமை தமிழக வரலாற்றில் பல்வேறு வகையானும் சிறப்புற்று விளங்குவதாகும். தமிழகத்தை முடிமன்னர் மூவர் ஆண்ட காலம் முதல், அதே தமிழகத்தைச் சிறு சிறு கூறுகளாக எழுபத்திரண்டு பாளையங்களாகக் கூறு போட்ட நாயக்கர் காலம் வரை இம்மண்ணின் வரலாறு முதுமையானது. போற்று தற்குரியது.

**எட்டையபுரம்:** அத்தகைய சிறப்புடைய இச்சீமையில் உண்டான பல்வேறு பாளையங்களில் எட்டையபுரம் என்பதும் ஒன்றாகும். பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அஃதாவது கி.பி. 1524 முதல் 1564 வரை மதுரையில் அதிகாரம் செலுத்தி வந்த விசுவநாத நாயக்கரே தமிழகத்தில் பாளைய முறையைப் புகுத்தியவர்.

'விஜய நகர மா மன்னரது ஆட்சி நிலைகுலைந்த பின்பு ஆந்திரத் தலைவர் பலர் தம் பரிவாரங்களோடு தமிழ்நாட்டிலே குடியேறி வாழத்தலைப்பட்டனர். இங்ஙனம் தென்னாட்டிற் போந்த வடுகத்தலைவர்களிற் ஒருவர் எட்டப்ப நாயக்கர். அவர் பெயரால் அமைந்த ஊர் எட்டையப்புரம்' என்ற ஒரு செய்தியினைத் 'தமிழகம் ஊரும் பேரும் - குலமும் கோவும்' என்ற நூலின் வழியாக அறிய முடிகிறது.

இப்படித் தொடங்கிய எட்டையபுரம் முன்னர் சொன்னபடி விசுவநாத நாயக்கர் மற்றும் தளவாய் அரியநாதர் ஆகியோரால் எழுபத்திரண்டு பாளையங்களில் ஒன்றாகப் பிரகடனம் செய்யப்பட்டது.

இவ் எட்டையபுரப் பாளையம் பிற பாளையங்களில் இருந்து பெரிதும் வேறுபட்டு, சீரும் சிறப்புடனும் திகழ்ந்தது. நாயக்கர்களின் மைய ஆட்சியாக விளங்கிய மதுரையைப் போன்றும், கிழக்கு இராமநாத புரத்தை ஆண்டுவந்த சேதுபதி

ஆட்சி போன்றும் தென் பாண்டி நாட்டில் எட்டையபுரம் பெரும் புகழோடு விளங்கியது.

பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கம், தமிழகத்தில் மிகுந்த குழப்பத்தை உருவாக்கியிருந்த போதிலும் எட்டைய புரம் போன்ற சமஸ்தானங்களில் நடைபெற்ற ஆட்சியில் மக்கள் மகிழ்ச்சியுடனேயே இருந்தனர். இச் சமஸ்தானத்தில் தமிழ்ப் பயிர் செழித்து வளர்ந்தது. தமிழ் புலவர்களுக்குத் தென்பாண்டி நாட்டில் இவ்விடம் தாய் வீடாகவே திகழ்ந்தது. ஆகவேதான் இச் சமஸ்தானத்தின் ஆட்சியாளர்கள் மீது பலவகைப் பிரபந்தங்கள் பல்வேறு புலவர்களால் பாடப் பட்டன. அப்படிப் பாடப்பட்டப் பிரபந்தங்களின் ஒன்றுதான் 'எட்டையபுரப் பள்ளு'. இப் பனுவலின் பண்பினை இனி விரித்துக் காண்போம்.

**நூற் பெயர்க் காரணம்:** பொதுவாக இலக்கியங்கள் நூற்பெயர் பெறும் நிலையில், பாட்டுடைத் தலைவன் அருஞ்சிறப்புகள் முதன்மைப் படுத்தப்படுகின்ற காரணத்தால் அவனது பெயரினைக் கொண்டோ , ஓர் ஊரின் பழஞ் சிறப்புகளை விதந்து கூறும் காரணத்தால் அவ்வூரின் பெயரைத் தாங்கியோ, ஒரு தலத்தில் எழுந்தருளியுள்ள, இறைவனின் அருளிச்செயல்களால் வெளிப்படும் அத்தலத்தின் புனிதமும் அருட்பேறும் உலகறியும் வண்ணம் இறைவனின் திருப் பெயரிலோ, ஒரு மன்னன் என்பவன் பகைவரிடத்திருந்து நாட்டை மட்டும் காப்பவன் அன்று, அவன் அந்நாட்டைப் பசிப்பிணியிலிருந்தும் வறுமைப் பிடியில் இருந்தும் மக்களைக் காக்கும் கொடை மறம் கொண்டவனாகவும் விளங்க வேண்டும் என்ற அறநூல்கள் கூறும் கோட்பாட்டிற்கு ஒப்ப வாழும் மன்னர்களின் வள்ளன்மைத் திறம் வெளிக் கொணர வேண்டி அம்மன்னவர் பெயரிலோ நூலின் தலைப்பை அமைப்பது புலவர்தம் மரபு. இம் மரபு சிற்றிலியக்கியத்திற்கும் பொருந்தும்.

சிற்றிலக்கியத்தின் ஒரு கூறான பள்ளு இலக்கியத்தில் முக்கூடற்பள்ளு, குருகூர்ப் பள்ளு, தில்லைப் பள்ளு, சீகாழிப் பள்ளு போன்றன ஊர்ப்பெயர் கொண்டும், பறாளை விநாயகர் பள்ளு, திருமலை முருகன் பள்ளு, மன்னார் மோகனப் பள்ளு போன்றன இறைவனின் திருப்பெயர் கொண்டும், வடகரைப் பள்ளு, சேற்றூர் பள்ளு போன்றன குறுநில மன்னர்தம் சிறப்பைக் கூறும் வகையில் அவர்தம் ஊர்ப்பெயரோடு இணைந்தும் பெயர் பெற்றுள்ளதைக் காணலாம். அவ் வகையில் ஈண்டு அறிமுகமாகும் 'எட்டையபுரப் பள்ளு' என்ற

பெயர் இந்நூலுக்குப் பெரிதும் பொருந்துமாற்றை இனிக் காண்போம்.

இந்த ஏட்டின் தலைப்பக்கத்தில், 'எட்டையபுரம் எசமான் மகாஸ்ரீ மகாராசா அவர்கள் பேரில் பள்ளு பிரபந்தம், நன்றாக' என்ற ஒரு குறிப்புக் காணப்படுகிறது. எட்டையபுரம் என்ற பெயர் நூலோடு இவ்விடத்தில் அவ்வூரைத் தலைமை யிடமாகக் கொண்டு ஆட்சி செய்த மன்னர்களின் சிறப்பைக் கூறவே, அவ்வூரின் பெயரை இணைத்துக் கூறப்பட்டுள்ளது.

எட்டையபுர சமத்தானத்தை ஆண்ட குமார யெட்டேந் திரன் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளைத் தேடி நாம், வரலாற்று நூல்களை நுணுகிப் பார்த்தால் தக்க தரவுகளாக நமக்குக் கிடைப்பது குறைவே. இது குறித்துக் கலைக்களஞ்சியத்தில் ஒரு குறிப்புக் காணப்படுகிறது. அது வருமாறு: எட்டையபுரத்தில் 1816 முதல் 1839 வரை ஆட்சிச் செலுத்திய வேங்கடேசுவர எட்டப்ப மகாராசாவின் மூத்த மகன். 1939ல் பட்டத்திற்கு வந்தார். இசையில் ஆழ்ந்த புலமை உடையவர் தமிழ் தெலுங்கு மொழிகளில் வல்லவர். 'கார்த்திகேய' என்ற முத்திரையுடன் பல கீர்த்தனை உருப்படிகள் இயற்றியுள்ளார். தோடி ராகத்தில் **'கயவதன'** என்று தொடங்கும் புகழ்பெற்ற பாடல் இவர் இயற்றியதுதான். பாலசுவாமி தீட்சிதர் போன்ற இசைப் பாடலாசிரியர்களும் சுப்புகுட்டி அய்யா, மீனாக்ஷிசி சுந்தரம் அய்யா, சுப்பையா அண்ணாவி முதலான வீணை வித்துவான்களும், திருநெல்வேலி தேசிங்கு பாகவதர், மதுரை ராமய்யர், தேவூர் சுப்பிரமணி அய்யா முதலான பாடகர்களும் இவரது அவையை அலங்கரித்தார்கள். இவருடைய முழுப் பெயர் ஜகதீசுவர ராமகுமார எட்டப்பர் என்பதாகும்.

குமார எட்டேந்திரருக்குப் பிறகு அவரது தம்பி முத்துசாமி எட்டப்பருடைய மகன் ஜகதீசுவர குமார எட்டப்பன் பட்டத்துக்கு வந்தார். இவர் ஆங்கிலம், தெலுங்கு, தமிழ் இம்மூன்று மொழிகளிலும் தேர்ந்தவர். மகாபாரதத்தில் மிக்க ஈடுபாடு கொண்டவர். இவரது வேண்டுகோளின்படி **'கவித்திரயம்'** என்று அழைக்கப்பெறும் மூன்று சிறந்த ஆந்திரக் கவிஞர்களால் இயற்றப்பட்ட மகாபாரதத்தை,, சுப்பராம தீட்சிதர் தமிழில் மொழிபெயர்த்ததாகவும் அந்நூல் அச்சேறிய தாகவும், 'சம்பிரதாய பிரதர்சினி' என்னும் தெலுங்கு நூலி லிருந்து தெரியவருகிறது. (கலைக்களஞ்சியம், தொகுதி-10ப.212).

கடிகை முத்துப் புலவர் தமது மதன வித்தார மாலையில் வேங்கடேச ரெட்டன் என்ற மன்னரைப் பற்றிக் குறிப்பிடும் போது குமாரரெட்டேந்திரனை வேங்கடேச ரெட்டனது

மைந்தன் எனக் கூறுகிறார். தென்னிளசைப் பள்ளு இக்குமார ரெட்டேந்திரன் சிறப்புகள் பற்றிப் பேசுகிறது.

ஆகவே, எட்டையபுரத்தை ஆண்ட மன்னர்களின் பெயரில் இந்நூலின் பெயரை அமைப்பதைவிட, வரலாற்று நிகழ்வுகளை நம் மனக் கண்ணுக்குக் கொண்டு வரும் ஆற்றல் பெற்ற எட்டையபுரம் என்ற பெயரால் எட்டையபுரப் பள்ளு என அழைப்பதே இந்நூற்பெயருக்குப் பொருத்தமாக இருக்கும்.

தெள்ளு தமிட்டேரிளசை (125) பன்னு தமிட்டேரிளசை (36) பாட்டியாதிக்கம் என்னும் இளசை(15) வளர் இளசை (14) வீசியபுகழ் மேவு தென்னிளசை (2) தென்னிளம் புனம் (126) என்று இளசையின் பெயர் சேர்த்தே புஞ்சைக் காடு கூட இந்நூலில் விளிக்கப்படுகிறது. சத்திரத்தின் பெயர் கூட இளசை என்ற சொல்லைப் பெற்று இளசையர் சத்திரம் (181) எனப் பல்வேறு நிலைகளில் தென்னிளசை பாராட்டப்படுவதால் இந்நூலின் பெயர் 'தென்னிளசை' என்ற பெயரைத் தழுவி தென்னிளசைப் பள்ளு என அமைவதே சிறப்புக்குரியதாகும். மேலும் காப்புச் செய்யுளில் நூலாசிரியர் தெள்ளத் தெளிவாக 'பூமேவு முல்லைப் புயன் குமார ரெட்டேந்திரன் மேற் பரவு தென்னிளசைப் பள்ளிசையை விள்ளுவதற்கு' என்று கூறுவதன் மூலம் பாட்டுடைத் தலைவன் சிறப்பைச் சொல்லும் தென்னிளசைப் பள்ளு என ஐயம் திரிபு இன்றித் தெளிவாக நமக்குச் சுட்டிக் காட்டிச் சென்றுள்ளதால் இந்நூலுக்குத் தென்னிளசைப் பள்ளு என்ற பெயரும் சாலப் பொருந்தும்.

பாரதி காலத்தில் இருந்தே எட்டையபுரம் என்ற பெயர் பெரிதும் பேசப்பட்டு வருகிறது. இந்திய விடுதலை இயக்கத்தில் தென்னிளசை என்ற பெயரைவிட எட்டையபுரம் என்ற பெயரே அதிக முக்கியத்துவம் பெற்றுள்ளது. மேலும், இன்றைய நடைமுறையில் எட்டையபுரம் என்ற பெயரே நிலைப் பெற்றுள்ளது. அதுமட்டுமின்றி தென்னிளசை என்ற இலக்கியப் பெயர் முற்றிலும் அறுகிவிட்டது. படிப்போர்க்கும் கேட்போர்க்கும் எட்டையபுரப் பள்ளு என்று சொன்னவுடன் எட்டையபுர சமஸ்தானத்தைப் பற்றிய நூல் எனத் தெளிவாகப் புரிய வரும். ஆகவே, இந்நூலுக்குத் தென்னிளசைப் பள்ளு என்ற இலக்கியப் பெயரைவிட இன்றைய வழக்கில் இருக்கும் எட்டையபுரம் என்ற பெயரோடு இணைத்து எட்டையபுரப் பள்ளு என்ற பெயரில் அமைவதே சாலப் பொருந்தும் எனத் துணிந்து கூறலாம்.

**நூலாசிரியர்:** இந்நூலைப் பாடியவர் நாகூர் முத்துப்புலவர் என்பாராவார். இப்புலவர் சோழ நாட்டைச் சேர்ந்த தஞ்சைக்கு அடுத்திருக்கும் கடற்கரை நகரான நாகூர் ஊரைச் சேர்ந்தவர் ஆவர். இப்புலவர் பாட்டுடைத் தலைவன் மீது மட்டும் அல்லாது. அவனது முன்னோரான 'வேங்கடேசுர எட்டப்ப பூபதி' என்பார் மீதும் செய்யுட்கள் பாடியுள்ளார் என உ.வே. சாமிநாதைய்யர் கூறுவர். (அப்பாடல்கள் சில பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன).

இப்புலவர் எட்டயபுரம் கடிகை முத்துப் புலவர் காலத்தவர். இக்கடிகை முத்துப் புலவர் கி.பி. 1705 முதல் கி.பி. 1725 வரை, ஆட்சி புரிந்து வந்த 'ஜெகவீரராம வெங்கடேசுர எட்டப்ப நாயக்கர் காலத்தவர் என ஐயர் குறிப்பின் துணை கொண்டு அறிய முடிகிறது. இப்புலவர் குமார எட்டேந்திரன் அவையில் முதன்மைப் புலவராக விளங்கினார். நாகூர் என்பது இன்றைய நாகப்பட்டினமாகும். அன்னை வேளாங் கன்னியின் திருக் கோயிலும் இசுலாமியர் போற்றும் புனித பள்ளிவாசலும் பெற்று இன்று இவ்வூர் ஆன்மிகச் சிறப்பு மிக்க ஊராக விளங்குகிறது.

**நூல் எழுந்த காலம்:** கடிகை முத்துப் புலவர் என்பார் எட்டையபுர சமஸ்தானத்தின் அரசுப் புலவராக விளங்கினார் என்பதும், ஜெக வீர ராம வெங்கடேசுர எட்டப்ப நாயக்கர் மீது, 'சமுத்திர விலாசம்', காமரசமஞ்சரி போன்ற நூல்களைப் பாடினார் என்பதும், இவர் கி.பி. 1705-1725 உட்பட்ட மேற்சொன்ன மன்னர் காலத்தவர் என்பதும் முன்பே கண்டோம்.

ஏட்டின் முன்னோ அல்லது பின்னோ நூல் எழுந்த காலத்தையோ அல்லது படி எடுத்த காலத்தையோ குறிப்பிடப் படாததால், கலைக்களஞ்சியக் குறிப்பின் துணைக்கொண்டு இந்நூலின் காலம் கி.பி. 19ஆம் நூற்றாண்டு எனக் கருதலாம்.

**நூலில் வரும் பாத்திரங்கள்:** மூத்த பள்ளி, இளைய பள்ளி, பள்ளன், பண்ணைக்காரன் போன்ற முதன்மைப் பாத்திரங்களும், பண்டாரம், கோனார் போன்ற வந்து போகும் பாத்திரங்களும் குறிப்பிடத்தகுந்த பாத்திரங்களாகும். இவையன்றிப் பாத்திரமாக எந்தப் பணியும் செய்யாமல் பிற பாத்திரங்கள் வாயிலாகவோ அல்லது ஆசியர் வாயிலாகவோ பாராட்டுப் பெறும் பாத்திரமாக வரும் பாட்டுடைத் தலைவன் பாத்திரம் பாத்திரமாக மட்டும் அல்லாது பள்ளு இலக்கிய வகைக்குரிய கோட்பாட்டுப் பாத்திரமாக அமைவது ஈண்டு எண்ணத்தக்கது.

பள்ளு இலக்கியத்தின் இலக்கியக் கோட்பாட்டுச் சிறப்பில் அடுத்து அமைவது இவ்விலக்கியத்தில் பேசப்படும் முதன்மைப் பாத்திரங்களுக்குப் பெயர் இடாமையே. தொல்காப்பியம் இலக்கியத்திற்கு வகுத்துக் கொண்ட, 'சுட்டி ஒருவர் பெயர் கூறார்' என்ற விதியை இப்பள்ளு இலக்கியம் சமூக நடை முறைகளை விளக்க வேண்டிய கடமை இருப்பதனால் முன்னோர் வகுத்த நெறியை ஏற்று அவ்வழியிலேயே சென்று தனது இலக்கியத்திலும் பெயர் சுட்டும்வழக்கைப் பெறவில்லை என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

சங்க இலக்கியத்தில் அகப்பாடல்களில் பாத்திரப் பெயர்களைக் கூறாமல் பாத்திரங்களை உரள விட்டு ஒவ்வொரு வரும் அப்பாத்திரங்களைப் படிக்கும் போது அப் பாத்திரமாக அவரவர்கள் மாறும் வாய்ப்பினை ஏற்படுத்துவது போன்று, பள்ளு இலக்கியமும் படிப்போரைத் தன்வசப்படுத்தி விடுதலைக் காணலாம். எடுத்துக்காட்டாகக் கலித்தொகையைக் கற்பவன் அப்பாத்திரங்கள் பற்றி என்ன கற்பனை செய்வானோ அதே போன்று பள்ளு இலக்கியம் படிக்கும் போது மேற் சொன்ன நிலையே ஏற்படுதல் என்பது கண்கூடு.

பொதுவாக, சமூக நோக்கு கொண்ட நாடகங்களில் பாத்திரங்களின் பெயர்களைச் சுட்டி விட்டால் அது நாடகத்தைச் சுவைப்போர்க்கு ஒரு வகையில் துணை நின்றாலும் கூட அந்நாடகம் ஏற்றுக் கொண்ட பொருண்மைக்கு அத்தனை துணை நிற்காது. எடுத்துக் காட்டாக ஒரு நாடகம் ஒரு குறிப்பிட்ட சமூகம் பற்றிப் பேசுவதாக வைத்துக் கொள்வோம். சமூகத்தின் பெயரோ, அல்லது அப்பாத்திரம் ஏற்றுக்கொண்ட சாதியப் பெயரோ தெரியாதபடி நாடக ஆசிரியன் படைபானேயானால் அது பொதுமையாக எல்லோரையும் போய்ச் சேரும். ஆனால் பெயர் சுட்டப்பட்டால் அது ஒரு குறிப்பிட்ட சார்புடை யோர்க்கே என்ற அளவில் குறுகிப் போய்விடும். மேலும் பாத்திரங்கள் பெயர் சுட்டப்படுமேயானால் படைப்பாளன் தான் எண்ணியதை வலிந்து கூற இலயாது. இப்படிப்பட்ட படைப்புக்கள் படைப்போரையோ அல்லது காண்போரையோ பெயர் சுட்டப்பட்ட நிலையில் அக்கருவை ஏற்றுக் கொண்டவர் அல்லது ஏற்றுக் கொள்ளாதவர் என்ற இரு பெரும் பாகுபாட்டை ஏற்படுத்தி விடும்.

பள்ளு இலக்கியமும் இதற்கு விதி விலக்கன்று. மேற் சொன்ன நான்கு பாத்திரங்களும் பொதுநிலையில் நின்று எடுத்துக்கொண்ட கோட்பாட்டினை வலுவுடன் கூறுவதா லேயே, இப்பாத்திரங்கள் வாயிலாக இலக்கியம் நிற்கிறது.

இந்நூலில் குமார யெட்டேந்திரன் புகழைப் பேசுவதையே மூத்த பள்ளியும் இளையபள்ளியும் ஏற்றுள்ளனர். ஏனைய நூல்களில், இந்நிலையில் சமயம், ஊர் அல்லது நாடு என்ற வகையில் வேறுபட்ட விவாதங்கள் மூத்த பள்ளிக்கும் இளைய பள்ளிக்குமிடையே நடை பெறுவதாகக் காட்டுவது பள்ளு இலக்கியங்களின் மரபு. பெரும்பாலும் மன்னன் குமார எட்டேந்திரனின் பெருமையைப் பேசும் இச்சகோதரிகள் தன் கணவனான பள்ளனின் அன்பைப் பெறுவதில் ஒரவருக்கொருவர் எதிரும் புதிருமாக உள்ளனர்.

**மூத்தப்பள்ளி:** இந்நூலின் முதல் நாயகியாக மூத்தபள்ளி விளங்குகிறாள். இந்நூலாசிரியர் இவளை, எந்தச் சமயத்திற்கும் உரியவளாகக் காட்ட வில்லை. எந்த கடவுளையும் பரவுபவளாகவும் காட்ட வில்லை. மாறாகத் தென்னிளசை குமார எட்டேந்திரன் புகழ் பரப்பும் பெண் குயிலாகவே படைத்துள்ளார். இவளின் வருகையைப் பற்றிச் சொல்லும் போது அவளின் தகைமை சொல்லாற்றல், நடையழகு, புற அழகு போன்றவைகள் வெளித் தெரியும்படி யாக, 'தன் இணை இலை எனும் வற்பணமும்... இன்ன முத நன்னயப்பேச்சும் மேலும்

**''கன்னல்வில் மத சன்னத மனமுந்**
**சரந் தெரிந்திரு குரும்பைய தெனவுஞ்**
**சரிந்திடு தனமும்... ''** (பா: 6)

என்ற வகையில் அவளது புற அழகையும், மூத்த பள்ளி யின் பணி, இளையவள் சண்டை விளையப் பேசுங் காலத்து அதனை எதிர்கொள்ளும் திறமே ஆகும். இதனைப் பாடல் 6-ன் வாயிலாக ஆசிரியர் விளக்கிக் கூறுவது காணத்தக்கது.

**இளைய பள்ளி:** இந்நூலின் இணை நாயகியாக இளையபள்ளி படைக்கப் பட்டிருக்கிறாள். இவள் பள்ளனை முறையாக மணந்தவளில்லை. இப்பாத்திரம் பெரும்பாலும் பள்ளு இலக்கியப் புலவர்களால் கவர்ச்சியோடு, காண்போர்க்குக் காமத்தை விளைவிக்கும்படியாகவும், துடுக்குமிக்க பேச்சுடையவளாகவும், பள்ளனை மிகவிரும்பி நேசிப்பவளாகவும் படைத்துக் காட்டுதல் என்பது மரபு. அவ்வகையில் இந்நூலிலும் கீழ்வரும் பாடல் மூலம் ஆசிரியர் படைத்துக் காட்டுவதைக் காணலாம்.

**''நெஞ்சினி லொருமிப் பிருமாப்பு**
**மிஞ்சிய கரும பொற் றிரு காப்பும்**

நெருங்கிய தனக்கு ரும்பையும் சுமந்திழை
மருங்கது துவளத்
தஞ்ச மென் றவர்களு மூபேந்திரன்
குஞ்சரத் துரைக்குமா ரெட்டேந்திரன்'' (பா: 8)

மேலும், 'இதனில் வெஞ்சிலை யினையாம் நுதல்' 'அஞ்சினம் தனையெழுதிய விழி' 'பஞ்சரந்தனில் வளர் கிறி மொழி', 'நெஞ்சினி லொருமிப் பிருமாப்பு'. 'நெருங்கிய தனக் குறும்பை' அதைச்சுமப்பதால் துவளும் அவளது இடை என்ற வகையில் இளைய பள்ளியின் வடிவ ஒப்பனையை ஆசிரியர் இங்கு விரித்துக் காட்டுகிறார்.

**பள்ளன்:** குமார ரெட்டேந்திரன் புகழினை எடுத்துக் கூறும் வகையில் பண்ணையில் மேழிப்பணியாளனாக இப்பள்ளன் திகழ்கிறான். ஏனைய பள்ளு இலக்கியங்களில் மூத்த பள்ளிக்கும், இளைய பள்ளிக்கும் இடையே நடை பெறும் சமயம், நாடு, ஊர் போன்ற பொதுமைகளில் யார் யாரை விடச் சிறப்புற்றவர் என்ற விவாதத்தின்போது இறுதியாகச் சந்து செய்விக்கும் பணியைப் பள்ளன் செய்வதாக அமைப்பது மரபு. ஆனால், இப்பள்ளு நூலில் பள்ளன் காதல் உணர்வில் விஞ்சி நிற்பது யார் என்ற வினாவிற்கும், கணவன் என்ற நிலையில் யாருக்கு உரியவன் என்ற கேள்விக்கும். யாரை அனுசரித்து நடக்க வேண்டும் என்ற பேச்சுக்கு விடை தருபவனாகவும் விடை தருகையில், ஒருவரறியாமல் ஒருவரைப் பாராட்டுவதும், மாடு குத்தியபோது இருவரின் ஒத்த அன்பையும், பரிவையும், பாசத்தையும் பெறுபவனா கவும் விளங்குகிறான். இவன் வருகையைச் சொல்லும் போது

''துங்க மிகுந்திடுங்கை
வங்கி முனை யெனவே
துள்ளு மீசை முறுக்கி
தெள்ளிளமையர்
எங்கு மிவ் வாத குறும்பு
இங்கா மோ வென்று
காதிலிட்ட கடுக்கண்
கன்னந் தொட்டடிப்பப்போல்
அங்கு மிங்கு மசையத்
தொங்கு திங்கின்றே
சுற்றியாடிச் சேறாடிக்குட்
கொண்டாடிப் பாடியே

**சிங்காசனபதி**
**குமாரயெட்டேந்திரன்**
**பண்ணைச் செழிக்கு மெட்டக்**
**குடும்பன் தோன்றினனே''** (பா: 10)

என்று கூறுகிறார்.

'துள்ளு மீசை முறுக்கி' காதிலிட்ட கடுக்கண் அங்கு மிங்கு மசைய என்ற வரிகளின் மூலம் பள்ளனின் எழிலினையும் பண்ணைச் சேவையைச் செய்வதே தன் கடமையாகக் கொண்ட பள்ளனைப் பற்றிக் கூறும் போது மாமன்னன் குமார யெட்டேந்திரன் பண்ணை செழிக்கப் பாடுபடும் நல்லோன் என்பதை இரண்டே வார்த்தையில் 'பண்ணை செழிக்க' என்று ஆசிரியர் கூறியிருக்கும் நயம், நயம் என்ற நோக்கில் மட்டும் அல்லாது பள்ளனின் பண்பினையும் எடுத்துக் காட்டும் வகையில் அமைந்துள்ளதைக் காணலாம்.

நூல் முழுக்க விரவி வரும் பள்ளனின் பல்வேறுபட்ட காட்சிகள் அவன் சிறப்பை எடுத்தியம்ப வல்லன. பள்ளன் மற்றும் பள்ளர் பெருமக்கள் வீர விளையாட்டான மாடு பிடித்தல் பற்றிப் புலவர் இந்நூலில் கூறும் போது ஒரு நேர்முக வருணனையே தந்து விடுகிறார் எனலாம்.

**மாடு பிடித்தலும்- பள்ளர் பெருமக்களும்:**

தொடக்கவிழாவாக குயவனார் குதிரைமேல் வந்து அய்யனை வணங்கிக் கும்பிட்டுத் தூபதீபங்காட்டிப் பள்ளர் பெருமக்களுக்கு அன்புடன் இறை திருநீறு நல்கினார். இதனை,

**.. குதிரை சுமந்து**
**குயவனார் வந்தார் வணங்கி அய்யனைக்**
**கும்பிட்டு மனத் தெம்பிட்டு உடனே**
**இயல்புடன் பரிதனைச் சன்னதி முன்**
**னிலங்க நிறுத்தினார் பரியை நிறுத்தித் தூபங்**
**கொடுத்துப் பள்ளர்**
**கையில் விபூதி கொடுக்க யிரு**
**கையினாலே வாங்கிப்பூசிக்கொண் டெருது கட்டுவாராம்** (பா:37)

இப்படித் தொடங்கும் விழாவில் கலந்து கொள்ளும் மாடுகளுக்குப் பருத்தி விதையுடன் மதுவும் கலந்து தரும் மரபு இருந்து இருக்கிறது. இதனால் திண வெடுத்த மாடுகள் மேலும் வீரியம் கொண்டு வன்மையாகத் தாக்க முடியும் என்றும் இதன் காரணமாக மாடு பிடிபடாது தப்பிக்கும் என்றும் கருதினார்.

'ஆட்டி யூற்றின் பருத்தி விதையியல் பினு
மதுவு மவர்க்குங் கலந்து
கூட்டி யூட்டம் போட்டு மாட்டைக்
கொணர்ந்து கட்டுவாராம்' (பா: 37)

என்ற பாடல் வழி அறியலாம்.

இப்போது குடும்பன் மாடு பிடிக்கத் துணிகிறான். இதனை ஆசிரியர் கூறும் போது, அவன் தன் வீரம் வெளிப்பட என்ன என்ன அங்க அசைவுகள் செய்கிறான் என்பதை,

''கொட்டமிட்டுக் கொக்கரித்துப் புயங்கள்
தட்டி வடத்திற் கட்டும் எருதைக் கெட்டியாகவே
யெட்டன் குடும்பன் தொட்டுப் பிடிப்பானாம்'' (பா: 37)

''மதத்தினால் வந்தெதிர்த வெருதை
வலிய போய்க்கடும் புலியைப் போலவே
குதித்தினம் புனப் பண்ணைப் பச்சேரிக்
குடும்பர் பிடிப்பராம்'' (பா: 37)

என்ற வரிகள் எத்தனை அழகாக விவரிக்கின்றன.

பொதுவாக இவ்வகையான நிகழ்வுகளில் பல்வேறு இடங்களில் இருந்து மாடுகள் கலந்து கொள்ளும் என்பது ஆசிரியரின் கூற்று வழி அறியலாம்.

'பூச்சன் நமக்கு வாச்சு தென்றொரு
போருக்காளையை முடுக்கவே' (பா: 37)

'வாயத்த ராம னூற்றுப் பண்ணை
மள்ளர் கட்டிய வெள்ளைக் காளை' (பா: 37)

'குருமலைதனில் வாழும் கெச்சிலாக்
குடும்பன் கட்டிய யிடும்புக் காளை' (பா: 37)

போன்ற வரிகள் மூலம் இந் நிகழ்வில் கலந்து கொண்ட பல்வேறு பட்ட காளைகளைப் பற்றி அறியலாம்.

இப்படிச் சீறிவரும் காளையை முண்டுதட்டி நுனிக் கொம்பு பிடித்து வல்லமையான மாட்டை அடக்கும் குடும்பர் தம் வீரம் எண்ணி இன்புறத் தக்கது.

மாடு பிடித்தல் என்ற இப்பகுதியே இப்பள்ளு இலக்கியத்தின் வீரம் செறிந்த பகுதியாகும். கதையின் நீட்சிக்கு இதுவே பெரிதும் துணை நிற்பது. இவ் விழா வில் மாடு

தாக்கியதால் குடும்பன் காயம் அடைகிறான். கதையின் உணர்ச்சி மயமான கட்டமாக இப்பகுதி அமைகிறது எனலாம்.

மூத்த பள்ளியும் இளைய பள்ளியும் இணைந்து கவலையுறும் பகுதி இதுவாகும். பண்ணைக்காரனிடம் குடும்பனைப் பற்றிப் புகார் செய்து அவனுக்குக் காலில் கட்டை கட்டச் செய்தவள் மூத்தபள்ளி. அவள் தன் கணவன் மாடுதாக்கி மயங்கி விட்டான் என்பதைக் கேட்டதும் துடிக்கும் துடிப்பு பள்ளன் அல்லது குடும்பன் எனும் பாத்திரத்தின் மீது அவள் காட்டும் பரிவு காண்போர்க்கு இரக்கம் ஏற்படுத்த வல்லது.

பொதுவாகப் பள்ளு இலக்கியத்தில் விரசம் விரவி இருக்கும் என்பது விமர்சகர் கருத்து. பள்ளன் இருமனைவி யரை மணப்பதும் அதிலும் குறிப்பாக இளையவள்பால் அவன் மயங்கி நிற்றலும், அவள் செய்கையினைக் கண்டு காமம் எழப் பெருவதும் கொக்கோகம் கூறும் பல்வேறு புணர்ச்சிக்கலைகளைப் பள்ளன் அவர்களைக் கொண்டு பயின்று பார்ப்பதும் ஆசிரியரால் இந்நூலில் பல இடங்களில் சுட்டப்பட்டுள்ளது.

காதல், காமம், விரசம் போன்ற சொற்கள் இலக்கியத்தில் பல்வேறு பொருண்மைகளில் கையாளப்படுகின்றன. ஆனால் இல்லற வாழ்க்கைக்குக் காமம் என்பது இன்றியமையாதது. ஆகையால் தான் வள்ளுவர் காமத்தைக் கூறும் போது,

**"உப்பமைந் தற்றால் புலவி அது சிறிது**
**மிக்கற்றால் நீள விடல்"** (குறள் 1302)

காமத்தின் மறுபுறமான ஊடல் என்பது உணவிற்கானும் உப்பு போன்று இருத்தல் வேண்டும் என்பார். ஊடலின் முடிவு கூடலில் அமையும் என்பது யாவரும் அறிந்ததே. ஆகவே காமத்தின் கதவாக அமைந்த ஊடலுக்கு உப்பு அளவாவது போல, உணர்ச்சிகளின் வெளிப்பாடாக அமையும் காமமும் அதுபோல அமைவதே சிறப்புடையது என்பது பெறப்படும்.

விரசம் என்பதும் கூடற்கலையில் ஒரு படியே. விரசம் சரசம் என்பது இல்லையேல் காமம் சுவைக்காது என்பதை எடுத்துக்காட்டவே அது அளவோடு பள்ளன் வாயிலாகப் பள்ளு இலக்கியத்தில் பேசப்படுகிறது. அவ்வகையில் இக் குடும்பன் அல்லது பள்ளன் பாத்திரம் இப்பணியைத் திறம்படச் செய்துள்ளதை உணரலாம்.

**ஆண்டை எனும் பண்ணைக்காரன்:**

பள்ளு இலக்கியத்தின் சிறப்புறு பாத்திரங்களில் 'பண்ணைக்காரன்' என்ற பாத்திரமும் ஒன்று. பள்ளு இலக்கியத்தின் அங்கதப்பகுதிக்கு இப்பாத்திரமே முதன்மை யானதாக விளங்குகிறது. சமூக ஏற்ற தாழ்வுகளையும், சமூகத்தில் காணும் சீர்கேடுகளையும் சித்திரிக்க ஒவ்வொரு படைப்பாளியும் புதிய உத்திகளைப் பயன்படுத்தி அற்புதமான பாத்திரங்களைப் படைப்பர். (எடுத்துகாட்டாக நாடக ஆசிரியன் வில்லன் பாத்திரத்தையும், காப்பியங்கள் சூழ்ச்சிக்காரனையும், புதினங்கள் மாறுபட்ட குணாதிசயம் உடையவனையும் போன்ற பல்வேறு பாத்திரங்களைக் கொண்டுப் படைப்பாளி தான் எண்ணிய சமூகச் சீர்கேடுகளை விளக்கி காட்டுவான்.)

அவ்வகையில் பள்ளு இலக்கியத்தில் பண்ணைக்காரன் பாத்திரமும் மேற்சொன்ன பொருண்மையை விளக்குவதற் காகவே அமைந்தது எனலாம். மேட்டுக்குடி மக்களுக்கும் கீழ்த்தட்டு மக்களுக்கும் உள்ள வேற்றுமைகளையும், கீழ்த்தட்டு மக்கள் மேற்தட்டு மக்களை எவ்வகையில் எல்லாம் பிரமிப்போடு எண்ணிப்பார்க்கிறார்கள் என்பதை விளக்கிக் காட்டவும், கீழ்த்தட்டு மக்களின் மன உளைச்சலை வெளிப்படுத்தவும் காணுகின்ற அல்லது படிக்கின்ற சுவைஞர்களைச் சிந்திக்க வைப்பதற்கும் பெரிதும் பள்ளு இலக்கியத்தில் பயன்படுவது இப்பண்ணைப் பாத்திரமே.

தீண்டாமைக்கு வித்திட்டு, சமூகத்தின் முதுகுத்தண்டை வளைக்கப் பார்க்கும் கொத்தடிமைச் சிந்தனை கொண்ட கொடியவர்களைக் கீழ்தட்டு மக்கள் அங்கத வடிவில் விமர்சித்துக் கொள்வது ஒரு சிறந்த உத்தியாகும். பள்ளியர் இருவரும் பண்ணைக்காரனைப்பற்றி வருணிக்கும் பகுதி நகைச்சுவையோடு அற்புதமும் கூடியதாகும். பொதுவாகக் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்காத ஒரு கிராமத்துப் பெண் தனது உள்ள வெறுப்பினை வெளிக்காட்டும்போது உயர்ந்த ஆடம்பரமான சொற்களைப் பயன்படுத்தமாட்டாள். அவள் மனதில் பண்ணைக்காரனைப் பற்றி எழும் உருவத்தைப் படம் பிடித்துக் கூறும் போது அதனில் கிராமிய நளினத்தை நன்றாய்ப் பயன்படுத்தி இருப்பதைக் காணலாம்.

அப்பண்ணைக்காரனின் தலையைச் சட்டிபோல் விளங்கும் குட்டிக் குரங்கின் தலைக்கும், அவனது கன்னத்தைச் சாணத்தைக் கொண்டு தட்டப்பட்ட எருவிற்கும், கொடுவாய் ஒழுகும் தன்மையதாக விளங்கும் வாயும், நெட்டையான உருவமும் கொண்ட இப்பண்ணைக்காரனை ஒட்டகத்திற்கும், வளைந்து கிடக்கும் அவன் முதுகுதனைக் கூனனின் முதுகினோடும் ஒப்பிட்டு மகிழ்கிறார்கள் பள்ளியர். இப்படிப் பல நிலைகளில் பண்ணைக்காரனைக் கேலி பேசும் இப்பெண்கள், அவன் முக அழகை வருணிக்கும்போது மொந்தை முகப் பண்ணைக்காரன் என வருணிப்பர். கீழ்மைக் குணங்களே நிறையப் பெற்ற இப்பண்ணைக்காரனைப் பற்றிக்கூறும் போது,

**"கொன்னிக் கொன்னி வாய்திறந்து**
**சன்னை சொல்வார் மன்று**
**குட்டி போட்ட நாய்போலே**
**சள்ளிட்டுக் கொள்வார்** (பா: 71)

என்றும்,

**"நன்னி சின்னப் பொன்னி**
**யிங்கே வாடி யென்பாராம்**
**நெட்டை நாச்சிமகள் பேச்சி**
**தன்னைச் சீச்சி யென்பாராம்"** (பா: 71)

என்ற வரிகள் மூலம் பண்ணைக்காரனின் உளப் பண்பாட்டுத் தன்மையைப் பள்ளியர் வாயிலாக ஆசிரியர் விளக்கியிருப்பதைக் காணலாம்.

நாட்டில் மழை பொழிகிறது; வெள்ளம் பெருகுகிறது. அது பண்ணை வயல்களிற் றாவுகிறது. பண்ணைக்காரன் வருகிறான் நெல்லு விதைப்பதற்கான ஆயத்தங்களைச் செய்யுமாறு உசுப்புகிறான். இக்கட்டமே பள்ளு நூல்களிற் பண்ணைக்காரன் தோன்றிடுங் காட்சியாகும். மூத்தபள்ளி தன்குறைகளைச் இவனிடம் முறையிடுகிறாள். இவன் விசாரணை செய்கிறான். பண்ணைக்கணக்குக் காட்டும்படி பள்ளனைக் கேட்கிறான்.

பண்ணைக்காரன் நடுவிற் காட்சியளித்து மறைகிறான். கதை வளர்ச்சிக்கு முக்கியமான பாத்திரமான போதும், இவன் தோன்றும் காட்சிகள் மிகச் சிலவாகும்.

இவ்வாறாக இவ்விலக்கியத்தில் பாத்திரங்களின் தன்மைகளை அறிந்த நாம் இனி, இந்நூல் தரும் இலக்கிய இன்பத்தைச் சற்றுக் காண்போம்.

எட்டையபுரத்துத் தோன்றலான குமார யெட்டேந்திரன் புகழைப் பாடுவதே இப்பள்ளு இலக்கியத்தின் சிறப்புறு நோக்கமாகும். இந்நோக்கத்தை நிறைவேற்றவே நூலாசிரியர் பள்ளுப் பிரபந்தத்தைக் கருவியாகப் பயன்படுத்தி உள்ளார். குமார யெட்டேந்திரனே பாட்டுடைத்தலைவர். அவரின் பெருமையையே பள்ளியர் இருவரும் பாடிப்பாராட்டு கின்றனர். கவியும் தன் கூற்றாகக் 'அறிவுறுத்தல்' செய்கிறார். இவ்வறிவுறுத்தற் போதனைகள் நூல் முழுவதிலும் ஊடுருவி நிற்கின்றன.

இனி, நூலின் நலனை அறிந்து கொள்ளத் திருநெல் வேலியைச் சுற்றியுள்ள புவியியல் அறிவும், தென்பாண்டி நாட்டு வழக்காற்று மொழிநடையும் நன்கு தெரிந்திருத்தல் வேண்டும். நூலின் மொழி நடை இலகு வானதாகும்; இதன் யாப்பு சிந்து, கலிப்பா, விருத்தம் எனப் பலவிதமான பா வகைகளால் ஆனது. இந்நூலில் உவமை, உருவகங்கள் மிளிர்ந்து காணப் படுகின்றன. மேலும், கற்பனை வளம் எல்லையற்றது; படித்து இன்புறத்தக்கது. நூலின் நடை ஆற்றொழுக்கு போல் செல்வதுடன் இனிய சந்த அமைப்பும் கொண்டது.

**சாடிப்பகை ஞர்சமரைவென்று வெற்றிமலர்**
**சூடிச்செகம் புரக்குந் துங்ககுமா ரெட்டன்வெற்பிற்**
**தேடிப்புதைத்த தனஞ்செங்கையத னாற் றிரக்கக்**
**கூடிப்பிரிந்த கொழுனர் வருவாரே.** (பா: 54)

என்ற 'கலிப்பா' பாடலின் சந்த நயம் அது உணர்த்தும் குமாரயெட்டேந்திர மாமன்னரின் வீரச் சிறப்பையும் ஈண்டுக் கண்டு மகிழலாம். இறுதியில் காணும் 'கூடிப்பிரிந்த கொழுநர் வருவாரே! என்ற வரி பரணியிலக்கியத்தின் சாயலாக அமைந்துள்ள பாங்கை நினைவு படுத்துகிறது.

**இயற்கை வருவணனை**

பள்ளு இலக்கியம் பல்வேறு நிலைகளில் இயற்கையை வருணிப்பதைக் காணலாம். நாட்டு வளம் கூறல், குயில் கூவல், மழைவளம் கூறல், 'ஆற்றில் வெள்ளம் வருதல்' ஆகிய

பகுதிகளில் இயற்கை மணம் இயைந்து காணப்படுவதை உணரலாம். பள்ளியர் தம் நாட்டு வளம் கூறும்போது:

**மேதிபால் மடை வாயினிற் கொட்ட**
**விரைந்து மீன்மடுவில்லேறி முட்டக்**
**காதசைத்துக் கரப்போர்கள் விட்டதன்**
**கன்ற தாமென நின்று புகட்ட**
**மோதிப் பாய வயலெங்குங் குமிட்ட**
**முளை வளர்ந்து விளைந்து நெற்கடடப்**
**பூதலத் திலிணையிலை யென்று**
**புகழ்முது குடிநாடெங்கள் நாடே.** (பா: 20)

என்ற இப்பாடலில் எருமையானது தன் கன்றை எண்ணி சுரந்த பாலானது மடை வாயினிற் நிறைய, அம்மடையின்கண் வாழும் மீன் இனங்கள், மடைவாய் விட்டு எருமையின் மடுவைமுட்ட, எருமையானது கரவையாளர்கள் அவிழ்த்து விட்ட கன்றுகளே அவை என மருகி நின்று பால்புகட்ட, இதன் காரணமாக நீரோடு பாலும் பெருகி ஓடியதால் நெல் அடர்த்தியாக முளைகட்ட, கழனி எல்லாம் பச்சைப் பசேல் எனக் குளிர்ந்து காண, எங்கும் திருமகள் நடமிடும்படியாக அமையும் வயற்காட்டினைப் பெற்ற நன்நாடனே! எனப் புலவர் வருணிப்பது எத்தனை அழகானது! இன்பம் தருவது! இப்பாடலோடு, திருப்பாவை தந்த ஆண்டாளின் 'கரவைக் கன்றினங்கள்' என்ற பாடல் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

**நல்லூர் வருணனை:**

பள்ளியர் தங்கள் ஊரை வருணிக்கும் போது எத்தனை நயம் மிளரப் பேசுகின்றனர் என்பதைக் கீழ்வரும் பாடல் உணர்த்தும்:

**போர் செய்யும் மன்மதப் பயல்மீது**
**புருவவெஞ்சிலை தன்னைக் குளித்துக்**
**கூர்செய்மை விழிப்பாணத்தை யேற்றிக்**
**கொடுஞ் சமரிட்டுக்கைவாள் பறித்தே**
**மேறிடும்பள்ளப் பெண்கள் முழந்தாளில்**
**இட்டுக்கூ னிரும்பென்ன வளைத்தே**
**சேர்நெற்கதிர்த் தாள்கொய்யப் பார்த்திருந்**
**தென்னிளசை நல்லூரெங் களூரே.** (பா: 21)

இப்பாடலில் மன்மதன் வாயிலாக மனத்திற் எழும் காமத்தைப் புலவர் இருநிலையில் வகுக்கின்றார். ஆண்களை

மன்மதப்பயல் என உருவகம் செய்வதோடு, அவனை வெல்லுவதற்காகப் பள்ளப் பெண்கள் பிறையென வளைந்த தங்கள் புருவங்களை ஆயுதமாகக் கொண்டும், கூர்மையான விழி நோக்கை அம்புகளாகக் கொண்டும், போராடும் ஆண்களை வென்று அவர்கள் கைவாள்களைப் பறித்து, அவற்றைக் கொண்டு, விளைந்து வளைந்து கிடக்கும் நெற்றாட்களை அறுக்கின்ற பெருமை பெற்ற ஊர், எனப் பேசுவதைக் காணலாம்.

**குயிற்சிந்து:** பள்ளு இலக்கியத்தின் ஒரு கூறாக இப்பகுதி விளங்குகிறது. அது மட்டுமல்லாமல் இப்பகுதி பள்ளு இலக்கியத் திற்கே உரியதாகவும் கருதப்படுகிறது. இப்பகுதியில் புலவர் தம் நுண்மாண் நுழைபுலம் கொண்டு அவர்தம் தமிழாற்றலை வெளிப்படுத்துவார். புலவர் பெருமக்கள் இப்பகுதியில் அந்நாட்டு மன்னன் வளமுடன் நலமாக வாழ வேண்டும் என நினைந்து, மன்னவர் தம் முன்னோர்களை நினைவு கூர்ந்து வாழ்த்துவ தும் ஒரு மரபாகவே தெரிகிறது.

நீண்ட பாடல்களைக் கொண்ட இப்பகுதியில் அம்மன்னனின் ஊர் வளம் மிகச்சிறப்புற எடுத்தியம்பப் படுகிறது. இப்பள்ளு இலக்கியத்தில் இப்பாடற்பகுதியில் நெடிய இரண்டு பாடல்கள் வாயிலாகக் குமார ரெட்டேந்திரனின் முன்னோர்களையும் அவன் உடன் காலத்து வாழ்வோரையும் வாழ்த்துவதைக் காணலாம். அவர்களில் சிலர்: 'குமார முத்து மகாராசன்', 'அருள்கன கலைதானன் வெங்கடேசு ரட்டுமால்' அருங்குளத்தில் மேவு சின்னச்சாமி அய்யன்' 'வல்வேறு கொற்றவன்', 'சுந்தர மன்மதனெனவும் வந்ததுரை மாப்பிள்ளைச் சேரத்தண் தயால்' சந்தமன மார்பனெனுஞ் சிந்தமண்பூபதி' நிலைமை பெறு சதுரகிரி தலைமைகரிக்கோட்டை நகர், 'நல்மகிமை பெறு கம்பள குலம் ஒன்பது' மதுர தமிழ்மொழி கடிகை நமசிவாயப் புலவர், தமிழ்த்தளவாய் முத்தயபூபதி 'தானாதிபதி சங்கரலிங்கமான பரன்', முத்தண்ண மகிடன் 'தாது கமழ் புயன் குழந்தை வேலு', 'ராயசம்' மற்றும் சுருதிநெறி தவறாத குருமொழியை மறவாத தொண்டர்கள் எனச் சிறப்புடையோர்கள் பற்றிய வாழ்த்துக் குறிப்புகள் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன.

**கார்கால வருணணை!**

இப் பள்ளு இலக்கியத்தின் மிகச்சிறந்த கற்பனை வளம் கொண்ட பகுதியாக இப்பகுதி விளங்குகிறது. இக்காலம்

தோன்றினால் என்ன என்ன நிகழும் என்ற பட்டியலை இக்கீழ்வரும் பாடல் தருகிறது.

**தரைமுழுதும் புல்லுண்டாய்ப் பசந்திடுங் கார்காலம்**
**தழுவா மின்னார்களுடம்பசந்திடுங் கார்காலம்**
**வரைமுடியிற் கொந்து கொந்தாய் மஞ்சாடுங் காலம்**
**மருவா மின்னார்க் கதிகாமஞ் சாடுங் காலந்**
**திரையெழு நீர்சுரந்து கலுங்கணை யடைக்குஞ் காலஞ்**
**சிமிழ் முலையில் வேளிகலுங் கணையடைக்குங் காலந்**
**துறையினசைக் குமார யெட்டமேந்திர ராசன்**
**நோய் வரப் பசுங்கிளியைத் தூதனுப்புங் காலம்.(பா: 46)**

இப்பாடலில் பச்சைப்பசேல் என புல் உண்டாகி செழித்துக் காணப்படுவதும், தலைமகன் பிரிந்த காரணத்தால் உடம்பில் பசலை ஏற்பட்டுப் பெண்கள் நிறம் மாறிக் காண்பதும், மலையின் முகட்டில் மேகங்கள் திரண்டு கருங்கொத்தாய் காண்பதும், மழையின் காரணமாக கலுங்கில் நீர் பெருகி அதனால் அலை அடைக்க நீர்கசிவதும், ஆகிய பல்வேறு விதமான நிகழ்வுகளைப் பெற்ற குமார ரெட்டேந்திரன் நகர், கார்காலத்தில் பெண்கள் தங்கள் காதலர்க்குப் பசுங்கிளிகளைத் தூது அனுப்பும் காலம் எனச் செய்திகள் தொகுத்துத் தரப்பட்டுள்ள பாங்கு இங்குப் படித்து இன்புறத்தக்கது.

**தோணிச் சிந்து:** அடுத்து இன்பந்தரும் பகுதியாக அமைவது தோணிச்சிந்து ஆகும். நூலாசிரியர் தனது இசை நயத்தையும் சொல்வளத்தையும் குழைத்துக் கேட்போர் இன்பம் பெறும் வண்ணம் பாடலை அமைத்துள்ள முறைமையைக் கீழ்வரும் பாடலைக் கொண்டு அறியலாம்:

**இரையுதடா ஆற்றுவெள்ளம் யேலேலோ**
**இழுக்குதடா தோணிதனை யேலேலோ**
**வரையின் வெள்ள மானதினால் தெய்த்தென்னா**
**வலுவிசைக் கொண்டடிக்கு தடாயேலேலோ**
**அருள்பெருகு மெட்டீச ரடியிணையை வாழ்த்தடா**
**அம்பிகை யெனுஞ் சோதியம்மனையும் வாழ்த்தடா**
**வரமேவு சகதேவி மலரடியை வாழ்தடா**
**வந்தனை செய்தே வெயிலு வந்தாளை வீழ்த்தடா**
**யேலேலோ. (பா: 68-4)**

இப்பாடலில் வெள்ளப்பெருக்கின் சீற்றம் 'இழுக்குதடா தோணிதனை' என்ற தொடரில் ஆசிரியர் சொல்ல வரும் கருத்தை, சிறிய சொற்களைக் கொண்டு ஒவியமாக அமைத்துள்ள பாங்கு, படித்து இன்புறத்தக்கது. ஆற்றின் இழுவைக்குக் காரணம் கூறப்புகுந்த ஆசிரியர் 'வரையின் வெள்ளம்' என்ற செயலின் மூலம் மலையிற் பெய்த மழை ஆறாகப் பெருகி வெள்ளமாகத் திரண்டு ஒடுவதை வரையின் வெள்ளம் என்ற சொல்லின் வழி நயமுற விளக்கியுள்ளார்.

வெள்ளத்தில் வரும் பொருட்களையும் இவ்வெள்ளம் கண்டு அவர்கள் உற்ற இன்பத்தையும் ஆசிரியர் கூறும்போது,

**மங்கையடித்துடைபோலே அடஅண்ணே - அதோ**
**மலை வாளை வருகுதடா யேலேலோ**
**செங்கையெனக் கா ந்தன் மலர் மேலேலோ**
**செறிவாக வருகுதடா யேலேலோ.** (பா: 68-6)

என, வாளைமீன் மற்றும் காந்தன் மலர் கூட்டம் வருகையையும்,

**தண்கமழும் புனலூடே யேலேலோ**
**கைவளங்கள் வருதோற்றம் யேலேலோ**
....... ....... ........
**''வெண் பணிலமது காந்தம் பதுமலர்**
**வதனமேலெழுங் குமிழி முலை தானெழுந்து''** (பா: 68-5)

என்ற வரிகளின் வாயிலாக நறுமணம் கமழும் நீரோடு பல்வேறு வகையான வளங்கள் மற்றும் நீரின் வேகத்தால் சுழிகள் ஏற்பட்டு, அதன் காரணமாகத் தோன்றிட்ட நீர்க் குமிழிகள் பார்ப்பதற்கு மகளிர்தம் குத்துமுலை போல் விளங்குவதாக ஆசிரியர் வருணிப்பது படித்து இன்புறத்தக்கது.

இதுவரை இயற்கை வருணணைப் பற்றிய செய்திகளைக் கண்ட நாம் வேறுசில செய்திகளாக முறையே: (1) துணைப் பாத்திர அறிமுகம். (2) பல்வேறு கடவுளர் பற்றிய குறிப்புகள் (3) செய்யுள் மொழிவளம் (4) வட்டார வழக்கு (5) பிறமொழிச் சொற்கள் (6) மரபுத் தொடர் (7) இலக்கிய ஆளுமை போன்ற பொருண்மைகள் பற்றிக் காண்போம்.

**துணைப்பாத்திர அறிமுகம்:**

தலைமை பாத்திர அறிமுகம், இணைப்பாத்திர அறிமுகம் என்ற நிலையில் பல்வேறு பாத்திரங்களை முன்னரே

கண்டோம். இப்பகுதியில் பள்ளு நாடக நிகழ்வுடன் இயைந்து வரும் பண்டாரத்தின் வருகை, கோனார் தம் வருகை பள்ளக்குடும்பின் வருகை முதலியனவும் மிகவும் சிறப்பான முறையில் கூறப்பட்டுள்ளன. இப்பாட்டிற்கு எனச் சிறப்பு விளக்கமே வேண்டியதில்லை. பாடல் எளிமையான நடையில் அமைந்திருப்பதால் யாரும் எளிதில் உணர்ந்து கொள்ளலாம்.

பட்டை நாமம் போட்டுக் கொண்டு
பல்லைப் பல்லைக் காட்டிக் கொண்டு
குட்டியு மாட்டையு மோட்டிக் கொண்டு
கோனார் வந்து தோன்றினார்
கையிற் கடைகால் தூக்கிக் கொண்டு
கம்பா லாட்டைத் தாக்கிக்கொண்டு
நெய்யின் மூடைகள் வீச வீச
நெட்டைக் கோனார் தோன்றினார்
முடுக்கி யாட்டைத் துரத்திக் கொண்டு
முன்னும் பின்னும் நிரத்திக் கொண்டு
தடிக்கம் பையும் ஊன்றிக் கொண்டு
தன்மக் கோனார் தோன்றினார்
ஒற்றையிற் றப்பின ஆட்டை
யூசுசூ சென்றோட்டிக் கொண்டு
குற்றஞ் சற்றில்லாம லெட்டக்
கோனார் வந்து தோன்றினார். (பா: 116)

என்ற பாடலில் முதல் இரண்டு வரிகள் கோனார் தம் வடிவ அழகை நமக்கு நகைச்சுவையுடன் தெரிவிப்பதைக் காணலாம். அவர்கள் கையில் எப்போதும் ஆடு ஓட்டும் கம்பும் கடைகால் என்ற ஆட்டை அணைத்து மூடும் பெருங்கூடை (கடைகால்) யும் கையோடு கொண்டுவருவர் என்ற உண்மை புலப்படும் படியாக அவர்களின் சிறு அசைவுகளையும் படம் பிடித்துக் காட்டும் ஆசிரியரின் நுண்மாண் நுழைபுலத்திறம் கண்டு வியக்கத்தக்கது.

**பண்டாரம்:** பூக்கட்டும் தொழிலை உடையவர்களையும் கோயிலிற் சிறு சிறு வேலைகளை ஏற்றுச் செய்யும் மக்களையும் பண்டாரம் என அழைத்தல் நாட்டார் வழக்கு ஆகும். இவர்கள் பெரும்பாலும் வேதியர் பூசைப் பொறுப்பு ஏற்றுள்ள கோயில்களில் துணைநிலையிலும் வேதியர் பூசை புரியாத கோயில்களில் முதன்நிலையிலும் பூசாரியாக இடம்

பெற்றுள்ளனர். இங்குப் பண்டாரம் பள்ளர்க்குரிய பூசைப் பணியை நிறைவேற்ற அருளோடு எழுந்து வருவதாக ஆசிரியர் கூறுகிறார்.

**உண்டான பூசைகளெல்லாம் நிறைவேற்றத்**
**திண்டாடும் பள்ளர்க் குகந்தே யருட்**
**கொண்டா வேசத்தோடு கொண்டாடிக்**
**கொண்டாடி பண்டாரந் தானும்வந்தானே.** (பா: 30)

என்ற பாடலின் வாயிலாகப் பண்டாரத்தின் வருகை மற்றும் பணிச் சிறப்பையும் ஆசிரியர் எடுத்தியம்புகிறார்.

**கோனார்:**

இப்பள்ளு இலக்கியத்தில் ஆடு மேய்க்கும் ஆயர்குலத் தலைமகனாக விளங்கும் கொம்பனார்க்கெல்லாம் குலக் கொழுந்தாய் விளங்கும் கோனார் தம் வருகையைப் பற்றிக் கூறும் முன்னர் இந்நிகழ்விடம் பற்றி நாம் அறிதல் வேண்டும்.

பண்ணைக்காரன் பள்ளனை அழைத்துக் கழனிக்கு உரம் இடவேண்டி ஆட்டுக்கிடை போடக் கோனார்களை அழைத்து வரும்படிக் கூறுகிறான். அவ்விடத்தில்தான் இந்நிகழ்வு இடம் பெறுகிறது.

கோனாரின் வருகையை இந்நூல் நகைச்சுவை ததும்பச் சித்தரித்தல் கண்டு இன்புறத்தக்கது. ஓர் நிழற்படம் எடுத்தாற் போல கேசாதி பாத வருணணையாக இது அமைகிறது.

**குடும்பன் வருகை:**

பள்ளு இலக்கியத்தில் குடும்பனுடைய பங்கு அளப் பரியது. இவனுடைய வருகையைப் புலவர் வருணிக்கும் பாங்கு எண்ணி இன்புறத்தக்கது.

**துங்க மிகுந்திடுங்கை**
**வங்கி முனையெனவே**
**துள்ளு வீசை முறுக்கி**
**தென்னி ளமையர்**
**எங்கு மிவ்வாத குறும்**
**பிங்கர மோவென்று**
**காதிலிட்ட கடுக்கண்**
**கன்னந் தொட் டடிப்பப்போல்**

அங்கு மிங்கு மசையத்
தொங்கு திங்கின்றே
சுற்றியாடிச் சேறாடிக்குட்
கொண்டாடிப் பாடியே
சிங்கா சனபதி
குமார யெட்டேந்திரன்
பண்ணைச் செழிக்கு மெட்டக்
குடும்பன் தோன்றினானே. (பா: 10)

என்ற இப்பாடலில் குடும்பனின் தோற்றம் சித்திரிக்கப் பட்டுள்ளதைக் காணலாம். மேலும் அவனைப் பற்றிக் கூறும்போது,

காமாவெறியுங் கொண்ட
கன்னின் வெறியுந்
துள்ளியெழுந்து தன் வாய்
கொன்னி கொன்னி குழறிச்
சொல்லுந் தில்லு
மல்லாகத் தள்ளாடியே
தன்னைப் புகழ்ந்து மெள்ளச்
சன்னை யிருமலிட்டுத்
தலையசைத் தேப்பமிட்டு
குலவிக் கொண்டே (பா:11)

என, அவன் வரும்போது அவன் அங்கங்களில் ஏற்படும் அவய மாற்றங்களைக் கிராமிய மொழியில் ஆசிரியர் உணர்த்திடுவது நயம் மிகுந்த பகுதியாகக் காணலாம்.

இதுவரைத் துணைப்பாத்திரங்கள் பற்றிய செய்திகளைக் கண்ட நாம் பல்வேறு கடவுளர் பற்றி இப்பள்ளு இலக்கியம் கூறுவது குறித்துச் சிலவற்றைக் காண்போம்.

இந்நூலில் பள்ளர்கள் பூசையிட்டு வணங்கியதாகப் பல்வேறு கடவுளரின் பெயர்கள் இடம் பெறுகின்றன.

"மந்திர சொரூபி வராகி பஞ்சாட்சரி
மாதரி வீரி யகோரி சிவசுந்தரி காளி
வெயிலுவந்தாளம்மை துட்ட மயிட சம்மாரி" (பா: 36)

என்று, பல தெய்வங்கள் பேசப்பட்டு அவற்றிற்கான பூசை பற்றிக் கூறும்போது,

தொழுது கையெடுத்தார் பூசை யொன்றுங்
குறையாம லின்று செய்யென்று நெற்பண்டாரங்
கையினிற் கொடுத்தார்
யிங்கித மாகவே பொங்கலுமிட்டு
கருங்கிடாய் செங்கிடாய் வெட்டுவன் நன்றாய்ப்
பொங்கிய சோற்றினை யங்கே மலை
போலுங்
கங்காளி பீட முன் கொட்டுவார்
குடங்குடமாக யிடந்தெரியாமல்
அடங்கலுமே மதுநிறையப் பார்முன்
னிடும்பு செய்யாமற் குடும்ப ரெல்லோருந்
திடம் பெறவே துதித்துரைப்பார்
துட்ட வயிரவ சுவாமிக் குலைந்திட
முட்டையுஞ் சோறுமே படைப்பாரங்கே
யட்டி பண்ணாமலே சுட்டகறிகள் வைத்
திஷ்டமுடன் தேங்கா யுடைப்பார்.
பூராயம் பேசியே நேராகவே நூறு
சாராயம் குத்தியும் வைப்பார் யெங்கும்
பேராகவே நம்மை நீ ராளு வீரெனச்
சீராக வாழ்த்தித் துதிப்பார் (பா: 30)

மேற்கண்ட முறையில் பூசைகள் நடத்தப்பெற்று இறைவழிபாடு செய்தாக இப்பாடலின் மூலம் அறியலாம்.

**செய்யுள் மொழி வளம்.**

ஒரு நூலின் சிறப்பு அந்நூல் கையாலும் மொழி வளத்தைப் பொறுத்தே அமைகிறது. பொதுவாக மொழி வளம் என்பது அதன் நடையைக் கொண்டே பேசப்படுகிறது. நடை என்பது புலவன் தான் கற்ற ஏட்டறிவுடன் பட்டறிவையும் இணைத்து இடத்திற்குத் தகுந்தாற்போல எழுதும் ஆற்றல் ஆகும். அவ்வகையில் இந்நூற் புலவரும் தன் நுண் மான் நுழைபுலத் திறத்தைப் பல இடங்களில் வெளிப்படுத்தியுள்ளார் எனலாம்.

'பொதுவாகத் தமிழகத்தில் எழுந்த பள்ளு இலக்கியங்களில் வழக்குச்சொற்கள் அதிகம் பழகி வருவதாகவும் ஆனால் ஈழத்தெழுந்த பள்ளு நூல்கள் எல்லாவற்றிலுமே சேரி மொழியின் மணம் குறைந்து காணும்' என்று ஞானப்பள்ளு நூலின் பதிப்பாசிரியர் கலாநிதி அ.

சதாசிவம் அவர்கள் (அரசு வெளியீடு கொழுப்பு (இலங்கை) *1968* என்ற நூலில்) குறிப்பிட்டிருப்பது ஈண்டுக் காணத்தக்கது.

காப்புச் செய்யுள் செறிந்த நடையில் இறைவணக்கப் பாடலாக ஆசிரியரால் அமைக்கப்பட்டுள்ளது.

'பூமேவு முல்லைப்புயன் குமாரெட்டேந்திரன் மேற்
பாமேவு தென்னிளசைப் பள்ளிசையை விள்ளுவதற்கு
மாமேவு முன்னாலவாய் வல்லபை யுற்றமுக
கோமேவு தாதையருள குஞ்சரமுங் காப்பாமே' (காப்பு)

என்ற பாடலும்,

பொன் மருவு புயர்சல வீமன்
புகழ்மருஷ கோசிலை ராமன்
பூரண சந்திர விலாசன்
புனித உலாசன்
தென்மருவு தென்னி னிசையில்
வளர்விக்கிற தேக சற்குண
மகாவசீகர
செயமேவுங்
குமார ரெட்ட வேள் மிசை
செப்பு பள்ளி சைக்கே
மின்மருவு மைக்கரு
முகில் வண்ணனை
விகிதாசெழுந்தாமரைக் கண்ணனை
வேலனைப் பைந்துஷாயனை
மாயனை வேத வித்தகனை
மன்மருவு கெசேந்திர சகாயனை
கல்லில் வரச் செய்யு முபாயனை
ஹந்தரும் வெங்கடாசல
மரலெனும் விதனைப்பணிவாம் (பா: 1)

என்ற பாடலும் ஆசிரியரின் நற்றமிழ் வளத்தையும் இறைநேயத்தையும் நமக்கு எடுத்துக்காட்டும்.

**அவையடக்கப் பாடலும் ஆசிரியரும்**

பொதுவாகத் தமிழ் மொழியில் இடைக்காலத்தில் குறிப்பாகச் சிற்றிலக்கியங்களில் நூல் படைக்கும் ஆசிரியர்கள்

அவையடக்கம் என்ற பகுதியில் தங்கள் சான்றான்மையை வெளிக் காட்டுவதை விட அடக்கம் எனும் பண்புடைமையைக் காட்டுவதிலேயே பெரிதும் அக்கறை காட்டியுள்ளனர். அவ்வகையில் இந்நூலாசிரியரும் இம் மரபைப் பின்பற்றியுள்ளார்.

**தகைமைகள் செறி யெழுத்துச் சொற்பொருட்களுந்**
**தாப்பிரியஞ் செயும்யாப் பலங்கார முஞ்**
**சகல முணர்ந் தோதிய புலவோர்**
**தானிக ளாரே.** **(பா: 4)**

என எழுத்துப்பிழையாலோ சொற்குற்றத்தாலோ ஏற்படும் குற்றங்களை இந்நூலைக் காணும் புலவர்கள் பெரிது படுத்தமாட்டார்கள் எனக் கூறி, இந்நூலாசிரியர் சொன்ன போதிலும் எந்தவிதப் பிழையுமின்றி அருமையாகத் தனது நூலைச் செய்துள்ளதிறன் ஈண்டு எண்ணத்தக்கது.

எளிய சொற்கள் என்றாலும் ஏற்ற இடத்தில் இச்சொற்கள் பெறும் சிறப்புகள் இந்நூலை முழுதும் ஓதுவார்க்குத் தெரிய வரும். இனிய சந்த நயம் இந்நூல் முழுதும் இடைபோயுள்ளது எனலாம்.

**வட்டார வழக்கு:** இந்நூலில் வட்டார வழக்குகள் மிகப் பல்கிக் காணுகின்றன. சுட்டி *(30, 114)* அடக்குதடா, *(68)* அடிப்பப்போல் *(10)* அருவிருப்பாச்சே *(123)* இறையுதடா *(68)* இழுக்குதடா *(68)* எட்டியெட்டி *(84)* ஒக்க *(45)* ஒட்டுப்பேன் *(70)* கசக்கிரான் *(157)* இழக்கவே *(92)* கடுகடு *(154)* தப்புக்கால் *(73)* கறுத்து *(47)* கிட்ட *(123)* கிட்டக்கிட்ட *(166)* கிட்டப்போய் *(6)* கிறுக்கு *(166)* கும்மியடிப் பமடி *(89)* கூண்டுவந்து *(72)* கொன்னிக்கொன்னி *(75)* சட்டை பண்ணுவனோ *(123)* நெட்டை *(116)* நேத்தி *(89)* மாட்டுங்க *(123)* மொட்டைத்தலைப்பயல் *(208)* மொந்தை *(71)* வண்ணாத்தி *(63)* விட்டுவிட்டே *(207)* வீசவீச *(116)* போன்ற வட்டார வழக்குச் சொற்கள், பேச்சு மொழிச் சொற்கள் ஆகியன இடம் பெற்றுள்ள பாங்கினை எடுத்துக் காட்டும்.

**பிறமொழிச் சொற்கள்:** இவ்விலக்கியத்தின் ஆசிரியர் வடமொழி தென்மொழி என்ற பாகுபாடு இன்றித் தனக்கே உரிய நடையில் எங்கு எம்மொழி பொருந்துமோ அங்கு

அம்மொழியைப் பயன்படுத்தியுள்ளார். அரசர்களை வருணிக்கும் போது இவ்வாசிரியர் விழைந்து வடசொற்களைக் கையாளுகிறார் எனலாம்.

மகபதி, சுவாமி, குமாரன், இந்திரன், துரை, சோமன், பூமன், புயசயிலன், துங்கன், தாட்டீகன் சுந்தரமன் போன்ற சொற்களை எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

கடவுளர் பெயர்களைக் குறிக்கும் போது வடசொல் பேதம் இவர் பார்ப்பதில்லை. ஆனால் வடசொல்லைத் தமிழிலேயே எழுதிவிடுகிறார். மந்திர சொரூபி, வராகி பஞ்சாட்சரி, துட்டமயிட சம்மாரி (துஷ்ட மகிஷ சம்ஷாரி என்பதே இதன் வடமொழி ஒலிப்பாகும்) சங்காளி, சங்கரி, பயங்கரி, சவுந்தரி, கபாலி, நித்திய கலியாணி முதலான பெயர்களை இதற்குச் சான்று காட்டலாம்.

இவ்வாறாக இந்நூலில் பிறமொழிச் சொற்கள் பெரிதும் இடமறிந்து பயன்படுத்தப்பட்டுள்ளன.

**மரபுத் தொடர்கள்:** காலங்காலமாக நிலைபெற்று வரும் தொடர்களே மரபுத் தொடர்கள் என வழங்கப்படுகின்றன. இத்தொடர்கள் நம்முன்னோர்கள் வாழ்க்கைப் பயணத்தில் கண்ட பட்டறிவின் வெளிப்பாடே ஆகும். செந்நெறி இலக்கியம் மற்றும் நாட்டார் வழக்காற்று இலக்கியம் என்று எந்த வகை இலக்கியமானாலும் அவற்றில் இத்தகைய தொடர்கள் பழகி வருதல் இயல்பு. சங்க இலக்கியத்தில் இத்தகைய தொடர்கள் பெரிதும் இடம் பெற்றுள்ளன. பொதுவாக வாழ்க்கையைப் பற்றிப் பேசும் காஞ்சித்திணை, செவியறிவுநூஉ போன்ற பொருண்மைகள் வாயிலாக நம் முன்னோர்கள் தாம்பெற்ற அனுபவத்தைப் பிறர்க்கு வழங்கியுள்ளனர். சங்கம் மருவிய காலத்தில் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் குறிப்பாகப் பழமொழி நானூறு இப்பணியைச் செய்தது. பக்தி இலக்கியக் காலத்தில் பெரியோர்கள் பெரும்பாலும் தம்பட்டறிவையே நன்னெறி களாக நமக்கு அளித்தனர்.

அவ்வகையில் சிற்றிலக்கியங்களும் நமக்கு அதிகமாகவே இவ்வகைத் தொடர்களை வெளிப்படுத்தின. பள்ளு இலக்கியம் இன்னும் சிறப்பாக இப்பணியினை ஏற்றுச் செய்துள்ளது எனலாம்.

மனத்தின்மை என்பது இரண்டு வழிகளில் கடினமாகி விடுகிறது. நேர்மையான நன்னெறிகளைப் பின்பற்றும் போதும் தீய வழிகளிற் சென்று சீரழியும் போதும் மனமானது கடினப்பட்டு விடுகிறது. இங்கு, இப்புலவர், பாடல் 122 ல் கீழ்மையான குணம் காரணமாக மூர்க்கனின் மனமானது பாரங்கல்லைப் போன்று ஆகிவிடுகிறது என்ற மரபுத் தொடரை, பொல்லாத **மூர்க்கன் மனங்கருங்கல்** எனக் கூறுகிறார்.

பிறிதொரு இடத்தில் (பாடல் 122) எதைச்சொன்னாலும் கேளாத அல்லது கேட்க மறுக்கும் மாந்தரிடம் ஒரு நல்ல பண்பினை எதிர்பார்ப்பது என்பது அத்தனை எளிய செயல் அன்று. இதனை விளக்க, **கல்லில் நாருரிப்பான்** என்ற தொடரினைப் பயன்படுத்துகிறார். அதேபோன்று **செவிடன்முன் சங்கூதும் பான்மை** (133) என்ற தொடரின் மூலம் **விழலுக்கு இறைத்த நீராக** என்ற மரபுத் தொடரையே ஈண்டு வேறு வடிவில் பயன்படுத்துகிறார். இன்றும் செவிடன் காதில் ஊதிய சங்கு என்பது நடைமுறையில் உள்ள வழக்கு.

தக்க நிறைகல்வி பெறாதவன் உணர்ச்சிகளுக்குப் பெரிதும் இடம் அளிப்பவன் அவனைப் பற்றிக் கூறும்போது **ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு** என்று கூறுதல் மரபு. இதனையே மற்றொரு வடிவில் **நொய்யரிசி கொதி பொறுக்காது** (134) என கிராமிய மொழியில் ஆசிரியர் பகருகிறார். முழுமை பெற்ற அரிசி சோறு ஆவதற்கான கொதி நிலையில், உடைந்த நொய்யரிசி முற்றிலும் தன்னிலை இழந்து கூழ் ஆகிவிடும். ஆகவே நொய்யரிசி கொதி பொறுக்காது என எளிய நடையில் மனித மனநிலையினைப் படம்பிடித்துக் காட்டுகிறார் ஆசிரியர்.

**மெத்தப்படித்த மூஞ்சுறு காடிக்குள்ளே வீழ்ந்து செத்த தன்மை** (135) என்பது காலங்காலமாக இருந்துவரும் ஒரு தொடர். அறிவுச் செறுக்கால் அழிவை நோக்கிச் சென்றுவிடும் அறிவிலிகள் பற்றி எடுத்துரைக்கும் எச்சரிக்கை வாக்கியம். நல்ல பண்பாடுகளைத் தவறவிட்டு அகந்தைக்கு உட்பட்டு தான் எண்ணியதே சரியானது என்ற வன்மனம் கொண்டவர் களை மூஞ்சுறுகளுக்கு ஒப்பிடும் போது மூஞ்சுறு எவ்வண்ணம் அதிகம் தெரிந்ததாகத் தன்னைக் கருதிக் கொண்டு, காடிநீர் பானையில் விழுந்து மடிகிறதோ அதுபோல ஆணவம்

மிக்கவர்கள் அகந்தையால் அழிவர் என்பதை இவ்வாறு கூறுவது நம் முன்னோர் மரபு.

இதைப்போன்றே தொடங்கிய ஒரு பணியில் தன்னிச்சையாகச் செயற்பட்டு ஒரு கட்டத்தில் செய்வதறியாது தடுமாறும் மனநிலை கொண்ட மனிதர்களை **இடுக்கிற் பட்ட எலிபோல் விழித்தார்** (135) என்பார். எலியானது ஒடுங்கிய வழியினிலும் செல்ல வல்லது. சில சமயங்களில் கல்லின் இடுக்கு எனப்படும் சிறிய இடைவெளியில் சென்று மாட்டிக் கொண்டு வெளிவர முடியாது தவிக்கும். அதுபோல எடுத்துக்கொண்ட காரியத்தில் கடினமான இடத்தில் ஒருவரின் மனம் தடுமாறுவது இயல்பு. இதனையே இத்தொடர் வாயிலாக நம் முன்னோர் விளக்கினர். அதனைப் புலவர் இவ் விலக்கியத்தில் அழகாகப் பயன்படுத்தியுள்ளதைக் காணலாம்.

**கூழுசுடுவது சுண்டைக்காய்க்குச் சேதமல்லவா** (208) என்று புலவர் பெருமான் காட்டும் மற்றொரு தொடர். கூழ் சுடுவது சுண்டைக்காய்க்கு கேடு என்றும் இதனை வழங்குவர். தவறிய கணிப்பு முடிவில் தவறாகச் சென்றே முடியும் என்ற கருத்தை வலியுறுத்த எழுந்ததே இத்தொடர். தென் பாண்டி நாட்டில் இன்றும் கேப்பை, கம்பு போன்ற தானியங்களைக் கொண்டு கூழ் எனும் உணவு சமைப்பர். இதற்குத் தொடுகறியாக சுண்டைவற்றலை வறுத்துப் பயன்படுத்துவர். அதனால்தான் கூழ் சுடுவது அதற்கு அடுத்து சுண்டை வறுபடப் போகிறது என்பதைக்குறிப்பால் உணர்த்துவர். கூழ்சுடுவது என்பது ஒரு காரியத்தில் சரியான நெறியை மேற்கொள்ளாமை. அதன் விளைவு சுண்டை வறுபடல் அதாவது அக்காரியம் சிதறும் என்பது பொருள்.

**நண்டு நரி முன் கர்ணம் போட ஞாயமல்லை** (208) என்பது ஆசிரியர் காட்டும் பிறிதொரு தொடர். இதனில் ஒரு காரியத்தைச் செய்பவன் அக்காரியத்திற்குத் தொடர்பு இல்லாதவனிடம் சென்று அக்காரியம் குறித்து உதவிகள் கேட்பது பயனற்றது என்பதனைத் தெரிவிக்க நண்டு நரி முன் கர்ணம் இட்டு நியாயம் இல்லை என்கிறார். இதில் நண்டுநரி என்பது எடுத்துக்கொண்ட காரியத்திற்குத் தொடர்பு அற்றவர் ஞாயமல்ல என்ற சொல்லின் மூலம் வீண் முயற்சியை விளக்குகிறார். எடுத்த காரியத்திற்குத் தொடர்பில்லாதவர்களை அணுகுவது வீண்பயனே என்பது இதன் பொருள்.

**பாம்பின் விடம் அதன் பல்லில் அல்லால் வேறுண்டோ** (208) என்பது யாவரும் அறிந்த பழந்தொடர். 'பாம்பிற்குப் பல்லில் விடம்' என்று கூறுவர். இதன்பொருள் தீயோர் தீமை அவர்தம் செயலிலே என்பதாகும்.

**தலையிற் கொட்டு விழுந்தபின் சாய்த்தாய்** (137) என்பது **கொட்டுப்பட்டுத் திருந்துவான்** என்பது நடைமுறை வழக்கு இதன்பொருள் தானாக அனுபவப்பட்டுத் திருந்துவான் என்பதே. இதனையே பிறிதொரு இடத்தில் **முற்றும் நன்றாய் தெரிந்து உன் செய்கை பின் முட்டுண்டே குனியுங் கதை கண்டாய்** (437) என்ற தொடர் மூலம் விளக்குகிறார். பண்ணைக்காரனின் இயல்பைக் கூறவந்த பள்ளியர்,

''ஊமையைப் போலிருந்தே சுனைக்கீழதி
லுற்ற அரவைப்பிடியாமல்
ஆமை பிடிக்கவோ பார்க்கிறீர் (பா: 87)

என்ற வரிகளில் விளக்குவர். சரச விளையாட்டுகளில் அதிக நாட்டமுடைய பண்ணைக்காரன் பெண்களிடத்து நடந்து கொள்ளும் நடைமுறையைப் பற்றிக் கூறும் போது அவன் கள்ள எண்ணத்தை வெளிப்படுத்துவதாக இத்தொடர் அமைவதைக் காணலாம். இவ்வாறு மரபுத் தொடர்கள் பல இந்நூலில் இடம் பெற்றுள்ள வகைமையைக் காணலாம்.

**இலக்கியத் தொடர் ஆளுமை**

இவ்வாசிரியர் பல்வேறு இலக்கியங்களிலிருந்து மேற்கோள்களை எடுத்துக் கையாண்டுள்ளார். குறிப்பாக அவ்வையின் முதுமொழிகளை இப்புலவர் பெரிதும் கையாளுகிறார் எனலாம்.

பருவத்தே பயிர் செய் என்ற அவ்வையின் மொழியை 'தீதில்லா பருவத்தே பயிர் செய்'(13) என்றும், மேழிச்செல்வம் கோழைபடாது'(13) என்பதை 'மேழிச் செல்வம் கோழை படா' எனவும் அப்படியே கையாண்டுள்ளார். பிறிதொரு இடத்தில் இப்புலவர் அவ்வை கூறிய 'குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை'(136) என்ற வாசகத்தையும் அப்படியே கையாளு கிறார் எனலாம்.

இவ்வாறாக மரபு மற்றும் இலக்கியக் குறிப்புகளை இந்நூலாசிரியர் பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார்.

இனிஇவ்வாசிரியர் பிற செய்திகளைப் பேசும். சில பட்டியற் குறிப்புகளைக் காண்போம்.

விவசாயம் என்பது நம் நாட்டின் முக்கியத்தொழில்களில் ஒன்று. அது தொடர்பான செய்திகள் மிகவும் தொன்மை யானது என்பது மறுக்க இயலாத உண்மையாகும். பண்டைக் காலத்தில் நடைமுறையில் இருந்த பலவகையான நெல் வகைகள் பற்றி அன்றைக்கு இருந்த பட்டியலை ஆசிரியர் நமக்கு நல்குகிறார். அவற்றைக் கீழ்வரும் பாடல் விளக்கக் காணலாம்.

'முத்துவிளங் கிப்பாலுக் கினியான் கஷ்த்தூரி
மலைமுண்டன் அரிக்கிராவி முளகுச்சம்பாச்
சித்திரச்சாவி ராசவாணன் குங்குமச் சம்பா
செந்தாழை மணல்வாரி சீரகச்சம்பா
நித்தியவான் தானச்சம்பா செஞ்சம்பா வாலா
னெடுமூக்கன் சிறைமீட்டான் நெல்வகையிலே
விதத்தின் வகை (பா: 142)

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

இதேபோன்று, மாடுகள் பற்றிய பட்டியலும் இடம் பெறுகிறது.

விரிகொம்ப னொருகொம்பன் வெடிவாலன் தடி
வாலன் விடத்தலம் பூநிறத்தான் வெள்ளிக் கண்ணன்
கருநீலன் செம்மறையான் குத்துக் குழம்பணானிக்
காலன் தொழுமுரிச்சான் கள்ளச்சிக் கண்ணன்
பருமோழை கூழைவாலன் பசுக்கரத்தான் குடைக்கொம்பன்
பாயும் நெட்டூசிக் கொம்பன் படலைக் கொம்பன்
உருவில் வகை யொன்றுக் கனேகங் காளைகள் தான்
உண்டு.... (பா: 143)

என்ற பாடலின் மூலம் காளைகளின் பட்டியலைக் காணலாம்.

மீனைப்பற்றிய பட்டியலும் இந்நூலில் உண்டு. அது வருமாறு:

''மலைக்குங் கடற்குங் தொடுத்தோன்றாது
வந்த நதியிலுந்துமீன்

வாரவிசையில் மீறி விசும்பில்
ஏறிக் குதிக்கும் வன்னாமீன்
சலத்தைக் கலக்கும் பெலத்த வாளை
சாளை கோளை தேளிமீன்
சணளைத் திருக்கை துள்ளும் வெளுச்சி
தாவு முல்லல் வாவல் மீன்
குலத்திற் சுலித்துச் செலத்தைக் கலக்குங்
கூராப் பஞ்சலை யாரால் மீன்
குறவை பஞ்சாலை யாரால் மீன்
குறவை பறவை மசறை யசலை குதி
கொண்டே தகைதி கொண்டே
நலத்தில் மாதில் குமார யெட்ட
நரேந்திரன் கருணைப் போலவே
நதியிரு கரைபெருகி வார
புதுமைபாடும் பள்ளிரே. (பா: 61)

என்ற பாடலில் நீரைக்கலக்கும் வலிமை மிக்க வாளை, சாளை, கோளி, தேளி என ஒரு பட்டியலே இட்டுத் தருகிறார். ஆற்றில் நீர்ப் போக்குவரத்து மிகும்போது எத்தனை வகையான மீன்கள் அப்பகுதியில் கிடைக்கும் என்பது இதனைக் கொண்டே நாம் அறியலாம்.

இன்னும் தென்பாண்டி நாட்டில் கண்மாய் மீனுக்குச் சுவையதிகம் என்ற நம்பிக்கை உண்டு. மீன் பற்றியக் குறிப்பு மட்டும் அன்று பள்ளியர்க்குள்ள பெயர்கள் கூட எத்தனை வசித்திரமானது என்பது கீழ்வரும் பாடலின் மூலம் காணலாம்.

மருதி தீருவி யிருளி மருளி
மயிலி குயிலி வனத்தாயி
வம்பி செம்பி நல்லி செல்லி
வள்ளி குள்ளி படைத்தி
குருவி பருவி பூச்சி பேச்சி
கூளி மூளி மாசாளி
குமரி கமலி யழகி குழலி
குட்டை மொட்டை நெட்டச்சி
பருவக்குமரி கருப்பி சிவப்பி
பாப்பி கோப்பி நெடும்பல்லி
பன்றிமுகரி அன்றில் குரலி
பானைவயிற்றுக் கூனியுந்'' (பா: 182)

என்ற பாடலின் வாயிலாக அன்று கிராமத்து மக்கள் இடையே புழங்கிய பெயர்கள் பற்றி நாம் அறிய இப்பட்டியறப்பாட்டு பெரிதும் துணை நிற்கிறது அன்றோ!

ஊர்களுக்கு எப்படி நம் முன்னோர்கள் பெயரிட்டு விளித்தனரோ அதேபோன்று வயல்களுக்கும் பெயரிட்டு உள்ளனர். அப்பெயர்கள் அனைத்தும் நல்ல தமிழிலேயே உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. அவற்றில் சில பெயர்களை ஈண்டுக் காண்போம்:

வரம்படிப்பற்று, பெரும்பற்று, கரும்படிப்புரவு, சவ்வுக்குடும்பன் பருத்தி, திருமலை அய்யங்கார்வயல்; அய்யர்சன்னதிசெய்; பெரியகல்மடையடுத்த கண்ணானுங் குத்துக் கல்வட்டந் தொடுத்த செய், துய்ய வாளைக் கிணத்தடிப்புரவு; கொடிக்கால் வட்டம்; வாத்தியார் வயல்; வடக்கு நல்ல செய்ப்புரவு; தோப்படி; கத்தரிக் கிணத்துச் செய், சொக்கன் பெருமாள் பற்று; தெற்கு நற்புரவு; பண்ணைப் புதார்ப்புரம்; அய்யனார் கோயில் அடுத்த புரவு; மடை சுற்றுக் கொடிக்கால் முதற்கரைப்புரவு; கருப்பன் செய்; நன்னயஞ் சேரிக் கன்னிமார் திருச்சன்னதிப் புரவு; சூட்டுக்காத்த குடும்பன் பருத்தி, சேற்றுக்கால் பற்று; சேகரப் புரவு போன்ற பெயர்கள் வயல் வெளிகளின் பெயர்களாக அமைந்துள்ளதைக் காணலாம்.

**நெல் அளந்த குறிப்பு:** இந்நூலில் அரண்மனை நெல் யார் யாருக்கு நல்கையாக அளக்கப்பட்டது என்பதற்கான சில குறிப்புகள் காணப்படுகின்றன. எட்டையபுர சமத்தான வரலாற்றை அறிவதற்குக் இக்குறிப்புகள் பெரிதும் தரவுகளாக அமைந்து துணை செய்யும்.

இக்கணக்கை எழுதுபவன் தன்னைப்பற்றிக் கூறிக்கொள்ளும்போது,

''கண்டிடும் நெல்லுக்கும் புல்லுக்கு முள்ள
கணக்கு நா(ன்) சொல்லுறே னாண்டே'' (பா: 173)

எனத் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்கிறான்.

எட்டீசுபரர் பூசைக்குச் சீரகச் சம்பா நெல்லில் நாலாயிரங் கோட்டை நெல்லை அம்மை நாத பட்டர் என்ற கோயிற்

பூசாரியிடம் அளித்ததாகவும் (174) ராமவெங்கடாசல விட்ணு ஆலயத்திற்குச் சம்பா நெல் ஆயிரங்கோட்டை திருமலை அய்யங்கார் வசம் அளந்ததாகவும்(175), சாத்தூர் பெருமாள் படித்தரப்பூசை, காலம் தவறாமல் நடைபெற அரசரின் ஆணைப்படி ஆயரங்கோட்டை நெல்லை, கஸ்தூரி வாணன் பால் அளந்ததாகவும்(176), விண்ணோர் போற்றும் கழுகாசலக் குகவேளுக்கு பூந்தாளைச் சம்பா நெல், அண்ணாப்பட்டர் வசம் ஆயிரங்கோட்டை அளந்ததாகவும்(177), ஆதிவெயிலு வந்தாள் அன்னை முப்பிடாரியலங்காரி கோயிற்கு ஐநூறு கோட்டை நெல் பண்டாரத்திட்டம் அளந்ததாகவும்(178), மங்காத கீர்த்தி பெறு எட்டையபுரத்தங்காள் நாயகிக்கென முன்னூறு கோட்டை நெல்லைப் பூசாரி அங்கணன் வசம் அளந்ததாகவும்(179), தவசித்தம் பிரானுக்கு உரிய பூசைகள் நடைபெற நல்கையாக சுப்பன் பண்டாரம் வசம் ஆயிரங் கோட்டை ராசவெள்ளை நெல் அளந்ததாகவும்(180), குல தெய்வமான சக்கதேவிக்கு ஆனைக் கொம்பன் நெல் முன்னூற்றைந்து கோட்டை அளந்ததாகவும்(182), காசி நகர்தனில் வாசம் செய்யும் விசுவேசருக்கு நித்திய பூசை நடைபெற ஆயிரங்கோட்டை நெல் போசனச் சம்பா அளந்ததாகவும் (183), புனித நீராடுதலுக்குரிய தமிழகத்தின் தலைசிறந்த தலமான தனுக்கோடி சிவராமலிங்கர் ஆலய பூசைக்காக பிள்ளைச் சம்பா ஆயிரங்கோட்டை நெல் அளந்ததாகவும் (184), இரத்தினகிரிக் கோவிற் கட்டளைக்கென எண்ணூறு கோட்டை மிளகி நெல்லை சிவாலயப் பண்டாரத்திடம் அளந்ததாகவும்(185), மதுரையில் எழுந் தருளியிருக்கும் சொக்கர் மீனாட்சி ஆலயத்திற்கு குங்குமச் சம்பா நெல்லில் எண்ணூறு கோட்டை நெல் மீனாட்சிநாத பட்டர் வசம் அளந்ததாகவும்(186), தென்பாண்டி நாட்டில் ஆழ்வார்திருநகரில் எழுந்தருளியுள்ள பெருமாள் கட்டளைக் கென, பூந்தாழை நெல்லில் நானூறு கோட்டையை நல்கையாக சேஷயங்கார் வசம் அளந்ததாகவும்(187), நெல்லையில் கோயில் கொண்டுள்ள நெல்லை நாயகர் உடன் உறைகாந்திமதி கோயிலுக்குக் கட்டளையாக ஆயிரங்கோட்டை புழுகுச்சம்பா நெல்லை வாடிக்கைப்படி அளந்ததாகவும் (188), புனைவனச் சங்கரேசுபவர் கோயிலுக்கு நித்திய பூசை வேண்டியும் அன்னதான நற்காரியத்திற்காகவும் சம்பா நெல்லில் அறுநூறு

கோட்டை அளந்ததாகவும்(189), மங்கை யெனும் கோவிற் பட்டியில் எழுந்தருளியுள்ள பூவண்ண நாதர் பூசைக்கென்று சம்பா நெல் முன்னூறு கோட்டை அளந்ததாகவும்(190), கடல் முத்தமிடும் அறுபடை வீட்டில் ஒன்றான திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் சண்முக நாதர் கட்டளைக்கென வெந்தயச்சம்பா நெல்லில் எழுநூறு கோட்டை வேலன் என்பாரிடம் அளந்ததாகவும்(191), வேதபாராயணம் மற்றும் சாத்திர, தோத்திரங்கள் கற்றுத்தரும் அந்தணர்களான தாத்தையங்கார் வகையினருக்கு ஐநூறு கோட்டை நெல் அளந்ததாகவும்(192), வீடுபேற்றை நல்க வல்ல வேள்வி களைச் செய்யவல்ல வேத விற்பனர் சுப்பிர தீட்சதருக்கு எழுநூற்றொரு கோட்டை சீரகச்சம்பா நெல் அளந்ததாகவும் (193), எட்டையபுர சமத்தான பரம்பரையைச் சேர்ந்த கண்ணப்ப குருசாமிக்கென எண்ணூற்றஞ்சு கோட்டை நெல் அளந்ததாகவும்(194), நற்றமிழ் காத்தும் படிப்பித்தும் ஆசானாகவும் இருந்தும் செயலாற்றும் பன கடிகை நமச்சிவாயப் புலவர்பெருமகனார்க்கு அரசனின் ஆணைப்படி முன்னூற்றைந்து கோட்டை நெல் வழங்கியதாகவும்(195), இன்னிசையில் வல்லுனராக வீணை தனிற் சிறந்து விளங்கும் வெள்ளை அண்ணாவி குமாரர்க்கென்று வாழைப்பூச் சம்பாவில் தொன்னூற்று ஐந்து கோட்டை நெல் அளந்த தாகவும்(196), குமார எட்ட பாண்டிய தெய்வேந்திர கன்னன் பெயரை நாளும் பாடும் நற்றமிழ்ப் புலவர் நாகூர் முத்துப் புலவனுக்கு வளமைசேர்க்க முன்னூறு கோட்டை நெல் அளந்ததாகவும்(197),

நீர்நிலைகளை உண்டாக்குபவரும், அவ்வாறு உண்டாக்கிய குளம், ஏரிகளைக் காவற் புரிவோருக்கும், பசிப்பிணிப் போக்க நீர்நிலை காக்கும் ராக்கப்பன் செட்டியார் வசம் அரண்மனை நல்கையாக ஆயிரங்கோட்டை நெல் அளந்ததாகவும்(198), கனக சபாபதியாபிள்ளைக் கணக்கின் படி முத்துப்பேயன்பால் எண்ணாயிரம் கோட்டை நெல் பாட்டத்தில்அளந்ததாகவும்(199),

உவணகிரி சுற்றித் தேரோட்டி வைப்பதற்கு ஒன்பதினா யிரம் கோட்டை நெல் அளந்ததாகவும் அந்நெல்லைக் குமார வேல்மணி என்பார் பெற்றதாகவும்(200), சம்பாதி என்ற

இடத்தில் உள்ள குமரகுருபரர் சன்னதி சத்திரம் நடக்கவென்று தொண்ணூற்றொரு கோட்டை நெல் சுப்பன் வசம் அளந்த தாகவும் (201) குறிப்புகள் காணப்படுகின்றன.

இந்த வகையில் எண்பத்தீராயிரத் தெழுநூற்றொரு கோட்டை நெல் நீக்கி சேரில் வந்த நெல் அளவு தொண்ணூற்றிரண்டு லச்சங்கோட்டை சொந்தத்திருப்பில் உள்ளதாகவும், ஒரு பாடல் (202) கூறுகிறது. இவை அன்றிச் சம்பிறுதிப் பிள்ளை வயித்திலிங்கத் தயாள் எழுதுங் கைக் கணக்கின்படி இன்னும் அளக்கப்படாத நெற்கட்டுகள் உள்ளதாகவும்(203) இத்தனை நெல்லும் உள்ளூர் மணியம் வெங்கடேசு ரெட்டுவேள் முன்னிலையில் அளந்து கணக்கிடப் பட்டது என்ற குறிப்பும் (204) உள்ளது.

இவற்றை எல்லாம் காணும் போது எட்டையபுர அரண்மனையின் செல்வச் செழிப்பையும் நிருவாகச் சிறப்பையும் தரும சிந்தனையையும் அறிந்து கொள்ளதக்க சான்றாக மேற்சொன்னவைகள் அமையும் அன்றோ.

இதுவரை கண்ட செய்திகளில் இருந்து இந்த எட்டையபுரப் பள்ளு அனைத்து வகையிலும் சிறப்புற்று விளங்கும் நல் இலக்கியமாகவே திகழ்கிறது.

இதுவரைத் தமிழகத்தில் முக்கூடற்பள்ளுதான் மக்களிடையே புலவர்களாலும் ஆசிரியர்களாலும் பெரிதும் எடுத்துப் பேசப்பட்டது. இன்று அச்சு நூலாகத் தமிழன்னையின் பாதத்தை அழகு செய்யும் இந்நூல் முக்கூடற் பள்ளிற்கு எந்த வகையிலும் குறைந்ததல்ல.

தென்னிளசைச்(எட்டையபுரம்) சிறப்பு, அதனை ஆண்டு வந்த மாமன்னர்தம் பெருமை, சமூகப் பண்பாட்டுச் செய்திகள் ஆகியவற்றை நகைச்சுவை உணர்வோடு வெளிப்படுத்தும் இந்நூலின் சிறப்புப் போற்றுதற்குரியது. அரசும், தமிழ் ஆர்வலர்களும் இந்நூலை மக்களிடையே கொண்டு சென்றால் இப்பள்ளின் பெருமையை யாவரும் அறிந்துபோற்ற ஏதுவாக அமையும்.

# எட்டையபுரப் பள்ளு மூலம்

## காப்பு

பூமேவு முல்லைப் புயன் குமாரெட்டேந்திரன் மேற்
பாமேவு தென்னிளசைப் பள்ளிசையை விள்ளுவதற்கு
மாமேவு முன்னாலவாய் வல்லபையை யுற்றமுக
கோமேவு தாதையருள குஞ்சரமுங் காப்பாமே.

**ஹரிஓம் நன்றாக குருவாழ்க**

**எட்டையபுரம் துரையவர்கள் பேரில் பிரபந்தம்**

1. **பொ**ன்மருவு புயர்சல வீமன்
புகழ்மருவு மகாசிலை ராமன்
பூரண சந்திர வதன விலாசன்
புனித உலாசன்
தென்மருவு தென்னிளசையில் வளர்வச்
சிரதேக சற்குண மகாவசீகர
செயமேவுங் குமாரரெட்ட வேள்மிசை
செப்பு பள்ளிசைக்கே
மின்மருவு மைக்கருமுகில் வண்ணனை
விகசித செழுந்தாமரைக் கண்ணனை
வேலனைப் பைந்துழாயனை முபாயனை
வேத வித்தகனை
மன் மருவு கெசேந்திர சகாயனை கல்லில்
வரச் செய்யு முபாயனை வரந்தரும்
வெங்கடாசல மாலெனும்
வரதனைப் பணிவாம்.

---

பூமேவு முல்லைப் புயன் - அழகிய முல்லை மலர்களால் அழகு செய்யப்பட்ட தோள்தனைப் பெற்றவன். குமாரெட்டேந்திரன் - குமாரன் எட்டேந்திரன்; தென்னிளசை - பாண்டி நாட்டின்கண் அமைந்துளள இளசை (இன்றைய எட்டையபுரம்). விள்ளுவதற்கு - சொல்லுவதற்கு. ஆலவாய் வல்லபை- மதுரையில் எழுந்தருளியுள்ள விநாயகன். கோமேவு தாதை - எருதை வாகனமாகப் பெற்ற தந்தையாகிய சிவபிரான். குஞ்சரம் - யானை. பொன்மருவு - பொன்னிநிறம். பெற்ற வீமன் - பாண்டவரில் ஒருவனான பீமன். பூரணசந்திரவதன விலாசன் - முழுநிலவு ஒத்த அழகுடையோன். மகாவசீகர- கவர்ச்சி நிறைந்த. மைக்கருமுகில் - கருமையான வண்ண முடைய கூந்தல். பைந்துழாயனை - துளசி மாலை அணியும் திருமாலை. கெசேந்திர சகாயனை - யானைக்கு அருள் பாலித்த இறைவன். வரதன் - அரி.

### சிந்து

2. **கடல்** சூழ்செக தலமனைத் தையுமொரு
குடைநீழ லில் மிகவும் வைத்தரசுசெய்
காண்டிபன் துரைப்பாண்டியன் கன்புகட்
பூண்ட மனோவன்
மடவார்மட லெழுது சொரூபன்
றிடமீறிய சவுரியப் பிரதாபன்
வாரம் வைத்தருள் குமாரரெட்ட மேந்திரனை
வாழ்த்து பள்ளிசைக்கே
சடைமீதினில் வான்மதி தரித்தவர்
உடையாகவு மேபுலி யுரித்தவர்
தாயகர் பரஞ்சோதி மின்னாயகர்
தனிப்பொரு ளானோர்
விடநாககங் கணமணி கரத்தார்
குடமாமுனி பரவுசிற் பரத்தார்
வீசியபுகழ் மேவுதென் னிளைசையெட்
டீசுரர் துணையே.

3. கனகவரை முடியிலே பொற்பரஞ்சுட
ரெனவுமிலகு புகழே பெற்றோங்கிய
கருணை செரியு மனவார்த்தான்
பிசகாத சொன்னயத்தான்
கனகனெனவும் நிதிவாழ் வைப்பூண்
டினசனமும் மகிழ்வு பெறவேவைத்
தாண்டருள் தரும நயகுணகுமா
ரெட்டேந்திர தயாளு பள்ளிசைக்கே'

---

*2. செகதலம் - நிலவுலகு. காண்டீபன் - அருச்சுனன் (காண்டீபம் என்ற அஸ்திரத்தை சிவனிடமிருந்து தவவலிமையால் பெற்றதால் இவனை காண்டீபன் என்பர்). சொரூபன் - அழகன். கங்கணமணி - மணியாற் செய்யப்பட்ட கைவளை. குடமாமுனி - அகத்தியன் (காவிரியை ஒருமுறை அகத்தியர் தன்னுடைய கெண்டிகையில் அடைத்துவிட்ட காரணத்தால் இவரை குடமாமுனி எனக்கூறுவர்).*

*3. கனகவரை - பொன்மலை. தருமநயகுணன் - தருமத்தின் வழி செல்லும் குணம் மிக்கவன். தயாளு - அருளாளன்.*

மனைவிகுற மகள்தெய் வானைபூங்கிளி
தினமுமருவி இனிதாகத் தோய்ந்திடுமரு
மாமரகத மயூரச் சேந்தா
மெய்வாகா சண்முகத்தார்
அனவரதமு மடியார்க் காங்கதி
யுதவுகழுகு மலைஞா னக் காங்கயர்
அடியையெனது சிரமேல் வைத்தேன்
சரியா ரினிநமக்கே.

4. மகபதிநிகர் குமாரமுத் தேந்திரன்
வருராம சுவாமி நரேந்திரன்
வாசவன்வெங் கடேசுரெட் டேந்திர
மாலிவர் துணைவன்
சுகமதனுரி கோவ சுரதாணன்
துத்தியமிகும் நித்திய கலையாணன்
துரந்தரனென வளர்ந்த குமாரெட்ட
சுவாமியைத் துதித்தே
பகருதல்பதங் கிள்ளைக் குச்சொல்வது
பழகியமொழி குழரினுஞ் செவியுற்றப்
பண்ணிசையென எண்ணுவரி யாவரும்
பழுது சொல்லாரே.
தகமைகள்செறி யெழுத்துச் சொற்பொருட்களுந்
தாப்பிரியஞ் செயும்யாப் பலங்காரமுஞ்
சகலமுமுணர்ந் தோதிய புலவோர்
தானிக ழாரே.

---

*3.* மாமரகத மயூரச் சேந்தா - பச்சைவண்ணம் கொண்ட மயிலைப் பெற்ற முருகா!. அனவரதமும் - எப்பொழுதும். கழுகுமலை - முருகப்பெருமானின் சிறப்புறு தலங்களில் ஒன்று. அருணகிரியால் பாடப்பெற்றது. ஞானக் காங்கயர் - கங்கையிற் தோன்றிய முருகன்.

*4.* மகபதி நிகர் - இந்திரனுக்கு ஒப்பான. ராமசுவாமி - இராமபிரான் போன்று கீர்த்தி பெற்றவனே. நரேந்திரன் - மக்கட் தலைவனான அரசன். துத்தியம் - புகழ்ச்சி; கிள்ளை - கிளி. தாப்பிரியம் - தார்ப்பரியம். யாப்பலங்காரம் - செய்யுளுக்கு இலக்கணம் கூறும் பகுதி.

**கலிப்பா**

5. சேந்தனருள் பூண்டுபுகட் சேர்குமா ரெட்டேந்திரகுண
சாந்தனுக்கு வாய்த்தவைகை தன்னாட்டின் வண்மையெல்லாம்
நாந்துதிப்போ மென்றுரதி நங்கைதங்கை பொங்கமென
வேந்திழையார் பள்ளியர் வந்தேயதி யதுசொல்வேனே.

**சிந்து**

6. மின்னெனவொளிர் சின்ன நுண்ணிடையும்
நன்னயமுள்ள வன்ன மென்னடையும்
வேந்தர்கள் மகிழ்பூந் துகிலுடையும்
வாய்ந்தகட் கடையுந்
தன்னிணையிலை யென்னும் விற்பனமுங்
கன்னல்வில் மதசன் னதமனமுந்
தரந்தெரிந்திரு குரும்பைய தெனவுஞ்
சரிந்திடு தனமும்
இன்னமுதென நன்னயப் பேச்சுஞ்
சன்னைகள் புரிந்துன்னுகை வீச்சும்
இளையவள் சண்டை விளையச்சொல்லே
ஏச்சுங் களபநற் பூச்சும்
பன்னுசெந் தமிழ்குதவு முதாரன(ண)
தென்னிளசைக் குமாரெட் டேந்திரன்
பா(ர்)த்திபன் பண்ணைப் பார்த்திடு
மூத்தபள்ளி வந்தனளே.

**கலிப்பா**

7. மங்கைதிருப் பொன்சேருமால் குமாரெட் டேந்திரதுரை
இங்கிதஞ்சேர் தென்னிளசைக் கேற்றிபண்ணைப்
பள்ளியர்கள்
செங்கையழ கும்விழிச் சேலழகு மேலழகுங்
கொங்கைய ழகுமொரு கோடிலட்சம் பொன்பெறுமே.

---

5. *சேந்தன் - முருகன். காந்தன் - அமைதியானவன். ரதிநங்கை - காமக்கடவுளாம் காமனின் மனைவி. பொங்க - மகிழ்ச்சி.*

6. *விற்பனமும் - கல்வியால்பெறும் சிறப்பும்; கன்னல்வில் - கரும்பு வில்; மதன் - காமன். சன்னத மனம் - வீறாப்பு கொண்ட மனம். குரும்பை - பனை, தெங்கு ஆகியவற்றின் பிஞ்சு. தனம் - முலை. சன்னைகள் - சமிக்கைகள். களபநற்பூச்சு - மணங் கமழும் சுண்ணச்சாந்து.*

7. *மங்கை திருப்பொன் சேருமால் - திருமகளைச் சேரும் திருமால். இங்கிதம் - இனிமை தரும் சமயோசிதப்பேச்சு. செங்கை - கொடுத்துச் சிவக்கும் கை. விழிச்சேலழகு - கெண்டை மீனை ஒத்த விழிகள். மேலழகு - வெளிப்புற அழகு. கொங்கை - முலை.*

**சிந்து**

8. வெஞ்சிலை யிணையாம் நுதற்கட்டு
மஞ்சணை யதனா லிடுபொட்டு
மேதினி தனிலே தினியிழையென
கோதிய குழலும்
அஞ்சனந் தனையெழுதிய விழியும்
பஞ்சரந் தனில்வளர்கிளி மொழியும்
அன்னமென் னடையாகிய நடையுஞ்
சின்ன மின்னிடையும்
நெஞ்சினி லொருமிப் பிருமாப்பும்
எஞ்சிய கரும்பொற் றிருகாப்பும்
நெருங்கிய தனக்கு ரும்பையும் சுமந்திழை
மருங்கது துவளத்
தஞ்சமென் றவர்க்கருளு மூபேந்திரன்
குஞ்சரத் துரைக்குமா ரெட்டமேந்திரன்
றாட்டிக்க கருக்கோட்டை யிளையபள்ளி
தானும் வந்தனனே.

**கலிப்பா**

9. மூர்க்கமுள்ள வொன்னலரை முன்னேறி வென்ற பறந்த
தீர்கவடி வேற்கைச் செயன்குமாரெட் டேந்திர துரைக்
கேற்கவள மானபண்ணைக் கென்றிளசை யம்பதிக்குட்
பாற்கவடி வுள்ளபண்ணைப் பள்ளன்வந்து தோன்றினனே.

---

*8. நுதற்கட்டு - நெற்றியின் அமைப்பு. மஞ்சணை - சிலசாதி மகளிர் கழுத்திலும் சிறுதேவதைகளின் உருவச்சிலைகளிலும் பூசப்படும் எண்ணைக் குங்கும குழம்பு. றாட்டிக்க. ரட்சிக்க - அருள. குழல் - கூந்தல். அஞ்சனம் - மை. பஞ்சரம் - பறவைக்கூடு.*

*9. வளர் கிளி - கூண்டில் வளரும் கிளி; வினைத்தொகை. நெருங்கிய தனக்குரும்பை - சீராகவும் நெருக்கமாகவும் இயல்பாகவும் அமைந் திருக்கும்படியான முலை. தஞ்சம் - அடைக்கலம். குஞ்சரம் - யானை. மூறக்முள்ள. மூர்க்கமுள்ள - கொண்ட கருத்து விடாமை (விடாபிடியாக ஒன்றைப்பற்றி நிற்கும் தன்மை).*

### சிந்து

10. துங்க மிகுந்திடுங்கை
வங்கி முனையெனவே
துள்ளு வீசைமுறுக்கி
தென்னி ளமையர்
எங்குமிவ் வாதகுறும்
பிங்கர மோவென்று
காதிலிட்ட கடுக்கண்
கன்னந்தொட் டடிப்பப்போல்
அங்கு மிங்குமசையத்
தொங்கு திங்கின்றே
சுற்றியாடிச் சேறாடிக்குட்
கொண்டாடிப் பாடியே
சிங்கா சனபதி
குமார யெட்டேந்திரன்
பண்ணைச் செழிக்குமெட்டக்
குடும்பன் தோன்றினானே.

11. கன்னி யிளைய பள்ளி
தன்னைப் புணரு மாசைக்
காமவெறியுங் கொண்ட
கள்ளின் வெறியுந்
துன்னி யெழுந்து தன்வாய்
கொன்னிக் கொன்னி குழறிச்
சொல்லுந் தில்லு
மல்லாகத் தள்ளாடியே
தன்னைப் புகழ்ந்து மெள்ளச்
சன்னை யிரும லிட்டுத்
தலையசைத் தேப்பமிட்டடங்
குலவிக் கொண்டே

---

*10.* *துங்க மிகுந்திடுங்கை - மேன்மையுடைய கை. வங்கி முனை - வளைந்த அமைப்பையுடைய ஓர் ஆயுதத்தின் முனை. துள்ளு வீசை; துள்ளு மீசை - துள்ளும் மீசை (உணர்ச்சி மிகுதியால் மெய் சிலிர்க்கும் போது குத்திட்டு நிற்கும் மீசை). சிங்காசனபதி - அரசன்.*

*11.* *கள்ளின் வெறி - மயக்கத்தையும் வெறியையும் ஊட்டும் மது (பனையில் இருந்து பெறப்படும் ஒருவகை சுவைநீர்). துன்னியெழுந்து - துள்ளியெழுந்து - விரைந்து எழுந்து. கொன்னிக் கொன்னி - முகம் கோணிக்கோணி அடுக்குத் தொடர். குழறி - பேச்சுத் தடுமாறி. தில்லுமல்லாக - முரண்பாடாக. சன்னையிருமல் - சமிக்ஞைக்காக இருமுதல். ஏப்பம் - தேக்கெறிவு.*

தென்னன் குமாரெட் டமவிற்
பன்னன் பண்ணைக்கு வாய்த்த
தென்னி ளசைக்குடும்பன்
தோன்றி னானே.

12. பூமன் குமாரெட் டமசங்கி
ராமன் மேலே யெதிர்த்துப்
போர்க்கு நடந்தோர் காலை
யோர்க்கா லாக்குவேன்
வாமன் குமார முத்தையாதனைக்
கெணியார் நெஞ்ஞென்னும்
வரம்பை வெட்டித் திருத்திப்
பரம்ப டிப்பேன்
சோமன் இராமசாமி வெங்க
டேசு ரெட்டனைத்
தொழுதி பாத பேரைக்கைப்
பழுதாக் குவேன்
தாமரை தடஞ்சூழும் இளசைப்
பண்ணைக்கு என்னாளுஞ்*
சட்டமாய் சம்பாநெற்சேர்க்
கட்டுவேன் ஆண்டே.

13. கோதில் லாமற் கற்றுணர்ந்
தோதும் ஞாயமா ரென்னைக்
குடும்பா தள்ளி நில்லென்றே
இடும்பாய்ச் சொல்வார்
சாதி யானபெண் ணிரண்டே
பேதக மேதோதுவான்
தானெல்லா முழுவான்
தன்தலைக் கடைக்கே
தீதில் லாதே பருவத்
தேபயிர் செய்நன்மேழிச்
செல்வங் கோழைபடா
தென்றவ்வை மொழிந்தேன்*

---

*12.* பூமன்- அரசன். மசங்கி - மயங்கி. ராமன் - ராமனைப்போன்ற குமாரெட் டேந்திரன். வாமன் - திருமால். கெணியார் - மனதில் மதியார். பரம்படித்தல் - உழுத கழனியைச் சமப்படுத்துதல். சோமன் - வள்ளல். ஆண்டே - தலைவ. சம்பா - ஒருவகை நெல். *என்னாழுஞ் - என்னாளுஞ்.

*13.* ஞாயம் - நியாயமாய். குடும்பன் - பள்ளர் தலைவன். இடும்பாய் - குறும்பாய். 'பருவத்தே பயிர் செய்', 'மேழிச் செல்வங் கோழை படாது' இவ்விரண்டும் ஔவை சொன்ன முதுமொழிகள்.

ஆதலி னால்இளசைக்கு
மாரெட்ட மேந்திரன்பண்ணைக்கு
அமைந்த வருசையெட்டக்
குடும்பன் நான்ஆண்டே.

**கலிப்பா**

14. **ந**ற்றாமரை மகள்சேர் நண்பன் குமாரயெட்டன்
வற்றாத செல்வம் வளரிளசை நன்னாட்டில்
குற்றாலந் தென்னிலஞ்சி கும்பகோணங் காட்டிற்
சற்றேநற் பள்ளியர்கள் தங்கள் வகை சொல்வாரே

**சிந்து**

15. தூண்டு பரிநடத்துங்
காண்டிபன் குமாரயெட்ட
துரைமர பினுள்ள
பெரியோர் கள்தான்
வேண்டிய வருசைகள்
பூண்டு சந்திரகிரி
மீதிலிருந் தன்றுதென்
பாதை கூடியே
கூண்டு காவெரி யாறு
தாண்டி வரும்போதவர்
கூடநாங்கள் வந்ததின்
நாடறியுமே
பாண்டி யாதிக்க மெனுமிளசைப்
பண்ணைக்கு வாய்த்த
பள்ளனுக் கேத்த மூத்த
பள்ளி நான் ஆண்டே.

---

*14.* நற்றாமரை மகள் - திருமகள். குற்றாலம் - பொதிகைமலை. தென்னிலஞ்சி - ஓரூர். கும்பகோணம் - காவிரிக் கரையில் அமைந்துள்ள ஊர்.

*15.* தூண்டுபரி - விரைவு படுத்தப்பட்ட குதிரை. காண்டீபன் - அருச்சுனன். சந்திரகிரி - சந்திரமலை. கூண்டு காவிரியாறு - குறுகிச் செல்லும் காவிரியாறு (ஆடுதாண்டும் காவிரி).

16. ஓருல வியகருக் கோட்டை நகரிலி ருந்து
எட்டையா புரத்தில் வந்திஷ் டமுடனே
ஊரில் வளர்ந்ததி கச்சீருஞ் செல்வமுமிக
வுண்டாகி வாழ்ந்தி ருக்கக் கண்டாசையாய்ச்
சேரத் துணிந்திரு கையாட்சரடு கட்டிச்
செங்கைதொட்டுக் குடும்பன் கொங்கை தொட்டான்
பாரப் புயசயிலன் குமாரெட் டேந்திரன் பண்ணைப்
பள்ளனுக் கேற்ற சின்னப்பள்ளி நானாண்டே.

**கலிப்பா**

17. கோட்டுமுலை ரண்டுங் குலுக்கித் துலுக்கிநயங்
காட்டி விழிகாட்டியிரு கைகாட்டிப் பள்ளியர்கள்
தாட்டிகன்கு மாரயெட்ட சாமிபுக ழைநிலை
நாட்டுமுது குடிநன் னாட்டுவளஞ் சொல்வாரே.

**சிந்து**

18. சென்னெல் கன்னலென வளர்ந்தோங்குஞ்
செழும்பலாவிற் கொழுங்கனி தூங்கு
முன்னம் யூகமதைக் கையாற் றாங்கும்
வாயூரி மந்தியே மாரியுள் ளேங்குஞ்
சன்னை கண்டுதரப் பசிநீங்குந்
தகமைக் காயதைத் தாவென வாங்கு
மன்னனெங்கள் குமாரெட்ட மேந்திரன்
வளர்முது குடிநாடெங்கள் நாடே

---

*16.* *பாண்டி யாதிக்க மெனுமிளசை - பாண்டிநாட்டினைச் சார்ந்த இளசை என்னும் எட்டையபுரம். கருக்கோட்டை நகர் - ஓரூர். எட்டையாபுரம் - ஓரூர் (இவ்வூரைப்பற்றி ஆய்வுரையில் காண்க). சரடு - பொன் முதலியவற்றால் செய்யும் கொடி அல்லது தாலிக்கொடி. பாரப்புய சயிலன் - மலை போன்ற திண்ணிய தோள்வலிமை கொண்டவன்.*

*17.* *கோட்டு முலை - கட்டிவைக்கும் படியான திறத்தையுடைய முலை. தாட்டிகன் - செல்வாக்கு உள்ளவன். சென்னல் - தேன்கெண்டை மீன். கன்னல் - கரும்பு. சென்னல் கன்னல் - கரும்பைப் போல நீண்டு திரண்டு வளரும் தேன் கெண்டை என்னும் மீன்.*

*18.* *சென்னல் கன்னலென - நல்ல நெற் கதிர்கள் கரும்புபோல திரண்டு உருண்டு காட்சி தர. மந்தி - குரங்கு. கொழுங்கனி - கனிந்த கனி.*

19. கஞ்சமீது வெள்ளஞ் சம்படுக்குஞ்
கயல்கள் பாய்ந்து வயலில் முடுக்கும்
பஞ்ச பாணன் கரத்தி லெடுக்கும்
பதாகை தன்னை யப்பூக மடுக்குஞ்
சஞ்ச ரீகமிராகந் தொடுக்குஞ்
சரோருகஞ் செழுந்தேறல் கொடுக்கு
மஞ்சு நேருங் குமாரெட்ட மேந்திரன்
வளருங்கோ னேர்மை நாடெங்கள் நாடே.

20. மேதிபால் மடைவாயினிற் கொட்ட
விரைந்து மீன்மடுவில் லேறி முட்டக்
காதசைத்துக் கரப்போர்கள் விட்டதன்
கன்ற தாமென நின்று புகட்ட
மோதிப் பாய வயலெங்குங் குமிட்ட
முளைவளர்ந்து விளைந்து நெற்கட்டப்
பூதலத் திலிணையிலை யென்று
புகழ்முது குடிநாடெங்கள் நாடே.

21. போர்செய்யும் மன்மதப் பயல்மீது
புருவவெஞ் சிலை தன்னைக் குனித்துக்
கூர்செய்மை விழிப்பாணத்தை யேற்றிக்
கொடுஞ்சமரிட் டுக்கைவாள் பறித்தே
யேரிடும் பள்ளப் பெண்கள் முழந்தாளில்
இட்டுக்கூ னிரும்பென்ன வளைத்தே
சேர்நெற்கதிர்த் தாள்கொய்யப் பார்த்திடுந்
தென்னிளசை நல்லூரெங் களூரே

---

*19.* *கஞ்சமீது - தண்ணீர்மீது. கயல்கள் - மீன்கள். பாணன் - யாழ் வைத்துப் பாடுபவன். பதாகை - அடையாளம்.*

*20.* *மேதி - எருமை. மடை - நீரணை (பாசனத்திற்காக நீர் கொள்கலம்). பூதலம் - பூமி. மடு - நீர்நிலை. கறப்போர்கள் - பால் கறக்கும் கறவையாளர்கள். போர் செய்யும் மன்மதப் பயல் - உயிரினங் களிடத்து காமத்தீயை எழுப்பி மனப் போராட்டத்திற்கு உள்ளாக்கும் காமக் கடவுளாகிய மன்மதன்.*

*21.* *பயல்; பையல் - சிறுபிள்ளை. குனித்து - வளைத்து. மைவிழி - அஞ்சனம் பூசிய விழி. சமர் - போர்.*

22. கள்ளுலாவு நற்றாமரைப் பூவிற்
கயலுலாவிப் புரள்வது கண்டே
யுள்ளுலாவு மகாலட்சு மிப்பெண்
ணுகந்தது சிந்தை மகிழ்ந்தினித்
தெள்ளுமா மறைக்காக நம் நாயகன்
சேலுருக் கொண்டகோல மிதென்றே
விள்ளவே யமராபதி போல்வள
மேவுசந்திர கிரியெங்க ளூரே.

23 கந்தரங்க முகந்தமின்னாற் கும்விண்
கந்தரங்கு முகந்தமின் னாற்கு
சந்தனம்மம் புயத்தினில்வா சஞ்சொற்
சந்தனம்மம் புயத்தினில் வாசஞ்
செந்தமிழ்க் காவியங்கள் மிகுக்கு நெற்
செய தோனுங் காவியங்கள் மிகுக்கு
மந்தரப் புயன் குமாரெட்ட மேந்திரன்
வளரிசை நல்லூரெங் களூரே.

24. பூந்தடத் திற்பய மச்சண்டிந்தப்
பூமிதன்னிற் பயமச்ச மில்லை
மோந்து கொள்ள மருவலருண்டு
முடுகிப் போர்செய மருவலரில்லை
நீந்தும் நீருக்குள் பங்கமுண் டிந்த
நிலத்தில் வேறொரு பங்கமில்லைச்
சேந்தன் குமாரெட்ட மேந்திரன் வளர்ந்தருள்
தென்னிளசை நல்லூரெங்க ளூரே.

---

*22.* *கள்ளுலாவு நற்றாமரைப்பூ - தேன் நிறைந்த தாமரை மலர். கயலுலாவிப் புரள - மீன்கள் துள்ளிப் புரண்டு விளையாடும்படியான. மகாலட்சுமிப் பெண் - இலக்குமி. மாமறை - நான்கு வேதங்களாகிய ரிக், யசூர், சாம, அதர்வணம். அமராபதி - இந்திரன். தெள்ளு மாமறை - மனத்தெளிவினைத் தரும் நான்கு வேதங்கள். சேலுரு - மீனுரு.*

*23.* *மின்னாற்குழல் - மின்னலைப் போன்று வளைந்து நெளிந்த கருங் குழல். அம்புயம் - அழகிய தோள். மந்தரப்புயன் - மாமேரு போன்ற திரண்ட தோள்களை உடையவன்.*

*24.* *பயமச்சம் - ஒருபொருட் பன்மொழி. மருவார் - குற்றமற்ற. பங்கம் - குற்றம். சேந்தன் - முருகன்.*

### கலிப்பா

25. மிக்கபுகட் சேருமனு வேந்தன் குமார யெட்ட
சக்கிரபதி பண்ணை தழைக்கவரும் பள்ளியர்கள்
கைக்குருகு சோர்ந்து விடக் காமனு மானாரை வெல்லக்
கொக்கின்மிசை மைக்குயிலுங் கூவுமொழி கேட்டனரே.

### குயிற்சிந்து

26. பூமேவு புகழ்மேவு மிளசைநகர் குமாரயெட்ட
போசன வளர்ந்தோங்கவே கூவுவாய் குயிலே
மாமேவு மலர்மேவு புயசயிலன் குமாரமுத்து
மகாராசன் வாழ்கவே கூவுவாய் குயிலே
மருவார்கள் மீதடர்ந்து பொரும ராமசாமி சங்க
மார்கண்டன் போல் வாழ்கக் கூவுவாய் குயிலே
இருநிதியைப் போலுலகில் அருள்கன கலைதானன்
வெங்கடேசு ரட்டுமால் வாழ்கக் கூவுவாய் குயிலே.

யெங்கள் செகவீர யெட்ட துங்கன் மகவான்
வெங்கடேசு ரெட்டையர் வாழ்கக் கூவுவாய் குயிலே
சங்கநிதி யென நாலும் அருங்குளத்தில் மேவு
சின்னச்சாமி அய்யன் வாழ்கவே கூவுவாய் குயிலே
தாட்டீகன் கோட்டையூர்ச் சாத்தூர்ப்பு பேந்திரனுஞ்
சந்தமும் வாழ்கவே கூவுவாய் குயிலே
கோட்டானை முன்னழைத்த தேட்டாளன் வல்லேறு
கொற்றவனும் வாழ்கவே கூவுவாய் குயிலே.

---

*25.* மனுவேந்தன் - சாதீய தருமம் வகுத்த மனு என்னும் மன்னன். சக்கிரபதி - சக்கரவர்த்தி - மாமன்னர். குருகு - கைவளை. கொக்கு - நீர்வாழ் பறவை. கூவு மொழி - சொல்லும் மொழி

*26.* பூமேவு புகழ்மேவு இளசைநகர் - பார்புகழும், பல்புகழும் சூழப் பெற்ற இளசை நகர். போசன் - உணவளிப்பவன். புயசயலன் - மலை போன்ற திண்தோள்தனைப் பெற்றவன். குமாரமுத்து மகாராசன் - குமாரயெட்டனின் முன்னோன். மகாராசன் - அரசன். ராமசாமி - இராமரைப் போன்று பகைவர்களை அழிக்க வல்லவன். மார் கண்டன் - என்றும் பதினாறு என்ற வயதினைப் பெற்ற மார்க்கண்ட முனிவன் போன்று இளமை குன்றாதவன். இருநிதி - சங்கநிதி, பதுமநிதி என்ற குபேரனது நிதிகளில் சிறப்பான நிதிகள். செகவீரன் - உலகை வெல்லும் ஆற்றல் உடையவன். துங்கன் - உயர்ந்தோன். சங்கநிதி - குபேரனது சங்கமம், பதுமம், மகாபதுமம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என்னும் ஒன்பான் நிதிகளில் ஒன்று. தாட்டீகன்; தாட்டிகன் - பலவான். தேட்டாளன் - சம்பாத்தியம் மிக்கவன்.

சுந்தரமன் மத னெனவும் வந்ததுரை மாப்பிள்ளைச்
சேரத்தண் தயால் வாழ்கக் கூவுவாய் குயிலே
சந்தமன மார்பனெனுஞ் சிந்தமண்பூ பதியுஞ்
சவுபாக்கி யத்துடன் வாழ்கக் கூவுவாய் குயிலே
நிலமை பெறு சதிரகிரித் தலமை கருக் கோட்டை நகர்
நீடுழி வாழ்கவே கூவுவாய் குயிலே
நல்மகிமை பெறுகம்பள குலமொன்பதுங் கிளை பெறுகி
நாடொறும் வாழ்கக் கூவுவாய் குயிலே.

மதுர தமிழ் மொழிகடிகை நமசிவாயப் புலவர்
வங்கிஷ மெல்லாம் வாழ்கக் கூவுவாய் குயிலே
முதன்மை பெற்ற பரிவாரம் தனிலுற்ற தமிழ்த்தளவாய்
முத்தய பூபதி வாழ்கக் கூவுவாய் குயிலே
அச்சுதனைப் போல்வளர் கெச்சிலண தீரனருள்
அழகுமுத்து மால்வாழ்கக் கூவுவாய் குயிலே
வச்சிரதரனெனவாணர் மெச்சும் நிதிபழனி
முத்துமந்திரியும் வாழ்கவே கூவுவாய் குயிலே

நித்தியமுந் தென்னிளசைச் சத்திரமட வாலையமும்
நிச்சயமதாய் வாழ்கக் கூவுவாய் குயிலே
தெய்வநாயக மால்சொல் சிதம்பரதாண் டவமகிபன்
செல்வம்வளர்ந் தோங்கவே கூவுவாய் குயிலே
சைவநெறி மிகுந்தவெங்கடேசு ரெட்டுப்பிள்ளையென்றுந்
தான்கன்னன் போல்வாழ்கக் கூவுவாய் குயிலே

---

*சந்தமான மார்பன் - மார்பில் மணம் கமழும் சந்தனத்தைப் பூசி மகிழும் பேராளன். பூபதி - அரசன். சவுபாக்கியம் - பெரும் பேறு. சதுரகிரி - நான்கு மலைகள் சூழ்ந்த ஓர் இடம். கம்பள குலம் - தெலுங்கு மொழி பேசும் குறி சொல்லும் நாடோடி இனத்தார். கடிகை நமசிவாயப் புலவர் - எட்டையபுர அரசவைக் கவிஞர் (இவரைப் பற்றி பின் இணைப்பில் காண்க). வங்கிஷம் - வம்சம் - பரம்பரை. ஸ்ரீவாரம் - எட்டையபுர ஆளுகைக் குட்பட்ட ஓர் இடம். தமிழ்த் தளவாய் முத்தய பூபதி - தமிழைத் தாய்மொழி யாகக் கொண்ட தளவாய் பணிபுரியும் முத்தயபூபதி என்ற தமிழன். அச்சுதன் - அழிவில்லாதவன். வச்சிதரன்; வச்சிரதரன் - வச்சிரப் படையையு டைய இந்திரன். வாணர் - ஏதேனும் ஒரு தொழிலால் வாழ்பவர். நிதி - வருவாய். பழனிமுத்து மந்திரி - வருவாய்த்துறை ஏற்று நடத்தும் மந்திரி பழனிமுத்து. சத்திரம் - வெளியூர் விருந்தினர் தங்கும் இல்லம். மட வாலையம் - மடம் மற்றும் ஆலயம். சிதம்பர தாண்டவ மகிடன் - எட்டையபுர மன்னன் குமாரயெட்டனின் முன்னோரில் ஒருவன். கன்னன் - கர்ணன்.*

நரசிங்க மெனவளர்சங் கரலிங்க முகில்சொல்தெய்வ
நாயகதயாள் வாழ்கக் கூவுவாய் குயிலே
வரதுங்க னெனுமுத்தண மாலுமகிழ் சங்கரலிங்க
மானபரன் வாழ்கவே கூவுவாய் குயிலே
மகள்வனுதை யனுதினமும் மருவிய பொன்னம்பல
மகீபதியும் வாழ்கவே கூவுவாய் குயிலே
கற்றவிசு வாசிசுப்பி ரமணியமு மெக்காலமும்
நன்றாய் வாழ்கக் கூவுவாய் குயிலே
சித்திதருங் குருநேமம் வைத்தநல்ல ராக்கப்ப
தீரனென்றும் வாழ்கவே கூவுவாய் குயிலே
மாதமும் மாரிபெய்து மானிலமெல் லாஞ்செழித்து
மனுநீதி தழைத்தோங்கக் கூவுவாய் குயிலே
முத்தைய தயாலையரு ளுத்தமன்சுப் பிரமணிய
முகிலென்றும் வாழ்கவே கூவுவாய் குயிலே
துத்தியம துரத்தமிழ்ப்பிர சித்தனெட்டுப் பிள்ளையருள்
சுப்பிர மணியமால் வாழ்கக்கூவுவாய் குயிலே
வலுசது ருபாயதா னாபதிசங் கரலிங்க
மானபரன் வாழ்கவே கூவுவாய் குயிலே
குலககல கரணன்வளர் முத்தணமகி பனதிகபு
கழ்க்கொண்டு வளர்ந்தோங்கவே கூவுவாய் குயிலே
தாதுகமழ் புயன்குழந்தை வேலுசெந்தி லாதிபதி
தனதுராயசம் வாழ்கக் கூவுவாய் குயிலே
சுருதிநெறி தவறாத குருமொழியை மறவாத
தொண்டர்களும் வாழ்கவே கூவுவாய்
ஓதுமறை யோர்கள் பெரியோர்கள் புலவோர்கள்
நீடூழி காலமும் வாழ்கக் கூவுவாய் குயிலே.

---

நரசிங்கன் - எதிரிகளின் சிம்மம் எனப் போற்றப்படும் சம்புலிங்கம் (இவனைப் பற்றிப் பல்வேறுவிதமான நாட்டுப் புறக் கதைகள் தென்பாண்டி நாட்டில் உண்டு). சங்கரலிங்கம் - எட்டையபுர மன்னர் மரபைச் சார்ந்தவன். முகில்சொல் தெய்வநாயக தயாள் - மேகம், வான்மழை தந்து நன்மை செய்வது போன்று நற்சொல்லால் நன்மை செய்யும் அருளாளன். விசுவாசி - நம்பிக்கையுள்ளவன். சுப்பிரமணியம் - எட்டையபுரத்தைச்சார்ந்தவர். குருநேமம் - குருபூசைக்குரிய ஒழுகலாறு. நல்லராகப்பன் - நல்ல மனம் கொண்ட ராக்கப்பன் எனும் எட்டையபுர அரசு அதிகாரி. மாதமும்மாரி - காலம் தவறாத மழை. மனுநீதி - மனு எனும் மன்னரால் உருவாக்கப்பட்ட சாதீய நீதி. துத்தியம் - புகழ்ச்சி. மதுரத் தமிழ் - இனிய தமிழ். பிரசித்தன் - நல்லறிமுகமானவன் வலுசதுருபாய தானாதிபதி - திறம்மிக்க நான்கு வகையான (சாம, பேத, தான, தண்டம் என்ற) தந்திரங்களும் தெரிந்த படைத்தலைவர். குழந்தைவேலு - குழந்தை வடிவினனாகிய முருகக்கடவுள். செந்திலாதிபதி - திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான். ராயசம் - மன்னர்தம் எழுத்து வேலைக்காரன்.

### கலிப்பா

27. மன்னுபுகழ் கொண்டதிரு மால்குமாரெட் டேந்திரதுரை
பொன்னை யள்ளியள்ளிப் பொழியுமவன் கைப்போலு
மின்னி மழைபெய்ய முகில்மென் மேலுங் கீர்த்தி*கொண்ட
தென்னிளசைப் பள்ளரெல்லாந் தெய்வநிலை போற்றினரே

### சிந்து

28. கொண்டல் கருக்கொண் டும்மை
மண்டலத்திற் பொழியக்
கூட்ட மிட்டுக் கைதொழுங்கோ
வாட்ட மதுதெளிய
அண்டர் சொல்லெட் டீசர்சோதி
யம்பிகை மீனாட்சி
அருள்புரி வாரடி தொழுங்கோ
வருமோ வினித்தாட்சி
தனிப்பொருள் விக்கினே சுரரூக்
கினித்த பலகாரஞ் சடவிலாமற்
கொண்டு வந்து படையுங்
கோவின் னேரம்
அனைத்துல கெல்லாம் புரக்கும்
வெயிலு வந்தாள் கானு
மானதி னாற் களியாட்டந்
தானே செய்ய வேணுங்
கந்தர் கழுகா சலரை
வந்தனை செய்திடுங் கோகையி
னாலே துள்ளு குட்டி
அய்யனைக் கும்பிடுங்கோ

---

27. மன்னுபுகழ் - நிலைத்திருக்கும்படியான புகழ். மின்னிமழை பெய்ய முகில் - மின்னலுடன் கூடிய மழையைத் தரவல்ல கார்மேகம். கீர்த்தி கொண்ட - புகழ் கொண்ட.

28. அண்டர் - வானோர். எட்டேசர் - சிவபிரான். சோதியம்பிகை மீனாட்சி - மின்னார் ஒளிபொருந்திய அன்னை மீனாட்சி. விக்கின சுதர் - விநாயகன். பலகாரம் - சிற்றுண்டி. சடவிலாமற் - மறுப்பில்லாமல். வெயிலுவந்தாள் - கூரையிலாக் கோயிலை விரும்பி ஏற்று அதில் இருந்து அருள்புரியும் இறைவி. களியாட்டம் - கள்ளுண்டு ஆடுதல். கந்தர் - முருகக் கடவுள். கழுகாசலர் - கழுகாசலம் எனும் தலத்தில் எழுந்தருளி யுள்ள முருகப்பிரான். இத்தலம் தென்பாண்டி நாட்டில் உள்ளது. குட்டி அய்யன் - அய்யனார்.

விந்தை பெறமுப் பிடாரி
சிந்தை மகிழ்ந்திட வேவெட்டிக்
கருங்கிடாய்ப் பெலியிட் டால்விடீ
கடவே நேம மொடு
சாத்தூ ரப்பசாமிக் கபிஷேகம்
நேத்தி யாகச்செய் தால்வரு
மாளய லப்பிர வாகம்
மாமகள் சேருள்ளூர்
வெங்க டாசலப் பெருமானை
வந்தனை செய்தால்
மழைபொழிந்திடுமே நாளைச் சத்தி
சகதேவியெனும்
உத்தமியாள் தமக்கு சட்டமதாய்
நெய்வேத்தியஞ் செய்தாலிஷ்ட
காமியம் நமக்கே
அஷ்த்திர விழிமாதா வென்னும்
அம்மன் குருநாத ரனுக்கிரகஞ்
செய்வாய் நமக்கே யவரே
வெகுநீதா செய்யபுகழ்நீ ராத்தய்யனார் தன்முன்னே
திட்டமாகவே எருது கட்டவேணுஞ்
சொன்னேன் மெய்யது காணென்று
கோவிற் பூசிகர் முன்னடுத்தே மிக்கசொர்ணஞ்
சின்னமுத்து கைக்கிசையக் கொடுத்தார் 28

---

முப்பிடாரி - சக்தியின் ஒரு வடிவம். கருங்கிடாய் - கருத்த ஆடு. பெலி - இறைவனுக்குப் படைக்கப்படும் உயிர்க் கொடை. சாத்தூர் அப்பசாமி - சாத்தூரின் கண்வாழும் அப்பசாமிஎன்ற காவல் தெய்வம். நேத்தி; நேர்த்தி - சிறப்பு. சத்தி சகதேவி - இறைவி சக்கம்மாள் தேவி. இக்கடவுள் கம்பளத்தார் எனப்படும் தெலுங்கு பேசும் குடும்பத்தாரின் இறைவி. உத்தமியாள் - சிறந்தவள். நெய்வேத்தியம் - இறைவனுக்குப் படைத்த பொருளை அக்கடவுள் ஏற்கும் படியாகச் செய்யப்படும் சடங்கு. இஷ்டகாமியம் - விரும்பி ஒன்றிற்காகச் செய்யப்படும் பூசை. அஷத்திர விழிமாதா - அம்புவிழி அன்னை. நீராத்தய்யனார் - அய்யனார் வடிவங்களில் ஒன்று (நீர்நிலைக் காத்த அய்யனார் என்றும் கூறுவர்). திட்டமாக - சரியாக. எருது - காளை. கோவிற்பூசிகள் - கோயிற்பூசாரி. சின்னமுத்து - சிறியமுத்து. சொர்ணம் - தங்கம்.

**கலிப்பா**

29. இன்றே துரைக்குமார் யெட்டம ராசேந்திரனுக்குக்
குன்றாத பண்ணைக் குடும்பன் முதல் யாவர்களுஞ்
சென்றே வெயிலுகந்த தேவிக்கு கந்திடவே
நன்றாய்க் களியாட்டம் நன்மை பெறச் செய்தனரே. 29

**சிந்து**

30. மந்திர சொரூபி வராகிபஞ் சாட்சரி
மாதரி வீரியகோரி சிவசுந்தரிகாளி
வெயிலுவந் தாளம்மை துட்டமயிட சம்மாரி
யென்று துதித்தவன் சன்னிதி முன்பாக நின்று
தொழுது கையெடுத்தார் பூசை யொன்றுங்
குறையாம லின்றுசெய்யென்று நெற் பண்டாரங்
கையினிற் கொடுத்தார்
யிங்கித மாகவே பொங்கலுமிட்டு
கருங்கிடாய் செங்கிடாய் வெட்டுவன் நன்றாய்ப்
பொங்கிய சோற்றினை யங்கேமலை போலுங்
கங்காளி பீடமுன் கொட்டுவார்
குடங்குடமாக யிடந்தெரியாமல்
அடங்கலுமே மதுநிறைப்பார் முன்
னிடும்பு செய்யாமற் குடும்பரெல் லோருந்
திடம்பெறவே துதித்துரைப்பார்
துட்ட வயிரவ சுவாமிக்குகந்திட
முட்டையுஞ் சோறுமே படைப்பா ரங்கே
யட்டி பண்ணாமலே சுட்டகறிகள் வைத்
திஷ்டமுடன் தேங்கா யுடைப்பார்

---

*29.* *பண்ணைக் குடும்பன் - பண்ணையிற் பணிபுரியும் பள்ளர் தலைவன். வெயிலுகந்த தேவி - அன்னை சகதேவி.*

*30.* *மந்திர சொரூபி - மந்திர ஒலியாய் விளங்கி நிற்பவன். வராகி - ஒரு சக்தி. பஞ்சாட்சரி - ஐந்தெழுத்து மந்திரத்தின் நாயகி. மாதரி - பெண்களில் சிறந்தவள். வீரி - காளி. யகோரி - பார்ப்பதற்குப் பயங்கர வடிவத்தையுடையவள். சிவசுந்தரி - சிவபிரானின் மனம் கவர்ந்த மீனாட்சி. காளி - துர்க்கை. வெயிலுவந்தாள் அம்மை - அன்னை சக்கதேவி. துட்டமியிட சம்மாரி - மகிடன் என்ற அசுரனை வென்று வதம் செய்தவள். பண்டாரம் - சிவனடியான் அல்லது சிவனைப் பூசை செய்யும் பூசாரி. இங்கிதமாக - இனிமையாக; குறிப்பாக. கங்காளி பீடம் - காளி பீடம். இடும்பு - கொடுஞ்செயல். துட்டவயிரவ சுவாமி - காவற் தெய்வமான சினம் மிகுந்த வயிரவசாமி. அட்டி பண்ணாமல் - தடை செய்யாமல்.*

பூராயம் பேசியே நேராகவே நூறு
சாராயங் குத்தியும் வைப்பார் யெங்கும்
பேராகவே நம்மை நீராழுவீரெனச்
சீராக வாழ்த்தித் துதிப்பார்
வைத்தவர்க்கு கள்தனையுங் கொண்டு
தெய்த்தெய்த் தெய்யென்று கூத்தாடுவார் நல்ல
சத்தக் குழலிசை யெத்திசையுங் கேழ்க்கத்
தித்தித்தீத் தீமென் றூதிப் பாடுவார்
உண்டான பூசைகளெல்லாம் நிறைவேற்றித்
திண்டாடும் பள்ளர்க் குகந்தே யருட்
கொண்டா வேசத் தொடு கொண்டாடிக்
கொண்டாடிப் பண்டாரந் தானும் வந்தானே.

### ஆனந்தக்களிப்பு

31. சத்தி கவுமாரி திரிசூலி மயிட
சங்கரி பயங்கரி சவுந்தரி கபாலி
நித்திய கலியாணி யபிராமி யேக
நிர்மயம தாகவும் நிறைந்த சிவகாமி
சித்தி தருமுமை வெயிலுவந் தாள்மனது
திறத்திவர் வைத்தமது வத்தனையுங் கொண்டே
பத்தி யுடனே யிளசைமே வுங்கோவிற்
பண்டார மிகவாழ்த்திக் கொண்டாடி வந்தான்.

---

பூராயம் பேசியே - விசித்திரமாகப் பேசியே. சாராயங்குத்தி - சாராயம் ஊற்றி.

31. சத்தி - இறைவி. கவுமாரி - மாகாளி; சப்த மாதர்களில் ஒருத்தி. திரிசூலி - சூலம் கையில் ஏந்தியவள். மயிடசங்கரி - மகிடன் என்னும் அரக்கனை வதம் செய்தவள். பயங்கரி - அச்சம் தருபவள். சவுந்தரி - அழகு மிளிர்ந்தவள். கபாலி - கபாலம் என்னும் ஓட்டை ஏந்தும் சிவன். நித்திய கலியாணி - என்றும் நிலைபேறு பெற்றவள். அபிராமி - அன்னை பார்வதி. ஏகநிர்மயம் - அழிவற்ற. சிவகாமி - சிவனின் அன்புக்குரிய பார்வதி. கோவிற் பண்டாரம் - கோயிலில் பூசை செய்யும் அந்தணர் இனம் சாராத பூசாரி.

32 மதுவுண்ட வெறிகொண்டு லாவி வெயிலு
வந்தாள் செழுங்கமல மலரடி பராவித்
துதிகொண்டு பாடிவிளை யாடித்திங்கு
தொங்குதிமி தாத்தெய்த் தெய்த்தொந்தோ மென்றாடிக்
கதிகொண்டெ ழுந்து குதிகொண்டு தேவி
காக்கும் படிக்குநல் வாக்குமே விண்டு
பதிகொண்ட குமாரெட்ட ராசதுரைப்
பாண்டியனைக் கொண்டாடிப் பண்டாரம் வந்தான்

33. மருமொய்த்த முல்லை யந்தாருமனிளசை
வாழுமெட் டீசரிரு தாள்பரவு நேமன்
தருவொத்தவன் சத்திர சோம னுக்கிர
சண்டப் பிரசண்ட வுத்தண்ட பெலவீமன்
திருவுற்ற புயசயில ராமன் வச்சிர
தேக ரமணீக னதிமோக விற்காமன்
குருபுத்திரன் குமாரயெட் டேந்திர துரையைக்
கொண்டாடிக் கொண்டாடிப் பண்டாரம் வந்தான்

34. அடையலர்கள் பரவுபொற் பாதனிந்த
அவனிதனை பொருகுடையு ளாளுமனு நீதன்
திடவிகட தடகருணி வேந்தனுயர்
தென்கழுகு மலையானை நம்பிய குபேந்திரன்
வடகர் கருநடர் துதிசெய் சமூகனினிய
மதுரநவ ரசமொழுகும் வசனநய சுமுகன்
கொடையிலுயருங் குமாரெட் டேந்திர துரையைக்
கொண்டாடிக் கொண்டாடிப் பண்டாரம் வந்தான்

---

*32.* செழுங்கமல மலரடி - தாமரை போன்ற பாதங்கள். பராவி - போற்றி. நல்வாக்கு - நல்ல வாக்கு.

*33.* மருமொய்த்த முல்லை - மணம்பொருந்திய முல்லை. நேமன் - வணங்குபவன். சத்திரசோமன் - விருந்தினர் மற்றும் வழிப்போக்கர் தங்கும் படியான வசதிகளையுடைய சத்திரங்களைக் கட்டிய பெருந்தகை. சண்டப்பிரசண்டன் - பகைவர் கண்டு அஞ்சும்படியான சினத்தையும் வலிமையையும் உடையவன். உத்தண்டன் - சிறந்த கொடையாளி. பெலவீமன் - பீமனைப் போன்ற பலம் பொருந்தியவன். வச்சிர தேகன் - இறுகிய உடம்பைப் பெற்றவன். குருபுத்திரன் - அரசகுமாரன்.

*34.* அடையலர் - பகைவர். அவனி - உலகம். மனுநீதன் - மனுநீதியைக் கொண்டு ஆட்சி செலுத்துபவன். திடவிகட - சிறந்த நகைச்சுவை உணர்வுடைய. தடகருணி - நல்லகருணை உள்ளம் கொண்ட. தென் கழுகு மலையான் - கழுகாசலம் என்ற திருத்தலத்தில் எழுந்தருளி யிருக்கும் முருகக்கடவுள். விடகர் - வடக்குப் பகுதியில் வாழ்பவர். கருநடர் - கருநாடகர். சமூகனினியன் - பழகுவதற்கு இனிமையான வன். மதுரம் - இனிமை. நவரசம் - ஒன்பான்சுவை. சுமுகன் - பண்பாளன். பண்டாரம் - சிவனடியான், இறைவனுக்கு மாலை தொடுக்கும் பணியைச் செய்பவன்.

35. நலமுலவு பொதிகையும் போற்றி வைகை
நதியையும் முதுகுடிநன் னாட்டையும் போற்றித்
தலமைபெறு மிளசையும் போற்றி முல்லைத்
தாரையுந் தூண்டுபரி தன்னையும் போற்றி
பெலமான வானையும் போற்றி வெற்றி
பெருகு கருடக் கொடிமும் முரசையும் போற்றிக்
குலவான்றன் னானணையும் போற்றித் துரையைக்
கொண்டாடிக் கொண்டாடிப் பண்டாரம் வந்தான்.

### கலிப்பா

36. அன்னை பத்திர காளிகளி யாட்ட மடவாய் முகித்து
மின்னுங் கனகமய மெய்நீ ராத்தை யருக்கும்
பன்னுதமிட் டென்னிளசைப் பண்ணைமள் ளரெல்லோரும்
இன்னிலத் தோர்மெய்க்க எருதுகட்ட வந்தாரே.

### சிந்து

37. எண்டிசை யெங்கும் புகழுங் கீர்த்தி
இணங்கு மிளசை மள்ளர் சொற்படி
கொண்டு தலைமேல் குதிரை சுமந்து
குயவனார் வந்தார் வணங்கி
அய்யனைக் கும்பிட்டு மனத்தெம் பிட்டுடனே

இயல்புடன் பரிதனைச் சன்னிதி முன்
னிலங்க நிறுத்தினார் பாயை நிறுத்தித் தூபங்
கொடுத்துப் பள்ளர்
கையில் விபூதி கொடுக்க யிரு
கையினாலே வாங்கிப் பூசிக்கொண் டெருது கட்டுவராம்

---

*35.* நலமுலவு பொதிகை - நன்மைதரும் பொதிகை. வைகை - பாண்டி நாட்டில்பாயும் நதி. பெலமான; பலமான - உறுதியான. கருடக்கொடி - கருடனைக் கொடிச்சின்னமாகக் கொண்ட கொடி.

*36.* மும்முரசு - மணமுரசு, போர்முரசு, கொடைமுரசு எனும் மும்முரசு. பத்திரகாளி - அச்சம் தரவல்ல காளி. கனகமய - தங்கமயமான. எண்டிசை - எட்டுத்திசை. திரை - திரை. குயவனார் - மண்பாத்திரம் செய்யும் தொழிலாளி. மனத்திரும்பு - மனஉறுதி. பரி - குதிரை. தூபம் - விளக்கு. விபூதி - திருமண். ஊட்டம் போட்டு - புகைபோட்டு. வடம் - தடித்த கயிறு. கொட்டமிட்டு - இறுமாப்பு காட்டி. கொக்கரித்து - பேரொலி செய்து. யெட்டக்குடும்பன் - பள்ளர்களின் தலைவன்.

*37.* முத்திருளாண்டி - பள்ளர்களின் ஒருவன்.

ஆட்டி யூற்றின் பருத்தி விதையியல்பினு
மதுவுமவர்க்குங் கலந்து
கூட்டி யூட்டம் போட்டு மாட்டைக்
கொணர்ந்து கட்டுவராம்
வடத்தின் பூட்டை யவிழ்த்து மாட்டின்
வலுக்கண் டறிந்து பெலத்தி லடர்ந்து
நடத்தி யந்த யிடத்திற் றங்கள்
திடத்தைக் காட்டுவராம்
கொட்டமிட்டுக் கொக்கரித்துப் புயங்கள்
தட்டிவடத்திற் கட்டுமெருதைக் கெட்டியாகவே
யெட்டக் குடும்பன் தொட்டுப் பிடிப்பனாம்
நீண்ட வடத்திற் பூண்ட காளையைத்
தூண்டி முத்திருளாண்டி சங்கரன்
வேண்டிச் சிவத்தப் பாண்டியன் முன்பு
மீண்டு பிடிப்பாராம்.

மதத்தினாலும் வந்தெதிர்த்த வெருதை
வலியப் போய்க்கடும் புலியைப் போலவே
குதித்தி ளம்புனம் பண்ணைப் பச்சேரிக்
குடும்பர் பிடிப்பாராம்.
பூச்சன் நமக்கு வாச்சு - தென்றொரு
போருக்காளையை முடுக்கவே
கூச்சமில்லாமல் புதர்ப்புறம் பண்ணைக்
குடும்பர் பிடிப்பாராம்
வாய்த்த ராமனூற்றுப் பண்ணை
மள்ளர் கட்டிய வெள்ளைக் காளையைப்
பேய்த்தண்ணீர் வெறியாலே கொம்பை
யுயர்த்திப் பிடிப்பாராம்
குருமலை தனில் வாழும் கெச்சிலாக்
குடும்பன் கட்டிய யிடும்புக் காளையை
மருவில்லாத தென்னிளசைக் குடும்பன்
வளைத்துப் பிடிக்கவே

---

சங்கரன் - பள்ளர்களில் ஒருவன். பண்ணை பச்சேரி குடும்பர் - பண்ணைப் பள்ளர்களின் தலைவன். இராமனூற்றுப் பண்ணை - இராமநூற்றில் உள்ள பண்ணை. பேய்த்தண்ணீர் - கள், சாராயம் போன்ற போதைப்பொருள். கெச்சிலாக் குடும்பன் - கம்பீரமான குடும்பன். சிம்பியே - சிராய்த்தே.

கொம்பினால் மிகச் சிம்பியே யெட்டக்
குடும்பன் தனையுங் குரும்பினால் வலு
வம்பினால் வந்து பாயவே மதி
மயங்கித் தியங்கினான்.

**கலிப்பா**

38. வம்புகொண்ட கொங்கை குத்து மார்பழுந்தவே யெருது
கொம்புகொண்டு குத்தக் குடும்பன் பொருப்பானோ
அம்புகொண்ட கண்ணீரருவி சொரியச் சொரியச்
சொம்புகொண்ட பள்ளியர் மெய்சோர்ந்துருகிச் சொல்வாரே.

**சிந்து**

39. பாயும் வரிவேங்கை யெதிர்செல்வா யொருமாடு
பாயமதி மயங்கின தென்சொல்வாய் வாய்திறந்து
பேசாத தேனோ சின்னப்
பள்ளி மருந்தினால் மயங்கியது தானோ
நீயதிக பெலசாலி யாமே பள்ளர் கண்டு
நிந்தித்தா லெள்ளலாய்ப் போமே
தோயவெனை நினையாத கள்ளர்நீ மெத்தத்
துள்ளினையே தென்னிளசைப் பள்ளா.

40. ஆனைவாய்க் கரும்புகொண்டு வருவாய் மிகச்சீறி
யறியடர்ந்து வந்தாலும் வெருவாய்
மானையும் பின்றுடர்ந் தோடிப் பிடிப்பாய் சணத்திலொரு
மரக்கால் கொண்டவர்க் கென்றாலுங் குடிப்பாய்
பூனைக்கண்ணி மூத்தபள்ளி திட்டோ வல்லாது
பூருவத்தி னூழ்வினையின் கட்டோ
மோனைபெற நீயெழுந்து கொள்ளாய் மாமோக
முத்தான் தென்னிளசைப் பள்ளா.

---

*38.* கொங்கை - முலை. அம்பு கொண்ட கண்ணீர்அருவி - வில்லினின்று விரையும் அம்புபோல கண்ணீர் பெருகுதல்.

*39.* வரிவேங்கை - வரிப்புலி. சின்னப்பள்ளி மருந்தினால் - சின்னப் பள்ளி பள்ளனுக்குச் செய்த வசிய மருந்து காரணமாக. நிந்தி - திட்டு. எல்லள் - நகைத்தல். தோயவினை - முன்வினை. கள்ளர் - திருடர்.

*40.* ஆனைவாய்க் கரும்பு - யானை வாய்க்குள் சென்ற கரும்பு திரும்பப் பெறமுடியாது. இது ஒரு மரபுத் தொடர். வெருவாய் மான் - அச்சம் கொண்ட மான். மரக்கால் - முகத்தல் அளவையில் ஓர் அளவை. பூனைக்கண்ணி - பூனைக்கண் போன்ற கண்களைக் கொண்டவள். திட்டு - வசை. பூருவத்தினூழ்வினை - முன் சென்ம வினை.

### கலிப்பா

41. நெஞ்சூ டெருதுகுத்தும் நீள்காயத்தாற் காய்ந்தே
தொஞ்சே மயங்கி மதிசோர்ந்திருக்கும் வேளைதன்னில்
மஞ்சாடும் பூங்கூந்தல் மள்ளியர்கள் வாய்மொழியோர்
சஞ்சீவியாய்க் குடும்பன் தானெழுந்து கொண்டானே.

### சிந்து

42. பள்ளன் தானெழுந்து கொண்டான் - கொண்ட
பள்ளியர் திருமுகங் கண்டான்
துள்ளும் விசைமேற் கைபோட்டா-னவர்
சொல்லும் வசனமெல்லாங் கேட்டான்
புயத்தை யிருகையினா லடித்தான் - கோபம்
பூண்டு காளையை யெட்டிப் பிடித்தான்
செய்ததா லெருது பிடித்திடவே - பட்
சேரிப்பள்ளர் நடித்திடவே
தாடிகில்லி யென்று கூறிக் - கொண்ட
சாராய வெறியினில் மீறி
நாடுபுகழ் தென்னிளசைப் பண்ணை
நயினாரைக் கும்பிட்டுத் தொழுதார்
பண்ணை நயினார் முன்புவந்தார் - மனப்
பதிவாய் வரிசைமிகத் தந்தார்
நின்னேய மோடுதெய்வம் போற்றவே - பொங்கும்
நிரம்ப மழைக்குறிகள் தோற்றவே.

### கலிப்பா

43. மெய்யன்வெங் கடேசுரெட்ட வேளுதவுங் குமாரயெட்டன்
செய்யிலுள்ள வேலைமுற்றுஞ் செய்யடிமைப்
பள்ளரெல்லாம்
உய்யவென்றே தெய்வநிலை யுண்மையுடன்
போற்றியபின்
வையகத்தில் மிக்கா மழைக்குறி யுண்டானதுவே.

---

41. நெஞ்சூடு எருது குத்தும் - மார்பில் எருது கொம்பால் குத்தும். நீள்காயம் - பெரிய காயம். மஞ்சாகும் பூங்கூந்தல் - மேகம் போன்ற பூங்கூந்தல். சஞ்சீவி - உயிர்காக்கும் மருந்து.

42. வீசை-மீசை - உதட்டின் மேல்புறத்து மயிர். சாராய வெறி - குடிவெறி. நயினார் - பண்ணைக்காரன். நிரம்ப - நிறைய.

43. மெய்யன் - உண்மை பேசுபவன். உய்யவென்றே - உயரவென்றே.

### தரு

44. இருகரையும் நதியில் வெள்ளம்
பெருகி வரவே நமக்
கிங்கு மழைக்கான குறி
யெங்குங் காணுதே
கருமலைகள் நடுவுப்பட்டி
யருகாய்த் தோணுதே சிறு
கறையானெல் லாம்புற்றின் கண்வாய்
விரைய மூடுதே
தருவசை யாக்காற்றுச் சுற்றித்
திருகி வீசுதே நெடுந்
தாலமதி லன்றிலிருந்து
ஓல மிடுதே
பருவமுகில் குமாரெட் டேந்திர
துருவன் பண்ணைக்கே வாய்த்த
பள்ளரெல் லாமாடிப் பாடித்
துள்ளிக் கொள்ளுமே.

45. அதிக மாகவே பிரவாகம்
நதியில் வந்தாக்கார் புனல்
கரையு மிக்கரையு
மொக்க வருமே
சதிருடன் குளம்பெருகி வயலிற்பாயுமே
யதிசாக் கிருதியாய்
நாமல்லோ போய்ப்
பார்க்க வேணுமே
முதிரு மோலை தாழங்குடை*
யிதமுடன் வேணுந் தழல்
மூட்டுபந்த மெண்ணையுங் கொண்
டோட்டமாய் வாரும்

---

44. கறையான் - சிதல். புற்றின் கண் வாய் - சிதல் புற்றிலிருந்து வெளியேறப் பயன்படும் சிறுதுளை வழிகள். நெடுந்தாலம் - பெரிய தாலம்பூ. அன்றில் - ஒரு பறவை; இப்பறவை தன் பெடையைப் பிரிந்தால் உயிர் வாழாது என்பது குறிப்பிடத்தக்கது. பருவ முகில் - மழைக்கால மேகம். துருவன் - ஒரு நட்சத்திரத்தின் பெயர்.

45. பிரவாகம் - வெள்ளம். கார்புனல் - மழைநீர். அதிசாக்கிருதியாய் - மிகக் கவனமாய். *தாழங்குடை - தாளங்குடை. தாழங்குடை - தாழம் பூவின் இதழ்களால் செய்யப்பட்ட குடை. தழல் - நெருப்பு. மூட்டுபந்த மெண்ணை - தீவட்டி எரிப்பதற்கான திரிப்பந்தம் மற்றும் எண்ணெய்.

பதுமநிதி குமாரெட் டேந்திர
பாண்டியன் பண்ணைக்கே சற்று
பக்குவ மில்லாமற் சேக
ரிக்க வேணுமே

**தாழிசை**

46. தரைமுழுதும் புல்லுண்டாய்ப் பசந்திடுங் கார்காலந்
தழுவா மின்னார்க ளுடம்பசந்திடுங் கார்காலம்
வரைமுடியிற் கொந்து கொந்தாய் - மஞ்சாடுங் காலம்
மருவா மின்னார்க் கதிகாமஞ் சாடுங்காலந்
திரையெழு நீர்சுரந்து கலுங்கணை யடைக் குங்காலஞ்
சிமிழ்முலையில் வேளிகலுங் கணையடைக் குங்காலந்
துரையிளசைக் குமாரயெட்ட மேந்திர ராசன்
நோய்வரப் பசுங்கிளியைத் தூதனுப் புங்காலம்.

**சிந்து**

47. கண்ணா யிரத்த னேவகாற்கடற்
றண்ணீர் குடித்து மூவாபோற்
கறுத்து வெளுத்துச் சிவத்து மேகங்
கனத்திற் படர்ந்து லாவியே
எண்ணார் பரவுங் குமார யெட்ட
தெய்வேந்திரன் கையிலேந்தும்வா
ளென்னவே மிகமின்னியே யவனிகல்செய்
முரச மென்னவே

---

பதுமநிதி - குபேரனின் செல்வங்களில் ஒன்று.

*46.* பசந்திடம் - பசுமையாய் விளங்கிடும். புல்லுண்டாய்ப் பசந்திடும் தழுவி... பசந்திடும் - கார்கால மழையின் காரணமாகத் தரையில் புல் முளைத்துப் பார்ப்பதற்குப் பச்சைக் கம்பளம் விரித்தாற்போல பசுமையாகக் காட்சி அளிக்கும். அதே சமயத்தில் கார் காலத்தில் தலைவன் பொருள்வயிற் பிரிந்த காரணத்தால் தலைவியர் தேகம் பசலையால் இளைத்துக் காணப்படும். கொந்து கொந்தாய் - கொத்து கொத்தாய். மஞ்சாடும் - மலைமுகட்டில் மேகங்கள் சூழ்ந்து காட்சி தருதல். காமஞ் சாடும் - பெண்களுக்கோ, கார்காலத்தின் காரணமாகக் காமம் மிகுந்துக் காணும். திரையெழு நீர் - அலை அடிப்பதால் எழும் நீர். கலுங்கு - ஏரியின் நிறை நீர் வெளியேறப் பயன்படும் மதகு. சிமிழ் முலை - கட்டுதற்குள்ளாகும் முலை அஃதாவது இளமைப் பொலிவுடன் விளங்கும் முலை.

*47.* கண்ணாயிரத்தன் - இந்திரன். பரவும் - வணங்கும். தெய்வேந்திரன்- இந்திரன். அவனி - உலகம்.

விண்ணூ டதிரக்குமுறியே யான்
விரும்பிக் கொடுக்குங் கொடையைப் போல்
விசையுடன் திசைதிசை தோறுஞ் சென்று
விரைந்து சுரந்து நிரம்பியே
தண்ணா ரமுதத் தருவி பாயுந்
தடவரைத் திருப்பொதிகை மேற்
சார்ந்து பொழிந்து வேந்தன்புகழ்
சமான மானது வானமே.

**கலிப்பா**

48. மால்கண்டு மார்பணிந்து மாதுநித முமன்பு
மால்கண்டு வாழ்கீர்த்தி வள்ளல்குமா ரெட்டன்வெற்பில்
மால்கண்டு மாவிரதம் னாளுங் காக்குமுன்ன
மால்கண்டு மாவிரத வல்லைசெல்ல வல்லவனே.

**சிந்து**

49. கரடக் குஞ்சரக் காட்டையுங்
குறவ ரடக்குஞ் சரக்கூட்டையுங்
கானத்தேன் கோட்டை யுமவரைத்
தானத் தேனத் தாட்டையும்
விரவருஞ் சினவேங் கையுமதிற்
பொரவருஞ் சினவேங்கையும்
வெடிக்குங் களைந் தட்டையுமரி
குடிக்குங் களையுந் தட்டையுஞ்
சரபம் பிடிக்குமரியையுங் கொண்டு
வரபம் பிடிக்கு மரியையுஞ்
சாதிவள்ளிக் கொடியையும் புணர்
சோதி வள்ளற் குமாரா

---

விண்ணூடதிர - வானம் அதிர. தண்ணார் அமுதம் - குளிர்ந்த அமிர்தம். தடவரை - பெருமைக்குரிய மலை. திருப்பொதிகை - பெருமைக்குரிய பொதிகைமலை. சமானமானது - வேந்தன் புகழ் விண்வரை உயர்ந்தது என்பதை வானத்திற்குச் சமமானது என்று புலவர் வருணிக்கிறார்.

49. கரடக் குஞ்சர காட்டையும் - மதம் கொண்ட யானை திரியும் காட்டையும். குறவர் அடக்கும் சரக்கூட்டையும் - குறவர் பறவை களைப் பிடித்து அடைக்கும் பறவைக் கூட்டையும். சினவேங்கை - கோபம் கொண்ட வேங்கை. சரபம் - சிங்கத்தையும் பிடிக்கவல்ல எண்காற்புள். மரி - ஆடு. சாதிவள்ளிக் கொடி - நல்ல வள்ளிக் கிழங்குக் கொடி.

மரகத மயிற்றுரகத சரவணபவ
குருபரகுகன் மலரடிதனை
வணங்கிப் பாலைநில மதிற்
புனல் பாய்ந்ததே.

**கலிப்பா**

50. நெய்யாயர் பாடியுண்ட நீதரருள் பெருகு
மொய்யாரன் வாழ்விலுயர்ந்த குமாரெட்டன் வெற்பிற்
கையாயுத மெடுத்தோர் காலாயுதத் தொனியால்
மையா ரிரு ளிலவர் மனது கூசினரே.

**சிந்து**

51. கலையுங் கலையும் விரட்டியே முளங்
கலையுங் கலையும் பிரட்டியே
கரும்பருந்துக ளாடவே
குறவரும் யருந்துக ளோடவே
மலையு மளையும் மலையும்
மலையும் வரும் விசையினிற் றிசைதொறு
மண்டி மண்டி வாரிவாரி
வடக்குந் தெக்கு மோதிக்கா
நிலையு மெயினரிலையு மவர்
இலையும் வடத்திலை யென
ஏகமாகவே யெடுத்துக் குளிர்ந்த
பாகம் பாலைக்குக் கொடுத்துப் பின்
சிலையும் பிறையும் பொருவும் புருவத்
திருநுதற் பத்திர காளியாந்
தேவிபதம் பராவி முல்லைப்
பூவில் வெள்ளம் புகுந்ததே.

---

மரகதம் - நவரத்தினங்களில்ஒன்று. சரவணபவ - ஆறு எழுத்து மந்திரம். குருபர குகன் - குருவாக விளங்கும் முருகன். புனல் - தண்ணீர்.

*50.* நெய்யாயர் பாடி - நெய் மணக்கும்படியான ஆயர்கள் வாழும் ஆயர் பாடி. ஒய்யாரன் - உயர்ந்தவன். கையாயுதம் - கையிற் கொள்ளும் ஆயுதம். காலாயுதத்தொனி - கோழியின் சத்தம். கலை - மான்.

*51.* கரும்பருந்து - பருந்து இனத்தில் ஒருவகை. மண்டிமண்டி - வண்டல் வண்டலாய். வாரிவாரி - அடுக்குத்தொடர். சிலை - வில். பிறை - இளந்திங்கள். பொருவும் - போரிடும். தேவிபதம் பராவி - இறைவி பாதத்தை வணங்கி.

**கலிப்பா**

52. தண்டமிழ்க் கைக்கொண்டு தரமறிந்து வேணநிதி
கொண்டலெனத் தருங்குமார யெட்டமேந்திரன் வெற்பிற்
கண்டமரக் கடிப்புங் காலடியெட் டெய்தியதும்
வண்டணிதார் வேசியரும் வாழ்த்தியதுந் தேற்றியதே.

**சிந்து**

53. இடைய ருடை வீட் டையுமவர்
கிடையி லடையு மாட்டையும்
எருது பூட்டுந் தும்பையுங் குட்டை
மருது வீட்டுச் செம்பையும்
உடையான் படுத்த தடுக்கையுஞ் சின்னச்
சடையா னுடுத்த வுடுக்கையும்
ஒண்டிக் கோன்கடை காலையும் நெளி
குண்டிக் கோன்மகள் பாலையும்
படையில் முளைத்த குல்லையும்தன்
இடையிற் றளைத்த முல்லையும்
பொயிலி யளக்கும் நாழியும் நெட்டை
வெயிலி வளக்குங் கோழியுந்
தடைபடாக் கொள்ளைப் படைபோலே
சென்று சாடிச்சூறையிட் டோடியே
சங்கபாணியைப் பரவிவே வெள்ளம்
பொங்கி மருதம் புகுந்ததே.

---

52. வேணநிதி - குபேரன் செல்வத்தில் ஒன்றின் பெயர். கொண்டல் - கீழ்க்காற்று. வண்டணிதார் - வண்டுகள் மொய்யுக்கும் படியான மலர். வேசியர் - பரத்தையர்.

53. இடையர் - ஆயர் மக்கள். இடை - நடுவில். எருது பூட்டும் தும்பை - உழவின்போது மாட்டைப் பூட்டப் பயன்படும் மரம். செம்பு - நீர் எடுக்கப் பயன்படும் சிறுபாத்திரம். படுத்த தடுக்கையும் - படுப்பதற்குப் பயன்படும் தட்டி போன்ற ஒன்று. உடுக்கையும் - ஓர் இசைக் கருவி. ஒண்டிக்கோன் - ஒருவரின் பெயர். நெளிகுண்டிக்கோன் - ஒருவரின் பெயர். நாழி - ஒருபடி. கோழி - சேவல். தடைபடாக் கொள்ளைப்படை - யாரும் தடுக்க முடியாதபடி வன்மையுடன் திகழும் கொள்ளைப்படை. கொள்ளைப்படை என்பதால் தடைபடாக் கொள்ளைப்படை என்றார். சாடி - குற்றஞ் சாற்றுதல். சங்கபாணி - 'சாரங்கபாணி' என்ற இறைப் பெயரே சங்கபாணி எனக் கூறப்படுகிறது.

### கலிப்பா

54. சாடிப்பகை ஞர்சமரைவென்று வெற்றிமலர்
சூடிச்செகம் புரக்குந் துங்ககுமா ரெட்டன்வெற்பிற்
றேடிப்புதைத்ததனஞ் செங்கையத னாற் றிரக்கக்
கூடிப் பிரிந்த கொழுனர் வருவாரே.

### சிந்து

55. மருத நிலத்தி லேகமாய் வந்து
பொருத நிலத்தின் வேகமாய் வந்தம்
பாரத்தைத் தாக்கியே வனமி குந்தம்
பாரத்தைத் தூக்கியே
குருகிடப் பழனத்தையுஞ் செலம்
பெருகி டப்பழ னத்தையுங்
வளையு மங்கங் குவளையும் நெருங்கும்
வளையு முழங்கு வளையும்
பருவ ரம்பையு மருவ ரம்பையும்
பரம்பை யுங்கிள வரம்பையும்
பயத்தையுஞ் செம்பங் கயத்தையுங்
கும்பபரப்பையுஞ் சென்று நிரப்பியே
துருவ பதிகு மார யெட்டம
துரைநன் னகரை வசங்கொண்டே
சுரர்பதிப் பதம்பரவி ... நெய்தற்
தரைதனிற் சென்று பாய்ந்ததே.

---

54. சமரை வென்று - போரை வென்று. வெற்றிமலர் - வெற்றி எனும் மலர். செகம் புரக்கும் துங்கன் - உலகைக் காக்கும் புரவலன். தனம்- செல்வம். கூடிப்பிரிந்த கொழுனர் - கலவியிற் கூடிப் பிரிந்த கணவர்.

55. அம்பாரத்தைத் தாக்கியே - பெருங்குவியலைத் தாக்கியே. பழனம்- வயல். பருவரம்பை - பருவ எழில் பெற்ற வானவர் மங்கையான ஆடல்வல்லாள் ரம்பை. பயம் - அச்சம். செம்பங்கயம் - செந்தாமரை. கும்பப் பரப்பையும் - கவர்ச்சியாகக் கும்பம் போல் திகழும் திரண்ட முலையின் பரந்த பரப்பையும். துருவபதி - உறுதியான திண்மையான மனத்தையுடைய அரசன். சுரர்பதி - தேவர்களின் தலைவன்.

### கலிப்பா

56. பணியின் படங்கி ளிக்கும் பச்சை மயிலேறும்
வணிகர் கழுகா சலரை வாழ்த்து குமாரெட்டன் வெற்பின்
றுணியு மனத்தான் குறிதோன்றவும் நீதான்செவ்
வணியல் தரித்தெய்தி யெனத்தாரூயிரைத் தேற்றுவையே.

### சிந்து

57. கரும்பனைத் தலைமுறியவே சென்று
திரும்ப னைத்துலை யெறியவே
கஞ்ச மனந்தந் தியங்க வேமலங்
கஞ்சமனந்தந் தியங்கவே
பரும பரப்பணை தட்டியே சிந்து
வரும் பரப்பணை முட்டியே
பவளத் தரையு மடக்கி யேநிரம்
பவளத் தரையு மடக்கியே
பெரும்பட வலை மலைக்கவே சென்ற
டரும் படவலை மலைக்கவே
பெரிய வாளைகள் பாயவே மணத்
தரிய தாழைகள் சாயவே
விரும்பு மழவர் நுளையர் கடையர்
வெருள வடர்ந்து வருணனை
வேண்டி நெய்தற் றாண்டியே பெரு
வெள்ளம் பூந்து சிவ வெள்ளமே.

### கலிப்பா

58. முந்த ரங்க மேவிவர முந்தரங்க மாலருளசேர்
சுந்தரங் கணிந்தவன் சோமன்குமா ரெட்டன்வெற்பில்
மந்தரங் கனோ முலைசுமந்தரங்கனே துயிலென்
னந்தரங் கமே யவற்கென்னந் தரங்கள் சொல்வீரே

---

*56. பணி - நாகம். படங்கிழிக்கும் பச்சை மயில் - சினத்தில் சீறும் பாம்பின் விரிந்த படத்தைத் தன் அலகால் கொத்திக் கிழிக்கும் படியான பச்சை வண்ண மயில். பச்சை மயில் ஏறும் வணிகர் - அழகிய பச்சைப் புள்ளிகளைப் பெற்ற பச்சை மயில் மீது அமரும் முருகன். கழுகாசலர் - கழுகுமலையில் எழுந்தருளியிருக்கும் இறைவன்.*

*57. கரும்பனைத் தலை முறியவே - கரும்பின் தோகை என்னும் தலையை முறிக்கவே. உதிரும் பனை தலையெறியவே - உதிர்ந்த நுங்கின் தலைப் பகுதியை உண்பதற்காகச் சீவி எறியவே.*

*58. அரங்கம் - தண்ணீர். சுந்தரங் கணிந்தவன் - அழகு பொருந்தியவன். அந்தரங்கம் - மனக்கிடக்கை.*

### சிந்து

59. கூனக் குறவன் வீட்டை யுமதை
யானைப் பெரிய கோட்டை யுங்
குட்டையத் தேவன் கைவேலையுமவன்
கட்டிய சுங்குறு மாலையும்
பானைத் தயிருஞ் சட்டியுமுத்தக்
கோனுக் கிசைந்த பட்டியும்
பாண்டிக் குடும்பன் வயலையும் முன்னித்
தாண்டிக் குதிக்கும் கயலையுங்
கானப் புன்னைத் தூரை நெய்தற்
றான துன்னு மூரையுங்
கட்டிய வுப்பள மேட்டையும் பரும
பெட்டியி னுடகரு வாட்டையும்
வானத் தினத்தை யாவையுங் கொண்டு
தானுற் றெழுந்து லாவியே
வைகை யானு பெருகி வார
செய்கை பாரும் பள்ளீரே.

### கலிப்பா

60. துரையிளசைக் குமாரயெட்ட துங்கனுக்கு வாய்த்த
வரையிலிருந்து வைகை மாநதியில் வந்த வெள்ளந்
தரைமகள் போற்கொங்கை வரைதன்னில் முத்துமாலை
நிரைநிரை யாகப்புரளும் நேத்தியைப் போலனதுவே

### சிந்து

61. மலைக்குங் கடற்குங் தொடுத் தோன்றாது
வந்த நதியி லுந்துமீன்
வாற விசையில் மீறிவிசும்பி
லேறிக் குதிக்கும் பன்னாமீன்

---

*59.* கூனக்குறவன் - முதுகு வளைந்த குறவன். யானைப் பெரியகோட்டை - ஓர் இடம். சுங்கு - ஆடைக் கொய்ச்சகம். பானைத்தயிர் - பானையில் ஊற்றி வைக்கப்பட்ட குளிர்ந்த தயிர். கோனுக்கிசைந்த பட்டி - கோனார் விரும்பும் ஆட்டுக்கிடை. கானப்புன்னை - புன்னை மரக்காடு. உப்பள மேடு - உப்பு உலர வைக்கும் மேட்டுப்பகுதி. கருவாடு - பதப்படுத்தப்பட்ட மீன்.

*60.* நேத்தி - நேர்த்தி

*61.* வார விசை - வருகின்ற வேகம். விசும்பு - ஆகாயம்.

சலத்தைக் கலக்கும் பெலத்த வாளை
சாளை கோளை தேளி மீன்
சணளைத் திருக்கை துள்ளும் வெளுச்சி
தாவு முல்லல வாவல் மீன்
குலத்திற் கலித்துச் செலத்தைக் கலக்குங்
கூராப் பஞ்சிலை யாரால் மீன்
குறவை பறவை மசறை யசலைகுதி
கொண்டே கனகெதி கொண்டே
நலத்தில் மிகுங்குமார யெட்ட
நரேந்திரன் கருணைப் போலவே
நதியிரு கரைபெருகி வார
புதுமை பாரும் பள்ளீரே.

**கலிப்பா**

62 கற்றமுத் தமிட்குநித்திய கட்டளைப்படித்தரத்தி
லுற்றமெய்க் கலிப்பிர சித்த ருக்கழிற்று யாச்சிப்பெற்று
மெய்யுகட் குதித்த முக்கிய சக்கிய வுக்கிர கிரகத்த
கொற்றவர்க் குளுச்சித குமாரயெட்ட பூபதியே.

**சிந்து**

63. பெரிய துதிக்கை மூக்கன் கல்வாய்ப்
பித்திலாச் சிறு நெத்திலி
பெருகுங் கசலி யசளி மணலைப்
பிடிக்கக் குதிக்கும் பருவரால்
சரியும் வழலை யுழுவை கெழிறு
சம்பா நொருக்கி கருங்கணி
தங்கு செங்கனி வெங்கணைத்
திரந்தருமதிங் கலந் திமிங்கலம்

---

சலத்தைக் கலக்கும் - நிரைக்கலக்கும். பெலத்த வாளை - பெருத்த பலம் பொருந்திய வாளை மீன்.

62. கற்ற முத்தமிழ் - இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ். நித்தியக் கட்டளைப்படி - அன்றாட பூசைக்கானக் கட்டளை. பிரசித்த - சிறப்புடைய. உக்கிர கிரகம் - தீமை செய்யும் கிரகம்.

63. பித்து - ஈரல் பித்து என்ற உடலுறுப்பு.

பொரும லஞ்சன் வண்ணாத்தி நகரை
புளியிலைக் கெண்டைக் கணைவாய் மீன்
பொத்தை மலங்கு பயிந்தி மடந்தைப்
பொருகல் லாற்று மீனுட
னொருமித் தடர்ந்து பொருதிக் கடல்மீ
னொன்றோ டொன்று மோதியே
யுன்னி யுயரத் துன்னிக் குதிக்கு
முசிதம் பாரும் பள்ளீரே.

## கலிப்பா

64. வகுத்தணிகள் பகுத்துமுகில் மழைக்குநிக ரெனக் கணைகள்
தொகுத்தமரி லெதிர்த்தவர்கள் துடித்துடலில் மிக்க குருதி
யுகுத்தமரில் விழப்பொருதி யுவப்புமிகு மகத்துவஞ்செய்
குகக்கடவு ளருட்பெரு குமாரயெட்ட பூபதியே.

## விருத்தம்

65. மாரிபொழிந்திட வெள்ளிமெழுந்திடவைப்
பொன்நதிக் கரைபெருகிடவுஞ் சின்ன
னூரிலுமா வேலியோடையிலும் வளமோங்கிய
பூதலப் புரமதிலுஞ்
சீரிசை பண்ணை விசாரணை செய்பவர் தென்னிளசைத்
துரைதன்னிடமே
காரியம் விண்டிட யாவரு மாற்றங்கரைதனில் வந்து
திரண்டனரே.

---

துன்னிக்குதிக்கும் - துள்ளிக் குதிக்கும். உசிதம் - தகுதி, மேன்மை.

*64.* முகில் - மேகம். மழைக்கு நிகரென கணைகள் - வானிலிருந்து இறங்கும் மழை போல் அம்பிலிருந்து கணைகள் விரைகின்றன. (இதே போன்று திருப்பாவையில் 'தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழை போல்' என்ற ஆண்டாளின் சொல்லை ஈண்டு எண்ணிப் பார்க்கத்தக்கது.)

*65.* மாரி - மழை. வெள்ளி எழுந்திட - விடிவெள்ளி எழ (வெள்ளி எழுந்து வியாழன் உறங்கிற்று என்ற பாவை வரிகள் ஈண்டு எண்ணிப் பார்க்க). சின்னனூர் - ஓர் ஊரின் பெயர். மாவேலி ஓடை - ஓர் நீரோடையின் பெயர். பூதலப்புரம் - ஓர் ஊர்ப்பெயர். விசாரணை - ஆராய்ச்சி; விசாரிப்பு.

### கலிப்பா

66. விருதரசர் போற்றும் மனுவேந்தன் வெங்கடேசுரெட்ட
தருமதுரை யீன்றகுண சாலிகுமா ரெட்டேந்திரன்
வருசைபெற வோங்குமலைப்பொன் மாந்திமேல் நீந்திவரத்
துரைமகிழ் சம்பானோட்டி தோணிகொண்டு வந்தானே.

67. சென்னெல் விளைந்துவளஞ் சேரிளசைப் பண்ணைமள்ளர்
வின்னமில்லா மற்றோணி மீதினிற்சென் றேறியபின்
மன்னுகலா சுக்காரர் வாய்ப்பாய்த் துடுப்புவலித்
தின்னிசையாய்த் தன்னிசை கொண் டேலேலம் பாடினரே.

### தோணிச்சிந்து

68. தருமதுரைக் குமார யெட்டன் யேலேலோகன
கருணைவெள் ளமெனத் தெய்த்தென்னா
கரைபெருகி வைப்பொன்னதியே யேலேலோ
கடல்போலே வருகுதடா
திருகுச் சக்கரமெனச் சுழல சுளிப்புனலினுட
சிக்கிடா மற்றோணியைக் கடாவப் பாபின்
னிருகரத் தினிலுறப்பிடி துடுப்பினைவலித்
திப்போது சுக்கானை மெய்ப்பாய் நிறுத்தடா
யேலேலோ

மிஞ்சுநதிப் பெருக்காக யேலேலோ
மென்மேலும் வருகுதடா தெய்த்தென்னா
அஞ்சாமல் நங்கூரத்தை யேலேலோ
அசையாமல் நிறுத்துங்கடா தெய்த்தென்னா

---

66. விருதரசர் - சிறந்த மன்னர். மனுவேந்தன் - மனுநீதியைத் தந்த ஆரிய மன்னன். தருமதுரை - அருள் உள்ளம் கொண்ட அரசர். வருசை பெற - சிறப்பு பெற, வெகுமானம் பெற. தோணி - ஓடம். சம்பானோட்டி - படகுஓட்டி.

67. வின்னமில்லாமல் - குறைவில்லாமல். கலாசுக்காரன் - மரக்கலம் ஓட்டுவோன். துடுப்பு - தோணி ஓட்டுவதற்கான கருவி.

68. திருகு சக்கரமெனச் சுழல் - விரைந்து சுழலும் சக்கரம் போன்று சுழன்று சுழித்து வரும் நீர்ச்சுழல். சுழிப்புனல் - ஆற்று நீரில் காணப்படும் ஆபத்தை விளைவிக்கும் சுழிகள். கடாவ - செலுத்த. சுக்கான் - கப்பல், படகு போன்ற நீர்ஊர்திகளைத் திசை திருப்பும் கருவி. நங்கூரம் - கப்பல், படகு போன்ற நீர்ஊர்திகளை நிலைநிறுத்தப் பயன்படும் கருவி.

வெஞ்சினத்தால் மருத்தஞ்சரைத் தோணிதனை
மேலே புரட்டுதலை யாலேது ரட்டடா
நெஞ்சகந் தன்னிலோர் வஞ்சக மில்லாமலே
நிற்குமிவர் யாவரையும் அக்கரையி லேற்றடா
யேலேலோ

மலையடி வாரத்திலிருந்து யேலேலோ
வகைக்கு வகையான கனதெய்த் தென்னா
பலசரக் கெல்லா மெடுத்து யேலேலோ
பரிந்துபெருங் கடல்தேடித் தெய்த் தென்னா
சொலவரிய வர்த்தகக் கப்பல் யாபாரிபோற்
றோளில் செய்யவே நாடிவழி கூடும்வானுபோல
நலமகிமை சேர்கின்ற வைப்பாறினைப் பாரு
நாட்டமுடனே நடந்தோட்டமாய் வருகுதே
யேலேலோ

இரையுதடா ஆற்றுவெள்ளம் யேலேலோ
இழுக்குதடா தோணிதனை யேலேலோ
வரையின் வெள்ளமானதினால் தெய்த்தென்னா
வலுவிசைக் கொண்டடிக்கு தடா யேலேலோ
அருள்பெருகு மெட்டீச ரடியிணையை வாழ்த்தடா
அம்பிகையெனுஞ் சோதியம்மனையும் வாழ்த்தடா
வரமேவு சகதேவி மலரடியை வாழ்த்தடா
வந்தனை செய்தேவெயி லுவந்தாளை வாழ்த்தடா
யேலேலோ

தண்கமழும் புனலூடே யேலேலோ
சைவளங்கள் வருதோற்றம் யேலேலோ
பெண்கள்குழல் தனக்கிணையாய் அடையண்ணே
பேணிநெஞ்சுட் டோணுதடா யேலேலோ
வெண்பணில் மதுகந்தம் பதுமமலர்
வதனமேலெழுங் குமிழிமுலை தானெழுந்துலவளாற்
கண்குளிர வேகண்டு கூடிச்சி னேகித்த
கன்னிபோற் காணுதே யின்னமுங் கேளடா
யேலேலோ

---

வர்த்தகக் கப்பல் - வியாபாரக் கப்பல். வைப்பாறு - ஓர் ஆற்றின் பெயர். இரையுது - சத்தமிடுகிறது. வலுவிசை - அதிக விசை. அருளு வெருகு யெட்டீசர் - அருளை வழங்கும் எட்டீசர். சோதியம்மன் - அம்பிகை. சகதேவி - சக்கதேவி; கம்பளத்தார் குலதெய்வம். வெயிலுவந்தாள் - கோயிலில் எழுந்தருளியிருக்கும் தேவி (இவள் காயும் சூரிய ஒளியில் விரும்பி இருப்பதை ஏற்றுக் கொள்வதாக ஐதீகம்). வெண்பணிலம் - வெண்முத்து. வதனம் - தேகம். குமிழ் முலை - அழகிய முலைகள். கூடிச்சினேகித்த - புணர்ச்சியில் மகிழ்ந்த.

மங்கையடித் துடைபோல அடண்ணே - அதோ
மலைவாழை வருகுதடா - யேலேலோ
செங்கையெனக் காந்தள் மலர் யேலேலோ
செறிவாக வருகுதடா யேலேலோ
தங்குநீர்ச் சுழியுந்தி போலுமே மலையினாற்
றய்யல்கடி தடமெனப் பொய்யல்லக் காணுதே
பொங்குநதி வெள்ளங் கடந்தேறு முன்னம்யாம்
பூண்டமயல் வெள்ளமும் பொங்குதே
பாரடாயேலேலோ

கங்கை வெள்ளங் கடப்பதற்கோ யேலேலோ
கைவள்ளம் போதுமடா யேலேலோ
மங்கை கொங்கை வள்ளமல்லால் யேலேலோ
மையல்வெள்ளங் கடக்கரிதே யேலேலோ
யிங்கினித் தாமிதஞ் செய்யாது பாயவலித்
திதமுடன் றோணி யக்கரைதனிற் சேரெனப்
பொங்கமுடனே கலாசுக்கார னேற்றிடப்
புகழ்மள்ள ரெட்டையா புரம் வந்திசேர்ந்தனர்
யேலேலோ.

**கலிப்பா**

69. எண்டிசையெல் லாஞ்செழிக்க ஏரியணை கால்பெருக
வண்டிசைக்குங் காவிவய லேறிட வேண்டிக்
கொண்டலென வந்தருள குமாரயெட்ட மால்சமுகங்
கண்டுதொழு கின்றபண்ணைக் கட்டாணி வந்தானே.

**சிந்து**

70. குட்டிங் குரங்குத் தலைபோற்
சட்டித் தலையுஞ் சிறுகோரை
போல்கைச் சூழவஞ்சாறு மயிரும்
ஒட்டுப் பேன் பற்றிய கண்ணின்
பட்டை யழகு மதிலூடு

---

மங்கையடித்துடை போல - வாழைத்தண்டு போன்ற பெண்ணின் துடைப்பாகம். கை வள்ளம் - கையாற் செலுத்தப்படும் படகு. கொங்கை - முலை. மையல் வெள்ளம் - காதல் வெள்ளம்.

69. எண்டிசை - எட்டுத் திசைகள். ஏரியணைகால் பெருக - ஏரி, அணை, வாய்க்கால் பெருக. சமூகம் - மக்கள்.

70. ஒட்டுப்பேன் - தலையிற் காணப்படும் சிறுபேன்.

வெண்ணைப்போல் வடிந்து சாடு பீளையுந்
தட்டிய யெருப்போற் கன்னம்
ஒட்டிய காதுந் தானே
சளசளெனவே கோடுவாயொழுகிய வாயும்
நெட்டை யொட்டகம் போலேயே
ழெட்டுக் கூனலின் முதுகி
னெளிப்புடன் பண்ணைக்காரனெனக்
களிப்புடன் வந்தான்.

71. கொன்னிக் கொன்னி வாய்திறந்து
சன்னை சொல்வார் மன்று
குட்டி போட்ட நாய்போலே
சள்ளிட்டுக் கொள்பாரங்
கன்னி சின்னப் பள்ளியைக்கண்
டுன்னி வைவார் மாசைக்
கள்ளி மூத்த பள்ளி மேலே
யுள்ளம் வைப்பாராம்
நன்னி சின்னப் பொன்னி
யிங்கே வாடி யென்பாராம்
நெட்டை நாச்சி மகள் பேச்சி
தன்னைச் சீச்சி யென்பராம்
முன்னும் பின்னும் பார்த்துக்
கீழு மேலும் பார்ப்பராம் பரு
மொந்தை முகப் பண்ணைக் காரர்
வந்து தோன்றினார்.

**கலிப்பா**

72. வேண்டியசைவு பாக்கிய மிகுந்தகுமா ரெட்டேந்திரப்
பாண்டியனுக் கேற்றசொந்தப் பண்ணை நயி னாரிடமே
பூண்டகரும் பொற்காப்புப் பூவையராம் பள்ளியர்கள்
கூண்டுவந்து கையெடுத்துக் கும்பிட்டுச் சொல்வாரே.

---

*பீளை - கண்ணிற் படியும் அழுக்கு. கூனல் - வளைந்த முதுகு.*

*71. கொன்னிக்கொன்னி - திக்கித்திக்கி. சன்னை - சாடை. குட்டிபோட்ட நாய் போல் சள்ளிட்டு - குட்டி போட்ட நாய்போல் குரைத்துக் கொண்டு. கள்ளீ - பொய்யுரைப்பவள். நன்னீ - சிறிது. மொந்தை முகப் பண்ணைக்காரன் - பருத்த முகத்தையுடைய பண்ணைக்காரன்.*

*72. பண்ணைநையினார் - பண்ணைத் தலைவன். கூண்டுவந்து கூட்டமாக வந்து.*

73. பண்ணையாண்டே பண்ணையாண்டே கும்பிடுகிறோம்
பாசிபற்றும் பல்லுப்பண்ணையாண்டே
கும்பிடுகிறோம்
சண்ணைக்கிடாய்ப் பண்ணையாண்டே கும்பிடுகிறோஞ்
சகசண்டி வண்டப் பண்ணையாண்டே
கும்பிடுகிறோம்
நண்ணியில்லாப் பண்ணையாண்டே கும்பிடுகிறோங்
கூழைநாக்கு மூக்கும் பண்ணையாண்டே
கும்பிடுகிறோங்
கண்ணழகைக் காதழகைக் கும்பிடுகிறோம்
கப்புக்கா லழகை மேலழகைக் கும்பிடுகிறோம்

**கலிப்பா**

74. வித்துவசனர் வாழ்த்துபுகழ் மேவுமோ ரெட்டேந்திரன்
சித்தமகிழ்ச்...* சிறந்தபண்ணை யாரிடத்தே
முத்துநகை பள்ளியர்கள் முன்புநின்று வட்டமிட்டுக்
குத்துமுலை குலுங்கக் கும்மியடித் தாடினரே.

**கும்மிச் சிந்து**

75. தென்னிளசை நகராதிபதி - புகழ்
சேருமனுக் கியான நீதிபதி
செந்திரு மார்பன் அதிக
சவுந்தர ரூபன் புவிமிசை செப்பு நிசவாய்மை
தப்பவரியாத மெய்ப்பிரவ டீக சற்புருட
மேரு பொன்னுலவும் புயன் குமாரெட்ட
மேந்திரனைப் புகழ்ந்துகும்மியடிப்பமடி
மனமகிழ்ந்து கும்மியடிப்பமடி

---

73. பாசிபற்றும் பல் - பல்லை அன்னாறடம் சுத்தம் செய்யாததால் காறை படிந்து பச்சை நிறமாக தோன்றும் படியான பல். சன்னைக்கிடாய் - சரசம் செய்யும் கிடாய் ஆடு போன்ற பண்ணை ஆண்டை. சகசண்டி - முரடன்; நாணமற்றோன். கூழை நாக்கு - குட்டையான நாக்கு.

74. *ஒரு சொல் மட்டும் எழுதாமல் விடுபட்டுள்ளது. வித்துவசனர் - திறமை மிகுந்த புலவர் கூட்டம். சித்தம் - மனம். குத்துமுலை - செறிந்த முலை.

75. செந்திரு மார்பன் - இலக்குமி உறையும் மார்பன். நீதிபதி - நீதிஅரசன். சௌந்தர ரூபன் - அழகிய உருக் கொண்டவன். செப்பு நிச வாய்மை - உண்மையே பேசுபவன். சற்புருடன் - உத்தமன். மேரு - மந்திரமலை (பாற்கடல் கடைந்தபோது இம்மலையே மத்தாக அமைந்தது; மேரு மந்திர புராணம்).

76. அந்தம்பிர கண்டனென வுதித்தோன் கழு
காசலர் பாதமலர் துதித்தோன்
அன சத்திர சோமன் வலுவித்த
கனபுத்தி நேமன் வடிதமிழர் பாணன்
சுபசோபன மிஞ்சிய பூமனிசைந்த
சொரூப சவுந்தரன் சந்திரகிரித்
துரைக்குமாரெட்டமன் பண்ணை தழையவே
கும்மி கொட்டுங்கடி சென்னெல் விழையவே
கும்மிகொட்டுங்கடி.

77. நானிலமெங்கும் பிரசித்தி பெற்றோன் - சோதி
நாயகி தாளினிற் பத்தியுற்றோன்
நாகரீகன் மின்னார்கள் சையோக மோகன விகசித
நளினத் திருநடமிட்டிட
நவரற்றின மணியிட்டுந ன்னயமிட்டிலகிய செச்சையில்
நவசித்திர கொலுவுற்றவன்
மானிதி மேரு குமாரெட்டமன் மெய்க்க
வட்டமிட்டுக் கும்மிகொட்டுங்கடி கனகட்கு
மெட்டாய்க் கும்மியடியுங்கடி.

78. சந்தடி யானயிடத் தனிலேயொரு
சற்பம் படம் விரித் தாடுதென்றே
வந்தடிக்கக் குனிந்துற் றுப்பார்த்து
வருகிறார் பண்ணை யாண்டவனார்
உள்ள முருகிறார் பண்டை யாண்டவனார்.

---

76. அந்தம் - அழகு. கழுகாசலர் - கழுகுமலையில் வீற்றிருக்கும் ஆண்டவன். சோமன் - சந்திரன். கனபுத்திநியமன் - நிறைந்த அறிவுடையவன். சுபசோபனம் - நல்வாழ்த்து. சொரூபன் - அழகன். சௌந்திரன் - அழகன்.

77. பிரசித்தி - சிறப்புடைய. சைகை - குறிப்புக் காட்டல். நளினம் - இங்கிதம். கொலு - காண்போருக்கு இன்பந்தரும் காட்சிகூடம். மாநிதி மேரு - சிறந்த செல்வங்களை உடைய மேரு மலை.

78. சந்தடியான இடம் - ஒலி நிறைந்த இடம். சற்பம் - பாம்பு. பண்ணையாண்டவர் - பண்ணைத் தலைவன். பண்டையாண்டவர்- பழமையை விரும்பும் பண்ணைக்காரர்.

79. ஊருக்குள் நிற்கிர தேர் பார்ப்போமென
ஓவியைக் கண்காட்டி வாவெனவே
ஆருக்குந் தோற்றாமல் சன்னைகாட்டி
யழைக்கிறார் பண்ணையாண்டவனார் மாலி
லிளைக்கிறார் பண்ணையாண்டவனார்.

80. வள்ளைக் கொடிதனில் மான்குதிக்க
வந்தமா னடிகாணாமற் சந்தடிக்குள்
உள்ளும் பிறம்புமடிக்கடி பார்த்துவர
யூறுகிறார் பண்ணை யாண்டவனா ரன்னம்
பாருகிறார் பண்ணையாண்டவனார்

81. சொற்றால் வட்டமெல்லாம் விரும்புஞ்
சிக்கிசொக்கி துடைக்குளி டுக்கியதோர்
சிற்றால் வட்டத்தைப் பார்க்கவேணுமெனத்
தியங்கிறார் பண்ணையாண் டவனார்மதி
மயங்குறார் பண்ணையாண் டவனார்.

82. மீனத்தையு மெட்டிப்பார்க்கு கிரீரகும்ப
மேலேகண் மிகநோக்குகிறீர்
தானத்தை யெண்ணிக் குறிப்பையறியவோ
சாதிக்கிறீர் பண்ணையாண்டவரே மனஞ்
சோதிக்கிறீர் பண்ணையாண்டவரே.

83. கும்பத் திலத்தம வரவழைப் பேனென்று
கொஞ்சிக் கொண்டே சற்றே கெஞ்சிக்கொண்டே
சம்பிர தாய உபாயமதாகவே
சாற்றுகிறீர் பண்ணை யாண்டவரே யும்மைப்
போற்றுகிறோம் பண்ணை யாண்டவரே.

---

79. நிற்கிரத்தேர் - விழா முடிந்து நிற்கும் தேர். ஆருக்கும் - யாருக்கும்.

80. வள்ளைக்கொடி - கொடிவகைகளுள் ஒன்று. பிரம்படிக்க - உழுத வயலை சமப்படுத்தல்.

81. சிக்கி சொக்கி துடைக்குள் இடுக்கியதோர் சிற்றாள் வட்டம் - பள்ளியர் தம் துடை மறைவில் மறைந்திருக்கும் சிறு விசிறி போன்ற அல்குல்.

82. மீனத்தை எட்டிப்பார்க்கும் கிரீரக் கும்பம் - மீன் போன்ற கண்களை எட்டிப் பார்க்க வேண்டி மலைக்கோடென உயர்ந்த முலைகள் (இதனின் ஆசிரியர் பள்ளிப்பெண்களின் தனமானது பெருத்து, கனத்து இருப்பதோடு காண்பவருக்குக் காமத்தை ஏற்படுத்த வல்லது என்பதையும் சுட்டுகிறார்).

83. உபாயம் - தந்திரம். சம்பிரதாயம் - மரபு.

84. பட்டப்பகல் முகசந்திரனை யல்குற
பரம்புதீண்டவதோ பாற்குதென்றே
எட்டியெட்டிக் கீழுமேலு மேபாற்கிறீ
ரென்செய்கு வோம்பண்ணை யாண்டவனே
பள்ளருஞ் சகியார் பண்ணையாண்டவரே.

85. காலனை யோரத்தில் செய்யளவே வெகு
காசலை யாகவே பேசுகிறீர்
ஏலவே பள்ளனு முகசெய் காலுமக்கு
இணங்குமோ பண்ணை யாண்டவரே யும்மை
வணங்குகிறோம் பண்ணை யாண்டவரே.

86. தன்னூற்றுப் பாயும் வாய்க்கால் வழியேகையாற்
றடவிநண்டு பிடிக்கவென்றே
உன்னுகிறீ ரெங்கள் பள்ளன் செய்யுந்தொழில்
உமக்கிதேன் பன்னையாண்டவரே வெகு
சமத்தல்லோ பண்ணை யாண்டவரே

87. ஊமையைப் போலிருந்தே சுனைக்கீழதி
லுற்ற வராலைப் பிடியாமல்
ஆமைபிடிக்கவோ பார்க்கிறீர் தோசமி
தாகுமோ பண்ணை யாண்டவரே சும்மா
போகுமோ பண்ணை யாண்டவரே

88. செல்லியைக் கொண்டந்த நல்லி
தன்னைக் கூடிச்சேர விணக்கம் நீ செய்யனவே
மெல்ல ரகசியங் காதினி லோதிற்
வேடிக்கை தன்னையும் பாருங்கடியவ
ளோடிப் போய்ச் சொல்வதும் பாருங்கடி

---

*84.* *பட்டப்பகல் முகச்சந்திரன் பார்க்குதென்றே - அழகிய தெளிந்த முகத்தை உடைய காரணத்தால் பள்ளியரைப் பட்டப்பகல் சந்திரன் என உவமைப்படுத்துறார். சகியார் - தோழிமார்.*

*85.* *காலன் - எமன். காசலையாகவே - சமத்தாகவே.*

*86.* *தன்னூற்றுப் பாயும் வாய்க்கால் - நீர்சுரக்கும் ஊற்றுக் கண்களை உடைய வாய்க்கால் (வேற்று இடத்தில் இருந்து வரும்நீரை வயலுக்கு வாங்கித் தருவது வாய்க்கால். ஆனால் இங்கே ஊற்றுக்கண் அதிகம் பெற்றுள்ள காரணத்தால்தானே நீர்சுரந்து நீர்பெருக அதன்காரணமாக வாய்க்காலாக அமைந்தது என ஆசிரியர் கூறுகிறார். கையால் தடவி நண்டுபிடிக்க - வாய்க்காலில் நீர்நிறைந்த காலத்தில்தனது கைகளாலேயே தடவித்தடவி மீனோ நண்டோ பிடிப்பது இன்றும் கிராமப்புற மக்களிடையே உள்ள பழக்கமாகும். சமத்து - கெட்டிக்காரத்தனம்.*

*87.* *தோசம் - குற்றம் (அ) பாவம்.*

*88.* *வேடிக்கை - வினோதம். கூடிச்சேர - கார்காலத்தில் ஆண்கள் பெண்களைப் புணரும் நோக்கோடு இணைதல்.*

89. காத்தியுஞ் சாத்தியும் வாருங்கடி யொரு
கட்சியாய் நீங்கள் கைகோருங்கடி
நேத்தியதாய்ப் பண்ணை யாண்டவர் கொண்டாட
நின்றே கும்மியடிப்பமடி செய
மென்றே கும்மியடிப்பமடி.

90. சொர்ணமழை பொழிகுமார முத்துராம
சுவாமிமுகில் வெங்கடேசு ரெட்டு
மின்னனுயிர்த் துணைக்கு மாரெட்டமன் பண்ணை
வளரக்கும்மி யடிப்பமடி பயிர்
குளிரக் கும்மிய டிப்பமடி

**கலிப்பா**

91. பூத்த முல்லைத் தாமப்புயன் குமாரெட் டேந்திர
பார்த்திபன் மெய்ப்பாமிளசைப் பண்ணை நயினாரிடத்தே
நேத்திபெறக் கும்மிகொட்டி நேசமுட னேகியபின்
மூத்தபள்ளி பள்ளனுட மூர்க்கமெல்லாஞ் சொல்வாளே.

**சிந்து**

92. கேளுங்கேளுங் கிழவிசொல் வார்த்தையைக்
கின்னரக்காரன் கேட்பானோ காணுங்
கோமுமீசுரமாச்சுது நண்டு கொழுத்தாற்
சும்மா சிலவிலிராது வாழுநாளையி லென்னை
கேழ்ப்பானோ யிகழ்ந்து பின்வந்த பள்ளியைச்
சொந்தமென்றெண்ணி யென்றோளி லேறிச்
செவியைக் கடிக்கவே துள்ளுரான்
பண்ணைப் பள்ளன் காணாண்டே.

---

*89.* காத்தியும் சாத்தியும் - பள்ளிப் பெண்கள் பெயர்கள். கச்சி - கட்சி (ஒருபக்கமாய்).

*90.* சொர்ணமழை - தங்க மழை. முத்து ராமசுவாமி - எட்டயபுர சமஸ்தானத்தைச் சேர்ந்த ஒருவர் பெயர். வெங்கடேசு இரட்டன் குமார ரெட்டனின் முன்னோன்.

*91.* பார்த்திபன் - அரசன். மூர்க்கம் - மூடன் (நூறாண்டு பழகினும் மூர்கர்க் கேண்மை நீர்கொள் பாசிபோல் வேர் கொள்ளாதே என்ற ஔவையின் கூற்று நினைக்கத்தக்கது). நேர்த்திபெற - செம்மைபெற.

*92.* கேளுங்கேளுங் - அடுக்குத் தொடர். கின்னரக்காரன் - இசைக் கலைஞன். நண்டு கொழுத்தால்சிலவிலிராது - நன்கு உண்ட நண்டானது தன்வளையில் தங்காமல் வெளியில் புறப்பட்டு வீணே மாயும்.

93. மாட்டை யேரிட்டுப் பாரானிளையாள்காவ
மாட்டையே பிரதான மதாகநெற்
கோட்டையே கட்டப்பாரான் வளமுலைக்
கோட்டையே கட்டப்பார்ப்பன் சென்னைல் வயல்
காட்டையே சுற்றிப் பாராளென் றன்னைக்கொக்
காட்டையே செய்துகண்ணிட்டும் பாரான்
ஏட்டிக்கிப் போட்டிசெய்து நெல்லெல்லா மிரைத்தான்
பேய்த்தண்ணீர்க் கென்செய்வே னாண்டே.

**கலிப்பா**

94. மூத்தபள்ளி பள்ளன்வகை முற்றுமுரைத் தேகியபின்
பார்த்திருந்து தென்னிளசைப் பண்ணைநயி னாரிடத்தே
வாய்த்தபள்ள னைக்குடிலில் வைத்திளைய பள்ளிவெகு
தோத்திரமாய் வாய்திறந்து தோன்றவுரை சொல்வாளே.

**சிந்து**

95. மெள்ளவந்து மூத்தபள்ளி
விடியக்கால மெழுப்பினாள்
பள்ளர் வேலை யிருக்குதென்று ராலமாய்ச்
சொல்வாள் வாய்க்கொழுப்பினால்
பள்ளன் றானுமச்சொல் விள்ளுமுன்னே
யெழுந்தோடினான் துரைபண்ணைக்
குளங்க ளெங்குந் தண்ணீர்ச் சுரப்பறிய நாடினான்
கள்ள மெள்ளளவு முள்ளத்தில் வைத்திறியானே வரக்
காண்கிலேனே யின்னமாங் கென்னமோ வறியேனே
உள்ளகா ரியமுங்க ளுள்ளத்துக்கே
தெரிந்திடுமே மனதுற்றுச் சோதித்ததை முற்றும்
பார்த்தால் சரிப்படுமே.

---

*93.* காவ மாடு - கோயிலுக்கு நேர்ந்து விடப்பட்ட மாடு. ஏட்டிக்குப் போட்டி - விதண்டா வாதம். பேய்த்தண்ணீர் - கள் (அ) சாராயம் (மனதையும் அறிவை யும் மயக்கி மனித நிலையில் இருந்து விலகி, விலங்கு நிலைக்கு கொண்டு செல்வதால் இதனைப் பேய்த் தண்ணீர் என்கிறார்).

*94.* குடில் - சிறுவீடு. தோத்திரமாய் - வணக்கத்திற்குரியதாய்.

*95.* விடியற்காலம் - காலை நேரம். சாலமாய் - தந்திரமாய். வாய்க் கொழுப்பு - திமிர். தண்ணீர் சுரப்பறிய - நீர் ஊற்று அறிய.

### கலிப்பா

96. புத்தமுர்த மொத்தமொழி பொற்பினில் நிகர்த்தவிழி
யுத்தமியி வட்குலகி லொப்பிலை மனப்பிறுதி
வைத்திதழ ருத்திமருவிப் புணர்மகிழ்ச்சியொடு
கொத்தலர் தரித்தருள் குமாரயெட்ட மேந்திரனே.

### சிந்து

97. சிறுகாலு மடிக்கவகை
செய்காலுங் கண்டபள்ளன்
மறுகாலிற் செய்காலில்
வருவானோ பள்ளிகாலை
மடைக்கிப் போகங்கண்ட பள்ளன்
பெரியகண வாய்மேலை மடைக்குப்
போகவிரும்புவனோ
பள்ளி களத்தினெல்லை ராப்
பகலாய்க் காத்திருக்கும் பள்ளனிந்தக் களத்தினெல்லைக்
காசலையாய்க் காற்பானோ பள்ளி வடிக்குமரக்
காலதிகம்மதை மிகுந்திடும் படிக்க வடிக்குமரக்
கால்பிடிக்க வருமோ சொல்பள்ளி
திண்ணையில் வந்திருந் துன்னொடு
சீராடும் பள்ளினிந்தப்
பண்ணையில் வந்துற்ற பயிர்பாற்பானோ பள்ளி
கொழுப்பார்த்துச்சுகந்தேடிக் கூடுகின்ற பள்ளுனுழுங்
கலப்பை யறிந்தேர் காலைக்கட்டுகின்ற பள்ளனுழுங்
கலப்பை யறிந்தேற் காலைக்கட்டுவனோ பள்ளி.

98. உடம்பதனங் கனம்பதனா லுடையாமல் மருவுள்ளன்
வடம்பத னஞ் செய்காலில் வருமோ சொல்பள்ளி
மானடியைக் கண்ட பள்ளன் வயலடிக்க வருவானோ
யேனடி பொய்வார்த்தை சொல்வதென்னடி
சொல்பள்ளி.

---

96. புத்தமுர்தம் ஒத்தமொழி - அமிர்தம் போன்ற இனிய மொழி (தமிழை அமுதத்தோடு ஒப்பிடுவது மரபு)(தமிழுக்கும்அமுதென்று பேர்- பாரதி தாசன்). பொர்ப்பினில் நிகர்த்த விழி (பொருப்பினில் நிகர்த்தவிழி) - மலைச்சாரலையும் விஞ்சும் விழி. உத்தமி - பத்தினி (சிறந்த பெண்).

97. பள்ளிகாலை மடக்கி போகம் கண்ட பள்ளன் - கொக்கோகம் கூறும் போகக்கலையில் ஒரு நிலை. திண்ணை - வெளிமுற்றம்.

98. பதனம் - பத்திரம். மானடி - மானின் சாயல்ஒத்த பாதங்கள். வயலடிக்க - நெற்கதிர் அடிக்க.

### கலிப்பா

99. கோட்டிற்சி றந்ததனக் கோதைசின்னம் பள்ளியைக்கை
நீட்டியடிக் கச்சினந்த பண்ணையார் முன்வயற்
காட்டி லிருந்துவந்து காண்பது போல்ப் பள்ளனுந்தன்
வீட்டிலி ருந்துவெளியில் வருகின்றானே.

### சிந்து

100. நேத்திநேத்தி காண்பண்ணை நயினாரே
நீ ரெங்கே போனீர்
ஊரினிற் காணோங்
கார்த்திகைப்பிறை போல்வர வின்றும்மைக்
கண்டேனென் றிருகையெ டுத்தேபின்
வார்த்தையேது வசனங் களேதூள்
வரும்மேது சொல்வாய்ப் பகட்டேதென்
றேத்தபண்ணை வயலுமுஞ்சஞ் சுவமெல்லாஞ்
சொல்லுகிறேன் பண்ணை யாண்டே

101. தாணுவாகு மெட்டீச ரறியவோர்
தரதனன் னாளுழுத நிலத்தை
வேணுமென்று பயிரிட நன்றாய்
விளைந்தபின் நெல்லை
மெத்த மெத்தத்தான்
காணுமென் றிருந்தே னதுமோர்
குடங்கண்டுதே யென்ன காரணஞ் சொல்வேன்
ஊணுக்கா மென்றுபார்த்தே னதுவுமோ
உப்புக்கொண்டு பதந்தப்பிப்போச்சே.

---

99. கோட்டிற் சிறந்த தனம் - மலையினும் விஞ்சிய பெருமுலை. கோதை - கோதை.

*100.* நேத்தி நேத்தி - நேர்த்தி நேர்த்தி (அடுக்குத்தொடர்). கார்த்திகை பிறைபோல் - கார்த்திகை மாதத்தில் தோன்றும் மூன்றாம் பிறை போல். (இப்பிறையின் சிறப்பு வலக்கோடு உயர்ந்து காணப்படுவதாகும். அவ்வாறு தோன்றினால் மழை குன்றாது பெய்யும் என்பது நம்பிக்கை). சஞ்சுவம் - ஆயத்தம்.

*101.* மெத்த மெத்தத்தான் - நன்கு அடிக்க அடிக்கத்தான் நெற்றாளில் இருந்து நெல் பிரியும். ஊண் - உணவு.

102. ஆனைக் கொம்ப னுள்ளூரி லெட்டீசுபரர்
ஆலையத்தை விட்டப்பாலைப் போகலை
தானத்தரா தலத்தார மற்றியாருந்
தழைக்க முத்தி விளைக்கும தல்லால்
மானைக்கொண் டவர்க்கென் றென்றும்
வாலானூர் வாசியென்றும் பேர்வாசியதாச்சு
சேனைக்கா வலாயாரு மோர் நெல்லையே
தேடியன்போடு செல்லுவ ராண்டே.

103. செட்டிப் போரிற் கருஞ்சூரைமுன் குத்திச்
சீக்கிரத்தில் மாவாக்கியே போட்டான்
கட்டிவைத்த சிறகியெல் லாமின்று
காட்டுக் குளக்கரைக்குச் சென்று போச்சு
மெட்டு மீறிக் கொட்டாரத்தி னெல்லையும்
வெள்ளைக் காரர்கண்டுள்ள மகிழ்ந்தார்
வட்டகைக்குள் மணல் வாரியைத் தெண்டு
மலையனுட் கொண்டு வாழ்ந்தான் காணாண்டே.

104. சுத்தவெள்ளை மணிமுத்து செட்டி
தொழிலுக் கேற்றவழி செய்யலாச்சுப்
புத்தினிங் இல்லை மேலை மலையாளப்
பூமிதன் னிலுணவு தலாவல்லி
தத்தையெல்லாந்திரட்டி யெடுத்து
மென்மேலும் வாணிகாதேவி கைக்கொண்டு
முத்தைய னறழவாய் வசஞ்செய்தவன்
முன்னின்றான் நிசஞ்சொன்னேன் காணாண்டே.

---

*102.* ஆனைக் கொம்பன் முத்தி - ஓர் அரிசிவகையின் பெயர் (இது ஆனைக் கொம்பன் முற்றி என வழங்கப்படும் போலும்). வாலானூர் வாசி - வாலானூரில் வாழ்பவன். வாசியதாச்சு - சொல்லலாயிற்று. சேனைக் காவல் - காவற் செய்யும் படை.

*103.* செட்டிப் போர் - நெற்போர். சரை - ஓம் மீன். சிறகி - நீர்வாழ் பறவை. கொட்டாரம் - பண்டம் வைக்கும் அறை. வெள்ளைக்காரர் - வெளிநாட்டான். வட்டகை - அடைப்பு நிலம்.

*104.* சுத்த வெள்ளை மணிமுத்து செட்டி - ஒருவரின் பெயர். (வெள்ளை ஆடையையே எப்போதும் அணிவதால் இப்பெயர் பெற்றான் போலும்). மலையாள பூமி - கேரள நாடு. தத்தை - கிளி. வாணிகா தேவி - கலைமகள். நிசம் - உண்மை.

105. சொல்லக் கேளுமுழ வுக்குமாட்
டின்னுகையை யெல்லாம் வகைவகையாக
மெல்லத் தான்படுத்தா லும்மிடத்தில்
விசேடமா கியமாடு ரெண்டுண்டு
செல்லத் தான்சுமை தூக்கிவைக்குமுன்
சிரசின்மே லஞ்சுமாடே றிக்கொள்ளுங்
கல்விக் காரனென் றெண்ணாதையும் பண்ணைக்
காரரேயின் னங்கூறக் கேளாண்டே.

106. மட்டில்லாச் சடையாண்டிக் கிழவன்
வசத்திலே யொருமாடுண் டதற்கே
கட்டுக்கட் டாய்ப்புற்போட் டாலும்வாய்
கொண்டுகவ்வா மூல்முழுக்கற் போலிருக்குந்
தட்டித் தட்டியெழுப் பிப்பாருஞ்
சகசண்டிபோல் மண்டிபோட்டுக்கிடக்குங்
கிட்டப்போய் நானடுக்கவொட் டாதின்னங்
கேளுந்தென் னிளசைப் பண்ணையாண்டே.

107. கம்மியன் கையினாற் செய்யுமேழி
கலப்பைகொண்டு கொழுவிது வன்றிச்
செம்மையாக விம்மண்டலத் தைக்கொம்பு
தேய்த்தே வுழுங்கருங் காளை
நம்மள்கை வசமாகுமென் றேமுற்றும்
நம்பியெண்ணி யிருக்கின்ற போது
பம்மிவிண் ணிலிருந்து பருந்தொரு
பாச்சலாய்க் கொண்டு போச்சுக் காணாண்டே.

---

*105.* செல்லத்தான் சுமைதூக்கி வைக்குமுன் சிரசின் மேல் அஞ்சுமாடு ஏறிக்கொள்ளும் - தலையிற் சுமை ஏற்றுவதற்கு முன்னரே ஐந்து மாடு இழுக்கும் அளவிற்கான சுமை தலையில் ஏறிக் கொள்ளும்; சுமை ஏற்றுவதற்கு முன்னே தலையில் பாரம் தெரியாமல் இருக்க வைக்கப்படும் சிறு துணியாலாகிய சுறுமாடு ஏறிக் கொள்ளும் என்பதும் பொருந்தும்.

*106.* சடையாண்டிக் கிழவர் - ஒருவரின் பெயர். தட்டித்தட்டி எழுப்பி - அடித்து எழுப்பி. கிட்டப் போய் - அருகிற் போய்.

*107.* கம்மியன் - ஆசாரி. மேழிகலப்பை - விவசாயக் கலப்பை. நம்மள் - நாம். பம்மி - பதுங்கி. பாய்ச்சல் - பாய்தல்.

108. முற்றும் வெள்ளை சிவலையெனுங் காளை
முன்னும் பின்னுமதாகப் பிறந்ததில்
மூத்த காளைக்குக் கொம்பொன்று நல்
வாயென்ன ஓட்டம் போட்டாலு
மிருந்த விடத்திலே நின்று தூங்கலாய்
நிற்கும் பின்னுதித்த விளஞ் சிறுகாளை
பெலத்த காளை யதன்கொம்பிரண்டுஞ்
சென்னிமீதி லிராதிருப் பக்கத்திற்
சேர்ந்த காரணஞ் செப்பங்காணாண்டே

109. கன்னற் றோட்டத்தை வின்னப்படுத்தும்
காளையோ மதக்காளை யதைத்தான்
உன்னி யாரும் பிடிக்கப் படாமல்
உலாவி ராப்பொழு தோடித்திரியும்
பன்னுகின்ற கலைக்கொம்புக் காளைப்
படுக்கும் ராமயன் றன்னகரத்தில்
பொன்னுலாவும் புயன்குமாரெட் டேந்திரன்முன்
போருக் காளை யனேகமுண் டாண்டே

110. எங்கும் போற்று மிளசைக்குமாரெட்ட
மேந்திரன் பண்ணை யுழவின் வடத்தைச்
சங்குத் தரகனெனது வடமென்று
சத்தியமாக நெய்தன்னிற் கையிட்டான்
இங்கு வாய்த்த கலப்பையுண்டான
தெடுத்தோ ராண்டி மழுவேந்தி நின்றான்
கங்கை வங்கிஷத் தாரெல்லா மேழியைக்
கைக்காழ்த் துசங்கட்டி னாராண்டே.

---

*108.* சிவலையெனும் காளை - சிவப்புநிறக் காளை. பெலத்த காளை - வலிமை மிக்க காளை. சென்னி - தலை.

*109.* கன்னற் தோட்டம் - கரும்புத் தோட்டம். கலைக்கொம்பு காளை - வளைந்த கொம்பையுடைய காளை. இராமயன் தன் கரத்தில் - இராமயன் கைப்பிடியிற்.

*110.* வடம் - பெரிய கயிறு. சங்குத்தரகன் - ஒருவன் பெயர். ஆண்டி - ஒருவன் பெயர். கங்கை வங்கிசத்தார் - கங்கை வமிசத்தார்.

111. சிலவுபோகக் கொழுமிச்சமுள்ளது
சேரவாண்டவர் தோப்புக்குள் வைத்தார்
நலமி தென்று சிவன் மின்னுகந்தனை
நாளுங் கொண்டுமை யாளுடன் வாழ்ந்தார்
தலம்விளங்கும் நெடுமுழக் கோலையுஞ்
சாகையிற் றனதாக யெடுத்தார்
உலகமெங்கும் அறியாதோ நானுமக்
குள்ள காரிய முரைத்தேன் காணாண்டே.

112. வார்த்தை யெல்லாம் வளர்நேத்தி காண்டிரு
வார்த்தான் செய்கதையைப் போலாச்சென்
னார்த்துப் பண்ணை யினார் பள்ளர் நல்ல
தாகட்டும் புத்தி சொல்லுகிறோம் பார்
கீர்த்தி சாலி குமாரெட்ட ராச
கிரீட பண்ணை வய லுறமேற்றப்
பார்த்துக் கொச்சை யிடையரைக் கூட்டிவா
பள்ளா பள்ளா பதராதே யென்றான்.

**கலிப்பா**

113. வில்லில திகவிசையன் குமார யெட்ட
வல்லவன் றன்பண்ணை வயலிலுற மேற்றுதற்கு
நல்லதென்று பண்ணை நயினாரே ஆயரிடஞ்
செல்லுகிறே னென்றுபள்ளன் தேடி நடந்தானே.

**சிந்து**

114. பாக்கிய மிகுந்தென் னிளசைப்
பண்ணை வயலுற மேற்றச்
சீக்கிரத் திலாடு கொண்டு
திரும்புவே னாண்டே

---

*111.* சிலவு - செலவு - பொருட் செலவு செய்தல். ஆண்டவர் தோப்பு - ஓர் இடப் பெயர். சிவன் கந்தன் - சிவபிரான் மற்றும் கந்தன். நெடு முழக்கோல் - ஒரு நீட்டல் அளவைக் கருவி. சாகை - வசிக்குமிடம்.

*112.* வளர் நேத்தி-வளர்நேர்த்தி - நேர்த்தியாக, சிறப்பாக. கீர்த்திசாலி - புகழ் பெற்றவன். இராசகிரீடி - இராசமகுடம் சூடியவன். கொச்சை - மனம் ஏற்காத நாற்றம். கொச்சையிடையர்- நெய், பால்ஆகியவற்றால்ஏற்படும் முடை நாற்றமுடைய இடையர். பதராதே - அவதிப்படாதே.

*113.* வில்லில் அதிக விசயன் - வில் திறம் கொண்ட விசையன் எனப் போற்றப்படும் அருச்சுனன். ஆயர் - இடையர்.

*114.* பாக்கியம் - பேறு.

அட்டி யேதனி யான்சென்
றாயரிட முரைத்தாட்டைக்
கெட்டியாய் வயல்தோறுங்
கிடைவைப்பே னாண்டே
தழைவோ நமதுதுரைச்
சாமிபண்ணை வயலதிக
விழைவோ வுரமேற்று
வேன்பண்ணை யாண்டே
மேழிகையிற் பிடித்துழுது
வீட்டுக்கு மாட்டைவிடும்
நாழி கையிலாடு கொண்டு
நான்வருவே னாண்டே.

### கலிப்பா

115. சிங்கேறு போல்நடந்து செங்கைத் தடிசுழற்றி
வெங்கோபங் கொண்டுபள்ளன் விண்டழைத்த
சொற்படியே
யெங்கோன் குமாரயெட்ட மேந்திரனைக் கொண்டாடிக்
கொங்காணியுங் கையுமாய்க் கோனார்கள் தோன்றினரே.

### சிந்து

116. பட்டை நாமம் போட்டுக்கொண்டு
பல்லைப் பல்லைக் காட்டிக்கொண்டு
குட்டியு மாட்டையு மோட்டிக் கொண்டு
கோனார் வந்து தோன்றினார்

---

அட்டி - தடை. கிடை - வயலின் உரத்தன்மையைக் கூட்ட, கூட்டமாக ஆடுகளை விடுவர். ஆட்டின் சிறுநீர், மலம் போன்றவை உரம் எனக் கருதப்படுவதால் கூட்டமாக ஆடுகள் கூடும்போது அதிக உரம் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் கிடை விடுதல் ஏற்பட்டது. துரைச்சாமி பண்ணை - ஒருவருடைய பண்ணைப் பெயர். மேழிகையிற் பிடித்து - கலப்பையைப் பிடித்து. நாழிகை - கால அளவை: வினாடி அறுபது கொண்டது.

*115.* சிங்கேறு போல் - ஆண் சிங்கம் போல். செங்கைத் தடிசுழற்றி - கையிற் கோலைச் சுழற்றி. வெங்கோபம் - கடுமையான கோபம். எங்கோன் - எமது அரசர். கொங்காணி - மழையைத் தாங்க உடலில் கவிழ்க்கும் சம்பங் கூடை. (பெரிய வட்டவடிமான தாழை அல்லது முங்கிலாற் பின்னப்பட்ட கூடை). கோனார் - இடையர்.

*116.* பட்டை நாமம் - திருமண். பல்லைப் பல்லை - அடுக்குத் தொடர். குட்டியும் மாட்டையும் - உம்மைத் தொகை (கன்றும் மாடும்).

கையிற் கடைகோல் தூக்கிக்கொண்டு
கம்பா லாட்டைத் தாக்கிக்கொண்டு
நெய்யின் முடைகள் வீச வீச
நெட்டைக் கோனார் தோன்றினார்
முடுக்கி யாட்டைத் துரத்திக் கொண்டு
முன்னும் பின்னும் நிரத்திக்கொண்டு
தடிக்கம் பையு மூன்றிக் கொண்டு
தன்மக் கோனார் தோன்றினார்
ஒற்றையிற் றப்பின ஆட்டை
யூசுசூ சென்றோட்டிக் கொண்டு
குற்றஞ் சற்றில் லாமலெட்டக்
கோனார் வந்து தோன்றினார்.

**கலிப்பா**

117. வந்தகோனார் கள்தம்மை வாஞ்சையுட னேகுடும்பன்
சிந்தைமகிழ்ந்து பண்ணைச் செய்யிலுர மேற்றுமென்ன
விந்தையுடன் சொல்லுமந்த வேளையினிற் கேளெனவே
தந்திரமா யாட்டின் தகமையது சொல்வானே.

**சிந்து**

118. சடையக்கோன் றன்னுடைய கிடையைத் தான்கண்ட
தேவர்சாற்ற வரி பிரமருக்குந் தோற்றுமோ
குடும்பா புங்கக்கோ னென்னும் நெடுஞ்சங்கக்
கோன்கிடைதா னிப்பூமித னில்லையவன்
மாமிமேற்குடும்பா

---

கடைக்கோல் தூக்கிக் கொண்டு - தீ உண்டாக்கும் கோல் (கார்காலத்தில் கிடைவிட்டபோது, கடுங்குளிரைத் தவிர்த்துக் கொள்ள இடையர் பயன்படுத்தும் தீ மூட்டும் கருவி). நெய்யின் முடை - நெய்யின் நாற்றம். நெட்டைக் கோனார் - ஒருவருடைய பெயர். முடுக்கி - ஊக்கி. நிரத்திக் கொண்டு - அடைத்துக் கொண்டு. தடிக்கம்பு - வலிய கோல். தன்மக் கோனார் - ஒருவர் பெயர். ஒற்றையில் தப்பின ஆடு - மந்தையை விட்டு விலகிய ஆடு. யூசுசூ - விளிச்சொல் (ஆட்டை நெறிப்படுத்தப் பயன்படும் ஒரு ஒலி). கள் - பனையிலிருந்து இறக்கப்படும் போதைப் பொருள். வாஞ்சை - இச்சை. தந்திரமாய் - புத்திசாலித்தனமாய்.

*118.* சடையக்கோன் - ஒருவர் பெயர். பிரமர் - படைக்கும் தொழிலைச் செய்யும் இறைவன். புங்கக்கோன் - ஒரு கோனாரின் பெயர். நெடுஞ் சங்கக் கோன் - ஒரு கோனாரின் பெயர்.

அந்தக்கோன் மைத்துனனெனுங் கந்தக்கோன் றன்னுடைய
ஆட்டை நெடுமலை தோறுங்கோட்டினான் குடும்பா
சீராட்டை யிளையவட்கும் போராட்டை மூத்தவட்குஞ்
செகமறியக் கொடுத்தது முன்னம றியுங்குடும்பா
வெறும்பாட்டை விட்டொழியக் குறும்பாட்டைச் சேகரித்த
மிக்க நயினார் கோனாருக்கிணையார் குடும்பா
சந்திரகிரிக் குமாரயெட்ட சுந்தரவேள் வயல்களெங்குஞ்
சடையாம லுரமேற்று மிடையாயர் குடும்பா.

### கலிப்பா

119. கோனார்தமை முழுதுங் கூட்டிவந்து செய்தோறுந்
தானேகிடை யமர்த்தித் தன்னிளைய பள்ளிவச
மானானே யென்றுபண்ணை யாண்டாரி டத்தினிலே
மானாளர் மூத்தபள்ளி வந்துமுறை யிட்டாளே.

### சிந்து

120. பள்ளனுந் தானே வரவரத்
துள்ளு கிறானே கால்நிலம்
பாவுவதிலையே கிறுத்துவம்
போவதுமிலையே
தெள்ளிமை யாலே யிளையதன
பள்ளி தன்மேலே மருட்கொண்டு
செயசுற் றிப்பாரானவள் குடங்கைவிட்டுப் பேரான
கள்ளையுங் குடிப்பான் நான்பெற்ற
பிள்ளையு மடிப்பா னென்னையுங்
கால்கொண்டு மிதிப்பான் அவளென்றால்
மால்கொண்டு துதிப்பான்
எள்ளலாய்ப் போச்சே யென்பேச்சைத்
தள்ளவு மாச்சே யும்மைவந்
தேசச் சாலு மெய்ப்பான புளியாக்கை
காச்சுங் காணாண்டே.

---

குறும்பாடு - ஓர் ஆடு, வெள்ளாடு. சந்திரகிரி - ஓர் மலையின் பெயர். சடையாமல் - வெறுப்புக் காட்டாமல்.

*119.* இளையபள்ளி வசமானான் - காமத்தின் பாற்பட்டு இளைய பள்ளியை விட்டு அகலாது இருந்தான். மானாளர் - மானைப் போன்ற பள்ளியர்.

*120.* வரவர - அடுக்குத் தொடர். பாவுதல் - பதித்தல். கிறுத்துவம் - குறும்பு. மால் - பெருமை. எள்ளல் - ஏளனம். புளியாக்கை - புளியம்பழத்தில் ஓடும் பழமும் தனித்து இருப்பதுபோல ஆன்மாவும் உடலும் விலகி இருத்தலைக் கூறுகிறது.

121. மாட்டையுந் தேடா னுழும்வயற்
காட்டையும் நாடான் உழவுக்கு
மனஞ்சற்றும் வையான் களவுக்குத்
தினஞ் சுற்ற வெய்யான்
நாட்டி னுட்கிடையோ அவள்தனமுக்
காட்டினிற் கிடையோ மடைக்கண்
ணடைக்கவும் போகானவள் வைது
படைக்கவும் நோகான்
வீட்டையுங் குறியான் நான்படும்
பாட்டையு மறியான் கள்ளுக்கு
விதை நெல்லைக் கொடுத்தான் தினம்பழங்
கதைசொல்லத் தொடுத்தான்
நாட்டினி லுண்டோ வைக்கும்வைப்
பாட்டியும் ரண்டோ பள்ளன்செய்
நடத்தைகள் தீரக் குட்டைக்குள்
அடக்குங் காணாண்டே.

122. செல்லியை யடித்தான் பெண்டுக்கு
நல்லியைப் பிடித்தான் மறகட்டி
செய்தான் வலூட்டியவன் பள்ளன்
கையது தீட்டி
வல்லைய மெடுத்தான் நல்வார்த்தை
சொல்லியே தடுத்தேன் மின்னுமந்த
மட்டில் நின்றானோ பொல்லாத
வெட்டுணி யேனோ
கல்லில் நாருரிப் பானுமை வந்து
மெல்லப் பஞ்சரிப்பான் அரண்மனைக்
காரியங் கெணியான் நல்லபெரி
யோரையும் பணியான்

---

121. மடைக்கண் - அணையில் நீர் வெளியேறுவதற்கான சிறுவழி. கள்ளுக்கு விதை நெல் கொடுத்தான் - கள் குடிப்பதற்காகப் பொருள் எதுவும் இல்லாதபோது விதை நெல்லை கொடுத்து மது வாங்கியவன். வைப்பாட்டி - மனைவி போன்று அனைத்தையும் ஒரு ஆண்மகனுக்குத் தருபவள், அங்கீகாரம் இல்லாத மனைவி.

122. வல்லையம்-வல்லியம் - இடையர் ஊர். பெண்டு - பெண். கல்லில் நாருரிப்பான் - கல்லில் நார் உரிக்க முடியாதுஎன்பதுபோல அவன் மனதைத் திருத்த இயலாது. பஞ்சரிப்பான் - நச்சரிப்பான். அரண்மனைக் காரியம் - அரசு காரியம். கெணியான் - கணிக்க மாட்டான்.

பொல்லாத மூர்க்கன் மனங் கருங்
கல்லான் தீர்க்க னவனுக்குப்
புத்தியுண் டாகக் குட்டைக்குள்
வைத்திடி ராண்டே.

123. பொட்டு மொன்றாச்சே தோள்வல்ல
வட்ட மொன்றாச்சே வொருமுழப்
புகைச்சுத் துண்டாச்சே யவள் செய்யும்
வகைக்கிச்சை யாச்சே
கட்டி லொன்றாச்சே சீவுபொடி
வட்டி லுண்டாச்சே காதில்நீண்ட
கடுக்க னுண்டாச்சே வாய்மத்த
துடுக்கு முண்டாச்சே
சட்டை பண்ணுவனோ யினியுங்கள்
கிட்ட நண்ணுவனோ அவளிடஞ்
சரியிருப் பாச்சே யெனைக்காணில்
அருவருப் பாச்சே
மெட்டுமிஞ் சினத்தாற் பின்கட்டாயக்
கட்டியஞ் சிடவே குணர்ந்தவன்
வீட்டில் மைதீரக் குட்டைக்குள்
மாட்டுங்க ளாண்டே.

124. முட்டையுஞ் சோறும் நெய்யுட
னிட்டாலுந் தாருமாறாக மொழிந்தெனை
யேசி யவள்காலி லமுழுந்துவன்
தோசி கட்டின
மாட்டை யாறுமுகஞ் செட்டிபா
லோட்டிப் புகையிலைக் கட்டுக்குச்
சரியாய்க் கொடுத்தல்லோ விட்டானு
பரியாய்ப் பட்டடைத்

---

123. சரியிருப்பாச்சே - மனைவியர் தம் இரண்டு வீட்டிலும் சரிசமமாக 12 மணி நேரம் இருப்பான். அருவருப்பு - உள்ளத்தில் வெறுப்பு. குட்டை - சிறை.

124. முட்டையும் சோறும் நெய்யுடன் இட்டாலும் தாருமாறாக மொழிந்தான் - முட்டையும் சோறும் நெய்யுடன் தந்தாலும் மனம் போனபடி பேசுவான். தவசம் - தானியம்.

தவசமொரு மிக்கக் கொட்டியே
சவளிச்சாமி செட்டி பாரிசஞ்
தோத்தான் மருதியைக் காரியம்
பார்த்தான் துட்டனைப்
பிடித்தே யினிருப்பருங் குட்டையில்
அடித்தே யவன் செயத் துடுக்குக
ளடங்கச் சீக்கிர மடக்குங்
காணாண்டே.

**கலிப்பா**

125. தெள்ளுதமிட் டேரிளசை சேர்ந்த பண்ணை யாண்டார்முன்
மெள்ளவந்து மூத்தபள்ளி விண்டுமனை சென்றபின்பு
கள்ளிசின்னப் பள்ளிகிடை கார்த்துப்பார்த் தேயிருந்த
பள்ளன்வயல் பார்த்துவந்த பாவகமாய்ச் சொல்வானே.

**சிந்து**

126. வளம்பொருந்து தென்னிளம் புனந்தனிலே மேலக்குளத்தில்
வரம்படிப் பற்றில் பெரும்பற்று பண்ணைக்
கரும்படிப்புரவும்
விளம்புசங் கரக்குடும்பன் பகுத்தயுஞ்சுற் றிப்பார்த்து
மெய்யன்பாய் வளர்மால்திரு மலை அய்யங்
கார்வயலும்
அய்யர் சன்னதிச் செய்யுமுலவிய பெரியகல்மடை
யடுத்தகண்ணா ளுங்குத்துக் கல்வட்டந்
தொடுத்தசெய்கழுந்
துய்யவாளைச் சிணத்தடிப்புர வுங்கொடிக்கால் வட்டமுஞ்
சொல்லும்வாத் தியார்வயலும் வடக்குநல்ல
செய்ப்புரவும்
தோப்படியிற் கத்தரிக்கிணத் துச்செய்யும்
நன்றாய்விளையுஞ்
சொக்கன் பெருமாள் பற்றுமதற்குத் தெற்குநற்புரவும்

---

*125.* விண்டு - சொல்லி. கார்த்துப் பார்த்தே - காத்துப் பார்த்து. பாவகம் - நளினம்.

*126.* தென்னிளம் புனம் - தென்னிளசைப் புஞ்சை நிலம். கொடிக்கால் - வெற்றிலைக் கொடிக்கால். கட்டுக் காத்த குரும்பன் - குரும்பன் ஒருவனின் பெயர். (இவன் நெல் அடித்த பிறகு மறு அடிப்புக்காகக் காத்திருக்கும் கட்டு நெல்லைக் காவற் காத்தவன்).

வாய்ப்புறும்பண் ணைப்புதப்புரந் தனிலே கீழக்குளத்தில்
மருவும் அய்யனார்கோவில் அடுத்தபுரவு மடைச்சுற்றும்
நாட்டுங் கொடிக்கால் முதற்கரைப் புரவுங் கருப்பன்
செய்யுடன்
நன்னயஞ் சேரிகன்னிமார் திருச்சன்னதிப் பரவுஞ்
சூட்டுக்காத் தக்குடும்பன் பகுத்தயு மாத்திகிணத்திற்
சுரந்தக்கல்லாற் றுக்கால்வெள் ளம்வந்து
பொருந்திடுங்குளத்தில்
சேற்றுக்கால் பற்றும் வாய்த்த செம்மப் புதூர்
புளியங்குளமுஞ்
சேர்புதுக்குளம் வாகைக்குளத்திற் சேகரப் புரவும்
நாற்றிசைப் புகழ்பேரிலோ வன்பட்டியோரம் வைப்பொன்
நதியருகாண்மைவயல்களெங்கணுமுதன்மைபெறுகவே
வாரத்துரை குமாரெட்டேந்திரன் பெரியபண்ணை
வயல்களெங்கணுஞ் சின்னாண்டவர் பண்ணை
வயல்களெங்கணுஞ்
சேரப்பார்த் துளம்பூரித்து மகிழ்வாயாட்டுரம் வைக்கச்
செய்துதிருத்தி திரும்பினே னெனிது மெய்யல்லோ
ஆண்டே.

**கலிப்பா**

127. ஆட்டைவயற்கோட்டிய மத்தாமல் நின்னிளையாள்
வீட்டைமிகக் காத்த விதமேதென வெகுண்டே
நாட்டமிகும் பண்ணை நயினார் குடும்பனைக்கால்
நீட்டெனவே குட்டை நெடுமரத்திற் போட்டனனே.

**சிந்து**

128. வம்புசெயு மூத்தபள்ளி தலையேமிக நரைத்தும்
வலியச்சண்டை பிடிப்பதும் போதலயே
சம்பிரம்ம தாக அவள் கூறுமுரைப் பண்ணைத்
தலைவருக்குக் காதில் நன்றாயேறும்
அம்புவியி லவள்வசனம் நிசமே யாச்சு
தல்லோ வானாலுமிதுவும் விதிவசமே
தம்பமுனை யன்றி வேறிலையே யெள்ளளவுஞ்
சதிகாரத் தெய்வமிரங்கலையே.

---

*127.* வெகுண்டு - சினத்தோடு எழுந்து.

*128.* வம்பு - இடையூறு. வலிய சண்டை பிடிப்பது - தானேவந்து சண்டை பிடிப்பது. சம்பிரம்மதாக - சம்பிரதாயமாக. வசனம் - பேச்சு. நிசமேயாச்சு- உண்மையானது. சதிகாரத் தெய்வம் - அருள் செய்யாத கடவுள்.

129. கொண்ட பள்ளனென்று மூத்தபள்ளி மனதுதனிற்
குறியாமல் கபடுசெய்தாள் கள்ளி
யுண்டென்று நம்பினையே முற்றுமிவள் மனத்தி
னுங்கபடு தெரியாதோ சற்றுங்
கொண்டுவந்து சோறிடுவா ளுனக்கேயெனக்
குறித்துக் கோனாரைப் பழபண்ணையார் தனக்கே
பண்டுதான் பழகியிருந்தாலும் அவளுனக்குப்
பாரியல்லள் பாரியல்லள் பள்ளா.

130. உன்னைமனந் தன்னில்நினைந் துருகி யுருகிமிக
வுடைந்துள்ளி நைந்துடல் மெல்லாங் கருகி
அன்னமது வுண்ணயிரங் காதேநித் திரைசெய்
தாலுமிரு கண்ணு முறங்காதே
இன்னம்வ ளாலாக வேணும்நீபோபின்
னிங்கு நின்றாலவள்க்கு வர்மம் பூணுஞ்
சொன்னபடி கேளடி போடியுனைக் கண்டாற்
சொல்லுவா ளின்னம் வெகுசாடி.

### விருத்தம்

131. பள்ளனைக் கண்டு சின்னப் பள்ளத்தி சென்ற பின்பு
வள்ளல்குமா ரெட்டேந்திரன் மகிழ்பண்ணை யாண்டார்தன்
னுள்ளத்திற் நயவதாய்வந் துடந்தையாய் மூத்தபள்ளி
மெள்ளப்பஞ் சரிப்பாய் வார்த்தைவிதமுடன்
விள்ளுவாளே.

### கொச்சகம்

132. குடியிரண்டே யானாலுங் கொண்டபள்ள னாசையினால்
வடிவழகி மூத்தபள்ளி வாஞ்சைமிக நெஞ்சுள்வைத்துக்
கடிதுபண்ணைக் காரணையுங் கண்டவன்றன்
சொல்படிக்கித்
துடியிடைதள் ளாட மெள்ளச் சோறுகொண்டு வந்தாளே.

---

*129.* கபடு - சூழ்ச்சி. கள்ளி - பழிகாரி. பாரி - மனைவி. பாரியல்லல் பாரியல்லல் - அடுக்குத்தொடர்.

*130.* உருகிஉருகி - அடுக்குத்தொடர். அன்னம் - உணவு. நித்திரை - தூக்கம். வெகுசாடி - சினந்து பேசி.

*131.* சின்னப் பள்ளத்தி - இளைய பள்ளி. தயவாய் - அருளுடன். வார்த்தை விதமுடன் - ஏற்ற இடத்தில் ஏற்றபடி.

*132.* குடியிரண்டு - வாழும் வீடு இரண்டு என்றாலும். வடிவழகி - மூத்தப் பள்ளியின் பெயர். வாஞ்சை - பாசம். சோறு - உணவு.

## சிந்து

133. கோதிலாக் கருக்கோட்டையூர் பள்ளியைக்
கொண்டிள சைக்குவந்த பின்னே நானோதும்
வார்த்தை யெல்லாஞ் செவிடன்முன் சங்கூதும்
பான்மையதாய்க் கசப்பாகிப்
பாதகத்தி சொல்லே யினிப்பாய் மனம்
பத்தி மோகன முத்தாகவே யென்மீது
சூதுவிளைத் தாய்நீ செய்த வினையுனை விடுமோ
சொல்லு பள்ளா.

134. கையிலீயைப் பிடித்தாக்காற் கால்வேறு
கைவேறாகி விடுமல்ல துண்டோ
நொய்யரிசி கொதிபொருக்காதெதிர்
நோக்கியெதி ராக்குகிறாய் சொல்
பொய்யோ நீயதைத்தானே நினைத்தோர்
பொருட்டா யெண்ணிப் புலம்புகிறாயே
தெய்வசாட்சி யாய்ச்சொல்லுகி றேன்மனந்
தேர்ந்துபார் தென்னிளசையிற் பள்ளி.

135. பிச்சைக் காரச் சிறுக்கியை லக்காகப்
பேணியென் மீதுபானந் தொடுத்தாய்
பட்சேரிக் கெல்லாம் லட்சையே மெத்தப்
படித்தமூஞ் சூறு காடிக்குள்ளே வீழ்ந்து
செத்த தன்மை யதாகி யிப்போது
திவிடுக்கிற் பட்டஎலி போல்விழித்தாய்
கச்சை கட்டின தெல்லாம் நெடுங்குட்டை
கட்டவோ சொல்வா யெட்டக் குடும்பா.

---

*133.* செவிடன் முன் சங்கூதும் பான்மையதாய் - செவிடன் காதில் ஊதிய சங்கு ஒலிபோல். கசப்பாகி - வேம்பென கயற்பாகி. பாதகத்தி - பாதகங்களைத் துணிந்து செய்யும் பெண். சூது விளைத்தாய் - வஞ்சனை செய்தாய். செய்தவினை யுனைவிடுமோ - செய்த துன்பம் உன்னை விட்டு விலகுமோ.

*134.* 'நொய்யரிசி கொதி பொறுக்காது' - உடைந்த அரிசி விரைவில் முழு அரிசியைவிட நிலை பொறுக்காது உலைநீரில் புரளுவது போல.

*135.* பிச்சைக்காரச் சிறுக்கி - இரந்துண்ணும் பெண். பாணம் - வார்த்தை அம்பு. பட்சேரி - கீழ்மகள். மெத்தப் படித்த மூஞ்சுறு சாடிக்குள்ளே விழுந்து செத்த தன்மையதாகி - அகந்தையால் அழிவைத் தேடிக் கொள்வோர்க்காகச் சொல்லப்பட்ட பழமொழி. கிடுக்கிற்பட்ட எலிபோல் - தானே தவறி மாட்டிக் கொள்ளும் தன்மை படைத் தோரைச் சுட்டிக்காட்ட எழுந்த மரபுத் தொடர்.

136. குற்றம் பார்த்திடச் சுற்றமிலையென்று
கூறினா ளவ்வை தேறித் தெளிந்தே
இற்றை நாள்வரை நான்செய்த குற்றங்க
ளெல்லாங் கொண்டு பொருத்திட வேண்டும்
பற்றி நெஞ்சுட் பழம்பகை தானெண்ணிப்
பார்த்திடா தென்னைக் கார்த்தருள் செய்வாய்
உற்ற பண்ணை நயினார் பாலிப்பொழு
தோடி மன்னிப்புக் கேளடி பள்ளி.

137. சற்றுமுன் னிந்தப் புத்தியேனில்லைத்
தலையிற் கொட்டுவிழுந்தபின் சாய்த்தாய்
முற்றும் நன்றாய் தெரிந்ததுன் செய்கைபின்
முட்டுண்டே குனியுங் கதை கண்டாய்.
மற்றும்நின் சின்னப்பள்ளி சொல்லல்லால்
வறட்டுப்பள்ளி சொற் பண்ணையற் காமோ
வெற்றிசேரும் அரண்மனைக் காரியம்
விளையாட்டல்ல யிளசையிற் பள்ளா.

138. இந்தவேளை நீ பக்குவஞ் சொன்னால்நான்
எப்படிக் கடத்தேறுவன் கண்டாய்
உந்தனாணை யென்னாணை நீகையார்
ஊற்றுங் கஞ்சி குடித்துக் கிடப்பேன்
(வந்தருள் வெங்கடே சுரயெட்டு
மணியக்)காரன் வசஞ்சென்றுரைத்து
விந்தையாய்ப் பண்ணையாண்டா ரைக்கேட்டு
விருப்பா யென்னைத் திருப்பாயோ பள்ளி.

---

*136. குற்றம் பார்த்திடச்சுற்றமில்லை - சுற்றம் என்பது குற்றம் தவிர்த்துப் பழகுவது. அவ்வை - தமிழ் பெண்பாற் புலவர். பாலிப்பொழுது ஓடி - காத்தல் வேண்டி ஓடி.*

*137. முற்றும் நன்றாய் தெரிந்ததும் செய்கைபின் முட்டுண்டே குனியுங் கதை - தெரிந்து தவறு செய்துவிட்டுப் பின் அதற்காக வருந்துவது போன்று வறட்டுப் பள்ளி சொற் பண்ணைக்காமோ - வெறும் பேச்சு பயன் தருமோ (வெற்றுப் பேச்சு பண்ணையின் மரியாதையைக் குறைக்குமோ).*

*138. பக்குவம் - அறிவுரை. கடத்தேறுவன்; கடைத்தேறுவன் - உய்வேன். ஊற்றுங்கஞ்சி - எளிய உணவு. மணியக்காரன் - கிராமத் தலைவன்.*

### கலிப்பா

139. மெய்யாகப் பள்ளன் விளம்புமொளிக் காகவட்டி
செய்யாம லுன்னைத் திருப்பிவிடு வதற்கென
கையாளா மென்றுபண்ணைக் காரநயி னார்பால்
ஒய்யார மூத்தபள்ளி யுண்மையுடன் சென்றாளே

### சிந்து

140. வந்தனை செய்து வணங்குகிறேன் பண்ணையாண்டே
வாரம்வைத் தடியாள்சொல் லொருதரங்
கேளுங்காணாண்டே
சொந்தஅடிமை நானல்லவோகாண் பண்ணையாண்டே
யுங்கள்
சொற்படிகேட்டு நடப்பவள் நானல்லோ வாண்டே
பள்ளன்படும்பாடு விள்ளத்தகாது காணாண்டே மனப்
பச்சம்வைத் திப்போது லட்சிக்க வேணுங்காணாண்டே
உள்ளதென்றேயொப்புக்கொள்ளவேணும்பண்ணையாண்டே
யுள்ளருகிவெயிலிற்கருகுகிறான்பண்ணையாண்டே.
முன்னமே நான்வந்து சொன்னதெல்லாம் பண்ணை
யாண்டே சின்ன
முட்டாள்ச் சிறுக்கியைத் தொட்டல்லவோ
பண்ணையாண்டே
பின்னுமென பள்ளன்மே லென்ன குற்றம்
பண்ணையாண்டேமுடுப்
பேயனல்லோ வேறுபாய மறியேனே யாண்டே
எங்கே போவான் பள்ளனிங்கே நானேயிணை யாண்டே
காலில்
இட்டகுட்டை மரம்வெட்டி விடுவீர் பண்ணையாண்டே
துங்கன் குமாரயெட்ட சிங்கமகிழும் பண்ணையாண்டே
யுங்கள்
சொல்லுஞ் செல்லுமெங்குஞ் செல்லுஞ் சொல்லும்
பண்ணையாண்டே.

---

*139.* *விளம்பு மொழி - சொல்லும் மொழி. ஒய்யாரம் - ஆடம்பரம்; அலங்காரம்.*

*140.* *மனப்பச்சம் - மனவிரக்கம். லட்சிக்க; ரட்சிக்க - அருள் செய்ய. கருகி - நெருப்பில் எரிந்து. சின்ன முட்டாள் சிறுக்கி - அறிவற்ற இளைய பெண். காலில் இட்ட குட்டை மரம் - விலங்குக்கட்டை என்று சொல்லப் படும் காலில் தண்டணையாகப் பூட்டப்படும் பெருங்கட்டை.*

### கலிப்பா

141. சட்டமுடன் மூத்தபள்ளி தன்வார்த்தை கேட்டிருகாற்
குட்டைமரம் நீக்கிக் கொடுத்தான் கனவரிசை
அட்டதிசை போற்றுபண்ணை யாண்டவனார்
முன்புபள்ளன்
இட்டமுடன் ஏற்றுகையும் நெல்துகையுஞ் சொல்வானே.

### சிந்து

142. முத்துவிளங் கிப்பாலுக் கினியான் கஷ்த்தூரி
மலைமுண்ட னரிக்கிராவி முளகுசம்பாச்
சித்திரக் காலிராச வாணன் குங்குமச்சம்பாச்
செந்தாழை மணல்வாரி சீரகச்சம்பா
நித்தியவன் தானச் சம்பா செஞ்சம்பா வாலா
னெடுமூக்கன் சிறைமீட்டான் நெல்வகையிலே
வித்தின்வகை யொன்றுக்கோர் பத்துலட்சங் கோட்டைநெல்
மெட்டாய்க் களஞ்சி யத்தில் கட்டினேனாண்டே.

143. விரிகொம்ப னொருகொம்பன் வெடிவாலன் றடி
வாலன் விடத்தலம் பூ நிறத்தான் வெள்ளிக்கண்ணன்
கருநீலன் செம்மரையான் குத்துக்குழம்ப னாணிக்
காலன் றொழுமுரிச் சான்கள்ளச்சிக் கண்ணன்
பருமோழை கூழைவாலன் பசுக்கரத்தான்
குடைக்கொம்பன்
பாயும் நெட்டூசிக்கொம்பன் படலைக் கொம்பன்
உருவில்வகை யொன்றுக் கனேகங் காளைகள் தான்
உண்டுங்கள் மனதுக்கேற்க வுரைத்தே னாண்டே.

---

*141. சட்டமுடன் - தீர்மானத்துடன். அட்டதிசை - எண்திசை.*

*142. மார்த்தூரி - மணப்பொருள். மலைமுண்டன், முளகுச் சம்பா, சித்திரக் காலி, ராசவாணன், குங்குமச்சம்பா, செந்தாழை, மணல்வாரி, சீரகச் சம்பா, செஞ்சம்பா, வாலா நெடுமூக்கன் - நெல் வகைகள்.*

*143. வரிக் கொம்பன், ஒரு கொம்பன், வெடிவாலன், விடத்தலம், பூ நிறத்தான், வெள்ளிக்கண்ணன், கருநீலன், செம்மரையான், குத்துக்குழம்பன், ஆணிக்காலன், தொழுமுரிச்சான், கள்ளச்சிக் கண்ணன், பருமோழை, கூழை வாலன், பசுக்கரத்தான், குளக் கொம்பன், நெட்டுசிக் கொம்பன், படலைக் கொம்பன் - காளை இனத்தின் பெயர்கள்.*

144. கர்த்தனிளசைச் செகவீர ராமக் குமாரெட்ட
காண்டீப வுக்கிரசிங்கங் கைவாளினால்
உய்த்தமிட வெதிர்த்த சத்துரு தளத்தைவெட்டி
யொடிக்கி யவர்மனை யினுட்புகுந்தே
சித்திரச் சாவடித்தூண்களுத்திரம் போதிகைகரச்
சேர்ப்பிடிங்கிவந்து செய்திணக்கியே
வைத்த யேர்க்கால்முதல் மற்றெல்லா மிருக்குது
வயலேரிட் டுழவின்று வாருங் களாண்டே.

**கலிப்பா**

145. மட்டுவார் சோலை வளரிளசைச் செய்நாளே
ரிட்டுவாவென் றிங்கிசைந்து பண்ணையா னுரைப்பக்
கொட்டுவா ரேர்க்கால் கைக்கொண்டே குழும்பனின்று
தொட்டுநா ளேரிடநாள் சொல்லுமெனக் கேட்டானே.

**சிந்து**

146. மாமறை தேர்ந்த பிராமண ரோதிய வாக்கியந்தனை
வந்தித்து மெய்யெனச் சிந்திக்கவே வரும்பாக்கியம்
நேமகமெப் படியாமோ பின்னப்படி யாமே மனம்
நேரிட்டுச் செயமுற்று மேரிட்டுக் கொள்ளுவோம்
நாமே வாய்த்ததோ ருத்திர நட்சேத்திர மாதித்த
வாரமிதில் மருவு மேகாதேசி யமுத யோக
மாமின்னேரம் நேத்திகாண் சுக்கிரனோ ரைக்கிடைத்ததே
மிச்சம்நிலைநிற்க நன்மைசேர் சுபக்கிரகமதிலேயுச்சம்

---

*144.* செகவீரராமக் குமாரெட்டன் - குமாரரெட்டனின் பாட்டன். காண்டீபன் - அருச்சுனன். உக்கிரசங்கின் கைவாள் - சீறும் சிங்கம் போன்ற அரசனின் கைவாள். சத்துருதளம் - எதிரியின் தளம். சித்திரச் சாவடித்தூண் - தலைப்பகுதியிற் வேலைப்பாடுகள் செய்யப்பட்ட உத்திரத்தைத் தாங்கும் தூண். உத்திரம் - சுவற்றைத் தாங்கும் ஊடு பாலம். யேர்க்கால் - உழும் கருவி.

*145.* மட்டுவார் சோலை - அழகிய சோலை. நாள் ஏர் - முதல் ஏர் (நல்ல நேரம் பார்த்து வயலில் உழுவதற்காக அலங்காரம் செய்யப்பட்ட முதல் ஏர்). குழும்பினின்று - கூடிநின்று.

*146.* பிரமாணம் - உறுதி. பாக்கியம் - பேறு. உத்திர நட்சத்திரம் - 27 நட்சத்திரங்களில் ஒன்று. ஏகாதேசி - பதினோராவது திதி. அமுதயோகம் - யோகத்தில் ஒன்று. சுக்கிரனோரை - சுக்கிரன் ஆட்சிக்கு உட்பட்ட நேரம். சுபக்கிரகம் - நன்மை செய்யும் கிரகம்.

யிப்படிக்கூடிய நாள்நல்ல நாள் மல்லர் யாரும் வயல்
ஏரிடச் சாத்திகம் நேரிடச் சீக்கிரம் வாருஞ்
செப்பினே னென்று மனப் பிரியமாகவே நடந்தான் மள்ளர்
சேரத்திரண்ட பின்புகூர்க்குடும்பன் பின்றுடர்ந்தார்
காகம் வலம்பாயக் கருடனிடம் பாயக் கண்டார்சிலைக்
காமன் குமாரயெட்டசாமி யோகமென்று கொண்டார்
வாகான கருடனுமாகாசம் வட்டமிட்டாடவே பள்ளர்
வந்தபேர்க ளெல்லாஞ் சிந்தை மகிழ்ந்து
கொண்டாடவே
அகத்திலுகந்து கொண்டு நுகத்தை மகிழ்ந்து
கையிலெடுத்தான்
பண்ணையாண்டவர் சொல்படி பூண்டுபள்ளரிடங்
கொடுத்தான்
மகத்துவ மீறிய வையகத்து மாதைவாழ்த்தித் தொழுதார்
மள்ளர் வயிலிலேரைப் பூட்டி நயமதாகக்
கூட்டியுழுதார்.

**கலிப்பா**

147. புண்ணியவான் குமாரயெட்ட பூபாலன் தென்னிளசைப்
பண்ணைத ழைக்கவந்த பள்ளன்வய லேருழுது
விண்ணின் மகமதியை வேண்டிப்ப யிரேற்றக்
கண்ணிறைந்த காட்சியெனக் கண்டுமகிழ் வுற்றாரே.

**சிந்து**

148. வயல்சுற் றிப்பார்த்துளம் பூரித்தான் சேரி
மள்ளரை யெல்லாம் விசாரித்தான்
கயல் சுற்றும் வாய்க்காலைத் தாண்டினான்
கழுகாசல வேலனை வேண்டினான்

---

சாத்திகம் - நல்ல குணம். காகம் வலம் பாய - ஒருவர் ஒரு காரிய மாகப் புறப்படும்போது காக்கை இடது பக்கம் இருந்து வலது பக்கம் பாய்ந்து பறந்தால் நன்மை பயக்கும். கருடன் இடம் பாய - அதுபோன்று கருடன் வலதுபக்கம் இருந்து இடது பக்கம் பறந்தால் நன்மை என்க. கருடனாகாசம் வட்டமிட்டாட - வானத்தில் கருடன் வட்டமிட்டால் இன்றும் நன்மை என்று எண்ணும் நம்பிக்கை மக்களிடையே உள்ளது, மழை வரும் என்றும் கூறுவர், அன்று நல்ல உணவு கிடைக்கும் என்ற ஐதீகமும் உண்டு (இதனை கருடணபோஜனம் என்பர்). நுகம் - ஏர்முகம்.

*147.* மாமதி - அழகிய சந்திரன்.

*148.* கயல் சுற்றும் வாய்க்கால் - மீன்கள் நிறைந்த வாய்க்கால். கழுகாசல வேலன் - கழுகுமலையில் எழுந்தருளியிருக்கும் அரசன்.

கட்டிகரையத் தண்ணீர் பாச்சினான்
குளைக்கட்டுப் போடச்சொல்லிக் காச்சினான்
கோட்டால் மேடுபார்த்து வெட்டினான் சற்றுங்
கோணாமல் வரம்புகள் கட்டினான்
கட்டாய முச்சாலு மேயடித்தான் பருங்
கரம்பை கரையப் பரம்படித்தான்
உழவுதன்னைக் கண்டெக்களித்தான்மன
துறுதியுடனே விதைதெளித்தான்.
முளைவளம் பெறநீர் விடுத்தான் பயிர்
முகம்வாடா மற்பதங் கொடுத்தான்
பதங்கொடுக்கவும் நாற்றெழுந்துதே துரைப்
பாண்டியன் செல்வம்போல் வளர்ந்தா
லிதந்தரும் பருவம் நன்றாமென
விசைந்து பண்ணையார்முன் சொல்கின்றார்.

**கலிப்பா**

149. நாலா கலைதேர்ந்த நாவலர்கள் கொண்டாடுங்
கோலா கலத்துரைக் குமாரயெட்டன் கீர்த்திதனைப்
போலே வயல்நாற்றுப் பூரித்தெழுந் துதென்று
மேலான பண்ணையர்க்கு விண்டுபள்ளன் வந்தானே.

**சிந்து**

150. தருசின் வயலை யுழுது மிகமுச்
சாலு மடித்துக் கோடு திருத்திச்
சட்டமாக வுழுது பரம்பு
தான டித்தபின்

---

*கோட்டால் மேடு பார்த்து - வளைந்த ஆயுதத்தால் மேடுபள்ளம் பார்த்து சமப்படுத்தல். முச்சால் - மும்முறை ஏர் உழல். கரம்பை கரையப் பரம்படித்தான் - கட்டி மண்ணாக விளங்கும் கரிசல் மண் கரைய நீர் பாய்ச்சிச் சமப்படுத்தல். முளை வளம் பெற நீர் விடுத்தான் - நாற்று பால்கட்டி நெல் உறுதி பெறும் அளவிற்கு நீர் விட்டு. முகம் வாடாமற் பதங் கொடுத்தான் - நாற்று வெயிலில் உலர்ந்து வாடாதபடி அதன் பசுமை மாறாமல் இருக்க அதற்குத் தக்கபடி நீர் பாய்ச்சினான்.*

*149. கோலாகலம் - விழாக்கோலம். கீர்த்திதனைப் போலே வயல் நாற்று பூரித்து எடுத்தது - ஒருவர் புகழ் பெற்றபோது எவ்வளவு நிமிர்ந்து நிற்பாரோ அதேபோன்று நாறு நல்ல வளத்தால் நிமிர்ந்து நிற்கிறது.*

*150. தருசின் வயல் - விளையாத வயல். முச்சாலு - மூன்றுமுறை ஏரைப்பூட்டி யுழல். கோடுதிருத்தி - மண் மேடு திருத்தி.*

விரசினாற் செய்தொழிக்குள் நடு(க்)க
மிகுந்து நாற்றை யுகுந்து பிடிங்கி
மேலுமுடிந்து நாலுதிக்கிலும்
விரைந்து நிரப்பியே
குரிசி லிந்திரனை வாழ்த்தி யிருகை
குவித்து வணங்கிப் போற்றிப் பணிந்து
கோமா னிளசைக் குமாரயெட்ட
குபேரனைப் புகழ்ந்தே
வரிசை யாகவே குரவை யிட்டணி
வகுத்து முடியை யவுழ்த்து நாற்றை
வயக்க டோறும் நயமதாக
வியல்வா யூன்றும் பள்ளீரரே.

**கலிப்பா**

151. வங்களத்தர் சிங்களத்தர் வந்துகப்ப முந்தரப்பிர
சங்கமுற்ற சிங்கமிச் சகங்கள்மெச்சுதங்கள் மிக்க
பங்கயச் செழுந்திருப் பசுந்தொடிக் கிசைமுக்கிய
குங்குமப்பு யன்புகழ குமாரயெட்ட மேந்திரனே.

**சிந்து**

152. மருதி திருவி யிருளி மருளி
மயிலி குயிலி வனத்தாயி
வம்பி செம்பி நல்லி செல்லி
வள்ளி குள்ளி மாடத்தி
குருவி பருவி பூச்சி பேச்சி
கூளி மூளி மாகாளி
குமரி கமலி யழகி குழலி
குட்டை மொட்டை நெட்டச்சி

---

குரிசில் இந்திரன் - தேவர்களின் அரசன் இந்திரன். கோமான் இளசை - இளசையின் வேந்தன். குரவையிட்டு - நல்லொலி எழுப்பி.

*151.* சகங்கள் - உலகம். பங்கயம் - தாமரை. குங்குமப்புயன் - குங்கும நிறம் போன்ற சிவந்த தோள்களைப் பெற்றவன்.

*152.* மருதி, திருவி, இருளி, மருளி, மயிலி, குயிலி, வனத்தாயி, வம்பி, செம்பி, செல்லி, வள்ளி, குள்ளி, மாடத்தி, குருவி, பருவி, பூச்சி, பேச்சி, கூளி, முளி, மாகாளி, குமரி, கடலி, புரி, குழலி, குட்டை மொட்டை, ரெட்டச்சி, கருப்பி, சிவப்பி, பாப்பி, கோப்பி, நெரும் பல்லி, பன்றி முகரி, அன்றில் குதலி, பாளை வயிற்றுக்கூனி - பண்ணையில் வேலை செய்யும் பள்ளியர் பெயர்கள்.

பருவக் குமரி கருப்பி சிவப்பி
பாப்பி கோப்பி நெடும்பல்லி
பன்றி முகரி யன்றிக் குரலி
பானை வயிற்றுக் கூனியுந்
துருவ னிளசைக் குமார யெட்டம
துரைராசன் பண்ணை வயலிலே
துதித்து நாற்றைப் பதித்து நாட்டும்
விதத்தைக் காட்டும் பள்ளீரே.

### கலிப்பா

153. வேலைவிட்டொன் னார்தளத்தை வென்றருள்கு மாரயெட்ட
மாலையிட்ட தார்பரவு மள்ளருக்குப் பள்ளியர்கட்
சேலைவிட்டுப் பின்வேறு சிந்தையுண்டோ செய்கால்வாய்க்
காலைவிட்டப் பாலே கடக்கக்கா லேறாதே

### சிந்து

154. சத்த சமுத்திரப் படையினானிதி
வித்து வசனர்க்கருள் கொடையினான்
றந்தாவளத்தைக் காத்தவன் நம்மள்
சிந்தா குலத்தைத் தீர்த்தவன்
சித்தசனற் கிணையான சிவபத்தி மிகுத்
தினிதானவன் தென்னி ளசைக்
குமாரயெட்ட விற்பன்னன்
புரவில் நடச்செய்தே
மூத்தன் மகளைக் கண்டோடி யேபயல்
குத்து முலையிற் கைபோடுகிறானவன்
முடுக்குகிரான் பின்னுமடுக்கிறான் கடு
கடுக்கிரான் கெஞ்சத் தொடுக்கிறான்
அத்தை மகளும் நீயாமென்றே சற்றே
முத்தமிடுகிறேன் வாவென நல்ல
தாகட்டு மூர்க்குப் போகட்டுமென
அமத்திறாள் பாரும் பள்ளீரே.

---

*153. தார் - மாலை. செய்கால் வாய்க்கால் - வயலுக்குச் செல்லும் வாய்க்கால்.*

*154. சத்த சமுத்திரப் படை - அலையெலாம் சத்தமிடும் படை. வித்து வசனர் - விவேகமானவர். பயல் - சிறு பையன் (வழக்கு மொழியில் பெரியவர் ஆனாலும் அவர் பேச்சில் அனுபவம் இல்லை என்றால் சிறுபயல் என்பது மரபு). குத்துமுலையிற் கையோட - காமத்தின் பாற்பட்டு விம்மிய முலையை கையாற் பிசைதல். தாக்காட்டு - தாமதப்படுத்து.*

155. சீருற்ற சந்திரகிரி யினான்மட
வாரிஷ்ட்ட மிஞ்சுமு பரியினான்
சிங்கேறு வெங்கடேசு ரெட்ம
சங்கிராமன் பெறுவாசவன்
போரிட்ட சண்டையில் மலைவில்லான் முல்லைத்
தாரிட்ட திண்புய னலைவில்லான்
பூமான் இளசைக் குமாரயெட்டம
சீமான் புரவில் நடச்செய்தே
நேரிட்ட காத்தியை நோக்கியே சின்ன
னேரிட்டுப் பார்த்திவ னேக்கமாய் யல்லோ
நிற்கிறா னினைத்துட்கிறான் கேட்க
வெட்கிறான் கண்கசக்கிறான்
காரிட்ட கோதைக் கறும்பிதான் சிறு
நீர்விட்ட போது விரும்பியே வயற்
காட்டிலே விழுத்தாட்டியே பயல்
கோட்டி கொள்கிறான் பள்ளீரே.

156. மின்னிய மந்திர வாளினான் மரு
மன்னியர் வணங்கிய தாழினான்
விண்ணு மண்ணும் புகழ்கீர்த்தியான்
மலர்ப்பெண்ணு நண்ணுமனப் பூர்த்தியான்
பன்னுசெழுந் தமிழா கரன் குடைக்
கன்னனெனுங் கருங்கருணாகரன்
பாண்டியன் குமாரயெட் டேந்திரசிலைக்
காண்டிபன் பண்ணை நடச்செய்தே
பொன்னியு நன்னியுங் கூடியேசெம்
பொன்னய மாமென நாடியே யின்பம்
பகட்டியே சொல்லிற் பகட்டியே மெள்ள
நகட்டியே துடையகட்டியே
கன்னல் நெடுந்தோட்டத் தொதுக்கி லேதுகில்
தன்னை மன்னிக் குனிந்ததுக் குள்ளே தெருக்
காட்சியா யொரு மூச்சினால் விட்டுப்
பாச்சிரான் பாரும் பள்ளீரே.

---

*155.* இஷ்டம் - விருப்பம். கண் கசக்கிறான் - கண்ணைக் கசக்குகிறான்.

*156.* தமிழாசுரன் - தமிழில் விற்பனன். பாட்டியே - ஆடம்பரங் காட்டியே. நகட்டி - நகரச் செய்து.

157. வீர சூரன் குமாரயெட்டம தீரன்மனது மகிழவே
வேந்தன் குமாரமுத் தேந்திரன் பண்ணை
மீனாட்சிபுரம் வயலிலுந் தாருவெனுமு
தாரி ராமசாமி ராசனுக் கென்றென்றுந்
தழைத்திடும் பண்ணைச் சின்னமலைக்
குண்டுகுளத்துப் புரவில் நடச்செய்தே
வாரியன் பள்ளி வீரியப்பயல்
மாயன் கனவு பாயமாய்
வருத்தியே மனந்திருத்தியே யித
ழருத்தியே மயல்பொருத்தியே
காரியந் தவறாமலே வரப்
போரம்நின்று கொண்டேயவள்
கைக்கு ளடங்கா முலையைப் போட்டுக்
கசக்கிறான் பாரும் பள்ளீரே.

158. மக்கர் மகதர் துலுக்கர் கெவுடர்
வணக்க மிடிடுசமு தாதிபன்
வாரத்துரை குமார யெட்டம
சுவாமிக் கதிக பிறிதியர்
மிக்க கன்னர் கட்டைப் புரவிலும்
வளமைக் குமரிகுளப் புரவிலும்
வெங்க டேசுரெட்டியைர் பண்ணை
மேலைய சாரற் புரவிலு
மெக்களிப்பாய் நாற்று நாட்டியேகீழ்
ஈராற் பண்ணையிலை நிடச்செய்தே
யிடும்பினால் கந்தக்குடும்பன் மகளை
யிருளன் தனத்திற் கிள்ளினான்
சிக்கி வெட்கிக் கையை நெரிக்கிறான் பயல்
கெக்கெக் கெக்கென்று சிரிக்கிறான்
சிரிக்கி நின்று வண்டுறுக்கிரமன்
தீற்கம் பாரும் பள்ளீரே.

---

157. வீரசூரன் - சிறந்த பலமுள்ள வீரன். வீரியப்பயல் - வீரமுடையவன். கைக்குள் அடங்கா முலை - பெருத்த முலை.

158. மக்கா - மக்கம்; மக்க நாட்டினர். மகதர் - மகத நாட்டினர். துலுக்கர் - துலுக்க தேசத்தினர். கெவுடர் - கவுடர்; கவுட நாட்டினர். சமுதாதிபன் - சமுதாயத் தலைவன். இடும்பு - அகந்தை. கெக்கெக் கென்று - கலகலவென்று. தீற்கம் - தீர்க்கம் - திறம். விகசிதவன் - மந்தகாசம் மிக்கவன். உபகாரன் - ஈகை செய்பவன்.

159. விகசிதவன் சமுகத்தான் றிருமகள்
மருவிய சமுகத்தான் வீரலட்சுமி
சேகர னுபகார முத்தமி ழாகரன்
குகனருள் பெருகிய தென்னிளசைக்
குமாரயெட்டன்)மனம் மகிழவே
குறுமலைக் கெச்சிலாபுரம்நகர்
குளத்திலு மாட்டக் குளத்திலும்
பகரு மெட்டையபுரஞ் சிம்மாசன
பதிதுரைச்சாமிக் கிசைந்திடும்
பண்ணை வயலில் கூடியாடிப்
பாடி நாற்று நடச்செய்தே
சுகமுத் திருளி முலைக்கண் காம்பைச்
சுரும்பென மனம் விரும்பியே
சொக்கன் பிடிக்க வெட்கமில்லாமற்
துள்ளுறான் பாரும் பள்ளீரே.

160. பஞ்சவர்ன ராய ராகுத்தன் மத
குஞ்சரம்நேர் வருகாகுத்தன்
பாவேந்தர் துதிகுமார யெட்டம
தேவேந்தின் மனம் மகிழவே
கொஞ்சிக் கொஞ்சி விளையாடியே மயல்
மிஞ்சிக் கெஞ்சி யுறவாடியே
கொடுக்கன பாரைப்புரவிலு மடுக்
கடுக்காய் நாற்று நாட்டியே.
தஞ்சமென் றோர்க்கருள் குமார வேள்இ
ளஞ்சார்ந்த புரவில் நடச்செய்த
சந்தனமது பூசியே மொழி
தெந்த னம்பல் பேசியே
மிஞ்சிய மஞ்சணைப் பூச்சுக்குஞ்சிக்கு
பஞ்சரித்திடும்வாய்ப் பேச்சுக்கும்
விரும்பியே பயல் கரும்பின்நிற்கிற
விதத்தைப் பாரும் பள்ளீரே.

---

*159. குகனருள் - முருகன் அருள். முலைக்கண் - பால் சுரக்கும் காம்பு.*

*160. காகுத்தன் - இராமன். கொஞ்சிக் கொஞ்சி - அடுக்குத் தொடர் (அன்பு பாராட்டி).*

161. மிச்சமதாய் வளர்வலுவினான் ஏற்றினச்
செச்சையில் மேவிய கொலுவினான்
விருது சோமத் தலையினான்சமர்
பொருதும் வீரச்சிலையினான்
வச்சிர பாணி குமார யெட்டம
னுச்சித மாமென மகிழவே
வையாபுரி யானருள் பெறுஞ் சீனி
அய்யர் மனது மகிழவே
கொச்சி யச்சி மலையாள ரீழர்
குலிங்கர் வர்த்தகர் யாவருங்
கூடுஞ்சந்தை நடுவிற் பட்டியின்
குளத்தின் புரவில் நடச்செய்தே
அச்சிப் பள்ளியும் அம்மைப் பள்ளியும்
அஞ்ஞைப் பள்ளியுங் கூடியே
ஆதிக்கம் வளர்ந்தோங்கக் குரவை
நாதிக்கிறார்பாரும் பள்ளீரே.

162. புத்த முதரஷ பாஷத னதிர
வைத்த யசர பணி பூஷதன்
போச னிளசைக் குமார யெட்டம
ராசன் மனது மகிழவே
முத்தமிழ் தேர்துரைச் சாமிக்கு
வாய்த்த முடுக்கு மீண்டான் பட்டிப்
புரவிலு முன்னும் பின்னும் நின்று
சன்னை பண்ணிக் கொண்டு
முழக்கமாய் நாற்று நாட்டியே
வித்து வசனர்புகழ் புலவர் பட்டியில்
மேவு செவ்வற்குளப் புரவிலே
வேடிக்கையாய்க் கும்பு கூடிக்கொண்டே சிந்து
பாடிக்கொண்டே நாற்று நடச்செய்தே

---

*161.* சோமத்தலையினான் - விருதுகளைச் சுமந்தவன். வச்சிரபாணி - வச்சிராயுதத்தையுடையவன், இந்திரன். வையாபுரியா னருள் - முருகன்அருள்.

*162.* கொச்சி - சிறியவன். மலையாளர் - கேரள தேசத்தினர். ஈழர் - ஈழ நாட்டினர். சந்தை - கடைகள் கூடும் இடம். வர்த்தகர் - வியாபாரிகள். அச்சிப்பள்ளி; அம்மைப்பள்ளி; அஞ்சைப்பள்ளி - பள்ளியர்பெயர்கள். பூஷதன்; பூஷிதன் - அணிகலன்கள் அணிந்தவன். போசன் - உணவளிப்பவன். முத்தமிழ் தேர்துரைச்சாமி - முத்தமிழைத்தேரில் வைத்துப் பாராட்டும் துரைச்சாமி. புலவர்பட்டி - புலவர் மன்றம். கும்பு கூடி - கூட்டங்கட்டி(கும்பு - தெலுங்குச் சொல்).

சித்திரன் மேல் மயல் மிகுதியே முத்தி
தொத்தியவன் மேற்கொண் டேறியே
திடத்துடன் மலையாள லீலை
நடத்துறாள் பாரும் பள்ளீரே.

163. வீமனெனுங் குமார எட்டசாமி
மனதுக் கிசைந்திடு மேலையூ
ரிளம்புனத்துப் பண்ணையி
லேலவே நின்று நடச் செய்தே
காமியான் ராமிதன் புரங்காலை யாமை
யாமெனக் கள்ளுக்குடித்த வெறியிலே
கந்தன் துள்ளியோடிப் பிடிக்கிறானே
மித்த நினைப்பரிந்துகாலை
நீட்டியோருவதை போட்டனள்
நெளித்தா னப்புறங் கெளித்தான்
வரப்பிலொழித் தானாந்தைபோல்
விழித்தனன் ஊமைக்கருப்பி
பார்த்துச் சிரித்தா ளுதைப்) பட்டப்
பயல்தானுமே யொக்கச் சிரித்தால்
வெட்கமில் லையென்றுடன் சிரிக்கிறான் பள்ளீரே.

164. செம்பொன் வடிவுநிகர்த்த வனிகல
வம்பர் கெடியைத் தகர்த்தவன்
றிகழ்பூ லோக தெய்வேந்திரன் வாணர்
புகழ் நாலா கலைதேர்ந்தவன்
கம்பள குலத்து தித்தவன் படை
கும்புகழி னிற்கதித்தவன்
கர்த்த னிளசைக் குமாரயெட்டம
வுத்தமன் மனமகிழவே

---

*மலையாள லீலை - கொக்கோகம் கூறும் பல்வகைப் புணர்ச்சி முறைகளில் இதுவும் ஒன்று. இதில் பெண் புணர ஆண் சுகிப்பான்.*

*163. வீமன் - பீமன்; பாண்டவரில் ஒருவன். குமார எட்டசாமி - வேந்தன் குமாரெட்டன். கள்ளுகுடித்த வெறி - பனங்கள் குடித்ததால் ஏற்படும் மயக்கம். ஒக்கச் சிரித்தல் வெட்கமில்லை - வாய்விட்டுச் சிரித்தால் வெட்கப்பட ஏதும் இல்லை.*

*164. பூலோக தெய்வேந்திரன் - பொன்னிறத்தான். நாலாகலை - நால்வகைக் கலைகள். கம்பள குளத்துதித்தவன் - வடுகரில் கம்பளத் தானாகத் தோன்றியவன்.*

கும்பு கூடிக்கொண்டே பிதப்புறங்
குளத்தின் வயலில் நடச்செய்தே
குட்டை யழகன் பூவியைக் கம்புக்
கூட்டிலே கையைப் போட்டுப் பின்
வம்பினால் மனத் தெம்பினால் கிட்ட
வரச்சொல்லி முத்தந் தரஞ்சொல்லி
மட்டிலா மயல்கொண்டல்லோ ஆவிக்
கட்டுறான் பாரும் பள்ளீரே.

165. துருவனுக் கிணையோக வான் கல்விப்
பொருள் மிகுத்த விபேகவான்
சொல்லரிய சிம்மாசனன் வளர்ச்
சில்ல வார்குல பூஷணன்
தருநிகர்த்த குமார யெட்டம
சாமிதனைக் கொண்டாடியே
தாலஞ் செழிக்கு மாலங்குளத்தின்
தனது பண்ணையில் நடச்செய்தே
மருதி யல்குல் நீழற் றண்ணீரிற் றெரிய
வெறுவிப் பாம்பென் றாள்மணியன் றடிகொண்
டோங்கினா னந்தச் சணிகமவர்பின்
வாங்கினான் தெரியும் பாம்பெங்கே யென்றானிதோ
வருது பாம்பிங்கே யென்றாள் செய்யள தோறுங்
குழப்பி யுளப்பித் தேடுரான் பாரும் பள்ளீரே.

166. கொட்டமிட் டிடுதுட்டர் கற்கொடி
தட்டி-விட்டு நிரப்பியே
கொட்டைமுத்தை விதைத்திடப்பறை
கொட்டெனச் சொலு முக்கிரமன்
சிட்டரைத் தய வுற்றுமெய்ப்பிர
திஷ்டை பெற்றிட வைத்தவன் சிங்கக்குமார

---

ஆவி கட்டுறான் - ஆவியை அடக்குகிறான்.

165. துருவனுக்கிணையோகவான் - அழியாப் புகழ்பெற்ற விண்மீனாகத் திகழும் துருவன் பெற்ற பேற்றைப் பெற்றவன். சொல்லரிய சிம்மாசனன் - சொன்ன சொல் தவறாது அரியணையில் இருந்து ஆட்சி செய்யும் மன்னன். வருது பாம்பிங்கே யென்றாள் செய்யா தோறுங் குழப்பியே - பாம்பென்றால் படையும் நடுங்கும் என்பதற்கு ஒப்ப, பாம்பெனப் பெயர்கேட்டவுடன் குழம்பிவிடும் தன்மையாய்.

166. கொட்டமிட்டிடு துட்டர் - ஆரவாரம் செய்யும் துட்டர். சிட்டர் - சீடர். பிரதிஷ்டை - உருவம் செய்தல்.

யெட்டமன் பணிசெவ்வேள் கழுகுமலையிலே
சட்டமுடன் வல்லாரை வென்றான் தலைவன் குளமும்
நடச்செய்தே சன்னன் கூறிச் சின்னன் மீறிச்
சாத்தன் பள்ளி காத்தியைக் கிட்டக்கிட்ட வந்து
பார்க்கிறான் முழுப்பட்டப் பகலல்லோ
கேட்கிறான் கிறுக்குப் பிடித்த சிரிக்கித் தானும்
வண்டுறுக்கிறாள் பாரும் பள்ளீரே.

167. பற்ற வருட ஏற்றதின மாமுடி
யற்று வீழ்கவு மெற்றியே
பத்து நகமு மொழிகொண் டிலங்கு
மத்த கயத்துக் கதிபனாங்
கொற்றவன் புகழ் பெற்றவன் றமிழ்
கற்றவன் கிளை யுற்றவன்
கொண்ட விளசைக் குமார யெட்டம
மண்ட லாதிபன் மகிழவே
வெற்றி மேவிய ராம னூற்றில்
முற்றும் புரவில் நடச்செய்தே
வேட்டன் மகளை வரச்சொல்லித் தலைக்
காட்டுப்புரத்தில் கருப்பன் போய்ப்
புற்று மறைவிலிருத்தி மனது
சற்றும் பயமில் லாமலே
புண்ணியம் வரப்பண்ணு றேனெனச்
சண்ணுறான் பாரும் பள்ளீரே

168. மருவ லர்க்கொரு சிங்கமாங்கல்விக்
கருளு மற்புத தங்கமாம்
வாரமேரு குமார யெட்டம
தீரன் மனது மகிழவே
யிருநிலம் புகழ்செம்மப் புதூ
ரிலிசையும் புளியங்குளப் பற்றி
லியல்பாய் நாட்டியாத்தி கிணத்தின்வய
லில்நாற்றை நடச்செய்தே

---

செவ்வேள் - முருகப்பெருமான். வல்லாரை வென்றான் தலைவன் - வலிமையானவரை வென்ற தலைவன். கிட்டக்கிட்ட - அடுக்குத் தொடர் (அருகருகே). சாத்தன்பள்ளி சாத்தி - ஒரு பள்ளியின் பெயர்.

*167.* ஏலமனூற்று - ஓர் ஊற்றின் பெயர். வேட்டன்மகள் - வேடன் மகள். தலைக்காட்டுபுரம் - ஓர் ஊரின் பெயர். புற்று - கறையான் எறும்பினால் கட்டப்பட்டு பாம்பு உறையும் மண் கூடு.

*168.* மருவலர் - பகைவர். நாட்டியாத்திகிணத்து வயல் - ஒருவயலின்பெயர்.

திருவன மிகவு மெத்துறான்குட்டை
மருதியிரு கண்பொத்துறாள்
சிலம்பனவள் முன்னடுக்கிறானவள்
புலம்பி யவனை முடுக்கிராள்
ஒருத்த னுயரத் தொத்துரான் பின்னு
மொருத்த னடித்துப் பத்துரான்
ஒருவர்க்கொருவரி சலிக்கொண்டிங்கு
வருகிறார் பாரும் பள்ளீரே.

169. வரிசைத் துரை குமார யெட்டம
மண்ட லாதிபன் மகிழவே
வளர ருங்குளப் புரவிலும்நம்
மளமாத் தாண்டன் பட்டிப் புரவிலு
மொருவர்க் கொருவர் நிரைநிரையாய்
நின்றொழுங்காய் நாற்று நாட்டியே
யுளத்தில் மகிழ்ந்து பூதலிப் புரங்
குளத்தின் புரவில் நடச்செய்தே
திருவுக் கிசைந்த மாவேலி யோடைச்
செய்யில் நாற்று நாட்டியே சின்னூர்க்
குளத்துப் பண்ணைப் புரவு
செழிக்க முழக்கி நடச்செய்தே
இருளி(ல்) வட்டமிட் டாடவே சின்ன
மருதிகைத் தாளம் போடவே
யெட்டையபுரம் பள்ளியற் பாடி(யி)ற்
சட்டம் பாரும் பள்ளீரே.

**கலிப்பா**

170. சங்கந் திகழுந் தமிழிளசை மேவு செய
சிங்கங் குமாரயெட்ட தீரன்ற னைப்புகழ்ந்து
பொங்கமுறும் பள்ளியர்கள் போற்றிமகிழ்ந் தூன்றியநாற்
றெங்கும்ப சேளென்றெழுந்து வளர்ந்ததுவே.

---

தொத்துவான் - தொத்துகிறான்; தொடர்கிறான்.

*169.* நிரைநிரையாய் - அடுக்குத்தொடர். மாவேலியோடைச்செய் - ஒரு நிலத்தின் பெயர். மாத்தாண்டன், மார்த்தாண்டன் - சூரியன்.

*170.* சங்கந் திகழுந் தமிழ் இளசை - சங்கத்தமிழ் முழங்கும் இளசை நகர்.

## தரு

171. தெள்ளு தமிழ்கண் டுள்ள மகிழுங்
சேந்தன் குமாரெட் டேந்தி ரன்முதல்
வள்ளல் சொந்தப் பண்ணை வயலில்
மள்ள ரனைவோருந்
துள்ளுங் கயற்கட் பள்ளி யர்களுந்
துய்ய நாற்றைக் கையினாற்
றொட்டு வணக்க மிட்டுத் துரையைத்
துதித்துப் பதித்தபின
நாற்றுப் பதித்துப் பெலத்த பிறகு
நன்னீர்ப் பாச்சப் பாச்சவே
சேற்று ளூன்றும் நடுகைக் கூனுந்
திருந்தி வளர்ந்ததே
போற்றி ராச வளர்த்தி யெனவே
பூரித் தெழுந்து சேரத் தெளிந்து
கீற்றிளம் பிறைபோல் நாளுங்
கிளர்ந்து வளர்ந்ததே
வளர்ந்தவர் குலகை யளந்த மாயன்
வண்ண மெனத்தூற் பண்ணை செறிந்து
செழுந்தளிர்க் கொண்டு தான்மொய்த் தடர்ந்து
சேரப் பசந்ததே
உளங்களி கொளநாட்கு நாள்வளர்ந் தோங்கவே
களைப முதுபார்த் திளங்கு ரும்பை
மென்மு லைக்க டைச்சிய
ரெடுத்தெ ரிந்திடவே
பசிய நெட்டில் கொண்டு நெருங்கிப்
பைங்கூ ளடர்ந்து திரண்டங் கிளசைக்
கிசையுந் துரைக்கைக் கணைக்கி
யிணக்குந் தூணிபோலக்
கசிவு டன்பொதிப் பருவமே கொண்டு
கனத்துக் கதிர்கள் வெளிக் கொண்டே
பொசியும் நறும்பால் கோதிப்
பூந்தாதுலவி

---

171. வள்ளல் - வரையாது கொடுப்போன்; ஈகை குணம் மிக்கவன். நன்னீர்ப் பாய்ச்ச - வயலுக்கு உயிர்நீர் பாய்ச்ச. குரும்பை மென் முலைக்கடைச்சியர் - இளங்குரும்பை போல் இளமைத் துடிப்புடன் திகழும் முலையுடைய பள்ளியர். கசிவுடன் - கனிவுடன்.

மணிக்கொண் டேதுதிக்கு மயன்சம் மதிக்கு
மயன்முன் றோற்றவ தாரத் தீற்று
முகங்கொண் டித்ததில் மணப்பெண் ணாணிக்
கோணி யிருப்பதென்னவே
சென்னற் கதிர்கள் முதிர்ந்துப் பழுத்துத்
தென்னி ளசைக்கு மாரெட் டேந்திர
மன்னன் றனைக்கண் டஞ்சி யொன்னார்
வணங்கும் பான்மைபோல்
நன்னி லந்தனிற் படிந்தபின் மள்ளர்
நலஞ்சேர் பண்ணை நயினா ரிடத்திற்
சொன்ன வுடனாட் கதிர்கொய் யுமெனச்
சொல்லி யேவினார்
ஏவு மப்பொழு தாவ லொடுபச்
சேரி மள்ளர் யாவருந்
தேவைப் பதம்ப ராவித் தொழுது
செயக்கு ளிரங்கியே
கூவிக்குரவை முழக்கி வெண்பிறைக்
கூனி ரும்புகொண் டறிந்தபின்
றாவிக் குதிக்குங் குதிரைவால் சுற்றுந்
தண்பை போலவே
அரியைப் பிரப்பிப் புரியை முறுக்கி
யடுக்கடுக்காய்வைத் திறுக்குங் கட்டினை
வரிசை யாகச் சுமந்து களத்தில்
மலைபோற்போர் வைப்பார்
வைத்த போரைப் பிரித்துப் பரத்தி
மலையெனுங் கரும்பகட்டாற் றெளித்துக்
கைத்த லத்தா லவை நீத்துப் பின்மரு
களத்தின் பாச்சியே

---

மணப் பெண் நாணிக்கோணியிருப்ப தென்னவே - புதுமணம் காணும் பெண் தலை கவிழ்ந்து இருப்பது போன்று மன்னன் தனைக்க ண் டஞ்சி யொன்னார் வணங்கும் பான்மை போல் வீரம்மிக்க மாமன்றைக் கண்டு பகைவர் தலைவணங்கி பணிந்து நிற்பது போன்று. வெண்பிறைக் கூனிரும்பு - கதிர் அறுவாள். அடுக்கடுக்காய் - அடுக்குத்தொடர். கைத்தலம் - கை.

மொய்த்த துகளும் பதரும் பிறக்க
முதிர்ந்த சென்னலின் மணிகள் சிறக்கவே
யத்திடா மற்றூற்றி யாத்தி
யேகமாய்க் குவிப்பார்
குவித்த நெல்லைப் பொலிபொலி யென்று
கூறிப் பண்ணைக் காரர் மகிழப்
புவிக்குள் ளேநழ தாண்ட வர்பெயர்
பூண்ட மரக்காலால்
சவுக்கிய மிகுந்த பொன்னம் பலத்
தயாலு கணக்குக் கேற்கவே
யுவப்பா யளந்து களஞ்சியந் தோறு
முகந்து கட்டினரே

**கலிப்பா**

172. மேதினியோர் போற்றுமத வேள்குமாரெட் டேந்திரமனு
நீதிதழைத் தோங்கவென்றே நெல்லளந்து கண்டபள்ள
னூதிபமுஞ் சிலவு முற்றபண்ணைக் காரனுக்கே
யாதிமுதல் அந்தமட வாயுரைத்தனனே

**சிந்து**

173. கொண்ட லிளசைக் குமாரெட்ட மேந்திர
மண்ட லீகரன் பண்ணை தனியின்று
கண்டிடும் நெல்லுக்கும் புல்லுக் குமுள்ள
கணக்குநா(ன்) சொல்லுகிற னாண்டே.

174. மாலோன் வணங்குமெட் டீசுபரர்பூசை
வகைக்கெனச் சீரகச் சம்பா நெல்லில்
நாலா யிரங்கோட்டை யோர்துகையா யம்மை
நாதபட்டர் வசமளந்தேன்

---

மொய்த்த துகளும் பதரும் பறக்க முதிர்ந்த சென்நெல்லின் மணிகள் சிறக்கவே யத்திடாமற் றூற்றியாத்தியேகமாய்க் குவிப்பார் - காற்றின் திசையறிந்து நெற்கதிரைத் தூற்று பதர், மணிகள் வேறு வேறாகப் பிரித்துக் கட்டவேண்டித் தூற்றியும் தூற்றிய நெற்குவிய லைப் பாதுகாத்தும். பொலிபொலி - அடுக்குத்தொடர் (தூற்றாத நெல்). பொன்னம்பலத்தயாள் - எட்டயபுரத்து மன்னரது கணக்கர்.

172. மேதினியோர் - உலகத்தார். வாயுரைத்தனனே - வாக்கு கொடுத்தனனே.

173. நெல்லுக்கும் புல்லுக்கும் உள்ள கணக்கு - அறுவடைக் கணக்கு அல்லது வயிற்கணக்கு.

174. அம்மை நாதபட்டர் - ஒருவரின் பெயர்.

175. மெய்யான காரண ராம வெங்கடாசல
விஷ்ட்டுணுவின் கோவிற்குச் சம்பா நெல்லிலை
யாயிரங் கோட்டை நம்பி திருமலை
அய்யங்கார் தன்வச மளந்தேன்.

176. சாத்தூர் பெருமாள் படித்தரப் பூசை
தவறாம லென்றென்னும் நடக்கவுங்கள்
வார்த்தைப் படிக்காயிரங் கோட்டைக் கஷ்தூரி
வாணனம் பாரத்தில் அளந்தேன்.

177. விண்ணோர் பரவுங் கழுகாசலக் குக
வேளுக்குப் பூந்தாளைச் சம்பா நெல்லை
அண்ணப் பட்டர் வசமெண் ணாயிரங் கோட்டை
யட்டி பண்ணாமலே யிளந்தேன்.

178. ஆதிவெயி லுவந்தாள் முப்பிடாரி
யலங்காரிக் கைஞ்னூறு கோட்டை மனு
நீதிய தாகவே பண்டாரங் கையினில்
நேர்முத்துச் சம்பாநெல்லளந்தேன்.

179. மங்காத கீர்த்தி பெறுமெட்டையா
புரத்தங்காள் நாயகிக் கெனவேகன
பொங்கமாய் முன்னூறு கோட்டைநெற்
பூசாரி யங்கணன் பாரிசமளந்தேன்.

---

*175.* ராம வெங்கடாசல விஷ்ட்ணுவின் கோயில் - விஷ்ணுகோயில். திருமலை அய்யங்கார் - ஒருவரின் பெயர்.

*176.* சாத்தூர் பெருமாள் - சாத்தூர் பெருமாள் கோயிற்கான. படித்தரப் பூசை - பூசைக்குரிய நல்கை. கஷ்தூரி வாணன் - ஒருவரின் பெயர்.

*177.* கழுகாசல முகவேள் - கழுகுமலையில் எழுதந் தருளியிருக்கும் முருகப்பெருமாள். பூந்தளைச்சம்பா நெல் - ஒரு நெல்லின்பெயர். அண்ணாப்பட்டர் - ஒருவரின் பெயர்.

*178.* ஆதிவெயிலு வந்தாள் - கூரையின்றி வெயிலில் உறையும் ஆதி கடவுளான வெயிலுவந்தாள். முப்பிடாரி - ஒரு தெய்வத்தின் பெயர். அலங்காரி - காளி. பண்டாரம் - இறைப்பணி செய்வோன். முத்துச்சம்பா - ஒரு நெல்லின் பெயர்.

*179.* எட்டையாபுரத்தங்காள் நாயகி - எட்டையபுரத்துக்காவற் தெய்வம். பூசாரி - இறைப்பணி செய்வோன்.

180. செப்ப முறுந்தவ சித்தம்பிரானுக்குச்
சித்திரக் காலி நெல்லதிலே சைவச்
சுப்பன் பண்டாரம் வசமளந்தேனோ
துகையாயிருநூறு கோட்டை

181. தாரணி போற்று மிளசையன்தான்
சத்திரத் துக்கே ராசவெள்ளை நெல்லி
லாருமகிழச் சிதம்பரய்யன் வசத்(ந்)தா
ஆயிரங் கோட்டை யளந்தேன்

182. குலதெய்வ மெனுஞ் சகதேவித்தாய்க்
கானைக் கொம்பன் சம்பாக் களஞ்சியத்தில்நா
னில்வரமாக முன்னூற் றஞ்சு கோட்டை
நெல்தந்தி நேரத்தி லளந்தேன்.

183. காசிநகர் தனில் வாசமிகும
விசுவேசர் படித்தரம் நடக்கும்படி
பூசை தவறாம லாயிரங் கோட்டைநெல்
போசனச் சம்பாவி லளந்தேன்.

184. தீர்த்த விசேடம் பெறுந் தனுக்கோடி
சிவராம லிங்கர் பூசனைக்குக்கண்
பார்த்து மோராயி ரங்கோட்டை நெல் நேத்தியாம்
பள்ளயச்சம்பாவி ளைந்தேன்.

---

*180.* சித்தம் - மனம். சித்திரகாவிநெல் - ஒரு நெல்லின் பெயர். சைவ சுப்பன் பண்டாரம் - ஒரு இறை ஊழியன் பெயர்.

*181.* தாரணி - உலகம். சத்திரம் - விருந்தினர் அல்லது வழிப்போக்கர் தங்கும் விடுதி. ராசவெள்ளை நெல் - ஒரு நெல்லின் பெயர். சிதம்பரய்யன் - ஒரு அய்யரின் பெயர்.

*182.* குலதெய்வம் - இனத்தார்க்கு உரிய கடவுள். சகதேவித்தாய் - கம்பளக்குலத்தார் குலதெய்வம். ஆணைக் கொம்பன் சம்பா - ஒரு நெல்லின் பெயர்.

*183.* காசிநகர் - விசுவநாதர் மற்றும் அன்னபூரணி கடவுளர் எழுந்தருளி யிருக்கும் கங்கைக் கரையில் அமைந்திருக்கும் திருத்தலம். விசுவே சுகர் - காசியில் எழுந்தருளியுள்ள சிவபெருமான். விசுவேசர் படித்தரம் நடக்கும்படி - காசி விசுவநாதர் ஆலய நித்திய பூசைக்காக நல்கிய நல்கை. போசன சம்பா - ஓர் நெல்லின் பெயர் (சாப்பாட்டு அரிசி).

*184.* தீர்த்த விசேடம் - புனித தீர்த்தம். தனுக்கோடி சிவராம லிங்கர் - தனுக்கோடியில் எழுந்தருளியிருக்கும் சிவராமலிங்கர்

185. காசினி போற்றிய ரற்றின கிரிக்கோவிற்
கட்டளைக் கெண்ணூறு கோட்டைவிசு
வாசம்தான் சிவாய பண்டாரம்
வசத்தில் மிளகிநெல்லளந்தேன்.

186. கூடல் வளர் சொக்கர் மீனாட்சிக் கெண்ணூறு
கோட்டைநெற் குங்குமச் சம்பா விந்த
நாடறியும்படி கட்டளை மீனாட்சி
நாதபட்டர் வசமளந்தேன்.

187. ஆழ்வார் திருநகரில்ப் பெருமாள்
கட்டளைக்கென நானூறு கோட்டைநெல்லிற்
தாழ்வு வாராமலே சேஷயங் கார்க்குப்பூந்
தாழையம் பாரத்தி லளந்தேன்.

188. காந்திமதி வடிவாம் நெல்லை நாயகர்
கட்டளைக் காயிரங்கோட்டைடமன
வாந்தக மாகப் புழுகுச்சம்பா நெல்லை
வாடிக்கையாகவே யளந்தேன்.

189. புன்னைவனச் சங்கரேசுபரர் கோவிலுட
பூசைதவறாமல் நடக்கத் தானே
யன்னதானச் சம்பா நெல்லோர் துகையாய்
அறுநூறு கோட்டை நானளந்தேன்.

---

*185.* ரத்தினகிரி கோவில் - ஒரு முருகன் தலம். விசுவாசம் - நம்பிக்கை. சிவாய பண்டாரம் - சிவபூசை செய்யும் ஊழியன். மிளகி நெல் - ஒரு நெல்லின் பெயர்.

*186.* கூடல் வளர் சொக்கன். மீனாட்சி - மதுரை மாநகரில் எழுந்தருளி யிருக்கும் சொக்கர் மீனாட்சி. குங்குமச்சம்பா - ஒரு நெல்லின் பெயர். மீனாட்சி நாதபட்டர் - ஒரு அய்யரின் பெயர்.

*187.* ஆழ்வார் திருநகர் - தென்பாண்டி நாட்டில் உள்ள ஓர். பெருமாள் கட்டளை - வைணவத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமாளுக்கான நல்கை. சேஷயங்கார் - ஒரு அந்தனரின் பெயர்.

*188.* காந்திமதி அடிவாரம் நெல்லை நாயகர் கட்டளை - நெல்லையில் எழுந்தருளியுள்ள காந்திமதி மற்றும் நெல்லையப்பர் திருக்கோயில் பூசைக்கான கட்டளை. வாந்தமாக; பாந்தமாக - இணக்கமாக. புழுகுச்சம்பா - ஓர் வில்லின் பெயர்.

*189.* புன்னைவனச் சங்கரேசுவரர் - புன்னைவளச் சங்கரேசுபரர். கோவினுட பூசை - கோயில் நித்திய பூசைக்கான. அன்னதானம் - நல்கை. சம்பாநெல்.

190. மங்கையெனுங் கோவிற்பட்டியதனிலே
வாழ்பூவண நாதர் பூசைக்கென்றே
யிங்கிதமாகவே முன்னூறு கோட்டைநெல்
லீற்குச் சம்பாவினி லளந்தேன்.

191. சந்தவரைத் திருச்செந்தூரில்மேவிய
சண்முக நாதர் கட்டளைக்கே நல்ல
வெந்தையச் சம்பா வெழுநூறு கோட்டைநெல்
வேலன் பகுத்தியி லளந்தேன்.

192. சாத்திர தோத்திர வேத பாராயண
தாத்தையங்கார் வகைக்கெனவே நம்ம
ளாத்தி கிணத்தில் அஞ்நூற்றொரு கோட்டைநெல்
காத்தன் பகுத்தியி லளந்தேன்.

193. மோட்சம் பெறும்படி மந்திர யாக
முறைதவ றாது செய்வேதச் சுப்பர
தீட்சதருக் கெழுநூற் றொருகோட்டைநெற்
சீரகச்சம்பாவி லளந்தேன்.

194. ஆதிக்கத்துக்குட் பரம்பரையான்கண்
ணப்ப குருசாமி தனக்கே யின்று
மாதிட்ட மாக வெண்ணூற் றஞ்சி கோட்டைநெல்
மாசற்ற சம்பாவி லளந்தேன்.

---

*190.* மங்கையெனும் கோவிற்பட்டிய தனிலே வாழ் பூவணநாதர் பூசை - மங்கை எனும் இன்றைய கோயிற்பட்டியில் எழுந்தருளி இருக்கும் பூவணநாதர் நித்திய பூசைக்கு செய்யப்பட்ட நல்கை.

*191.* திருச்செந்தூர் மேவிய சண்முகநாதர் கட்டளை - திருச்செந்தூர் தலத்தில் எழுந்தருளியுள்ள தெய்வானை உடன் உறையும் முருகக் கடவுள் நித்திய பூசைக்கான நல்கை. வெந்தயச் சம்பா - ஒரு நெல்லின் பெயர்.

*192.* சாத்திர கோத்திர வேத பாராயண தாத்தையங்கார் - வேத பாராயண பள்ளி நடத்தும் தாத்தையங்கார் பணிக்கான நல்கை.

*193.* மோட்சம் - வீடுபேறு. மந்திரயாகம் சுப்பர தீட்சதர் நல்கை - மந்திரயாகம் நடத்தும் சுப்பர தீட்சதர்க்கான நல்கை .

*194.* ஆதிக்கத்துக்குட் பரம்பரையான் - எட்டையபுர ஆதிக்கத்துக் குட்பட்ட பரம்பரை உறவினன் கண்ணப்ப குருசாமி. கண்ணப்ப குருசாமி நல்கை - குருசாமிக்கு நல்கை.

195. நற்றமிழர் காக்கும் பனகடிகை
நமசிவாயப் புலவருக்கே துரை
சொற்றவ றாமல் முன்னூற்றஞ்சு சோட்டைநெல்
துய்ய வெள்ளைதனில் லளந்தேன்.

196. வீணைதனிற் சுரக்கியான மிசைத்திடும்
வெள்ளை யண்ணாவி குமாரர்க்கென்றே
வாணர்புகழத் தொண்ணூற் றஞ்சுகோட்டைநெல்
வாழைப்பூச் சம்பாவி லளந்தேன்.

197. கத்தன் குமாரெட்ட பாண்டிய தெய்வேந்திர
கன்னன் றிருநாமந் துதிக்கும் நாகூர்
முத்துப்புலவன் வளவுக்குத் தானுண்ண
முன்னூறு கோட்டை நெல்லளந்தேன்.

198. திட்டமதாய்க் குளவெட்டுக் கென்றே
சேரிக் கெட்டும் நெல்லாயிரங் கோட்டையதைக்
கெட்டியதாய் நோட்டம் பார்க்கின்ற ராக்
கப்பன் செட்டியார் தன் வசமளந்தேன்.

199. சட்டம தாகப் படிக்குங்கனக
சபாபதியர் பிள்ளை கணக்கின்படி
கொட்டிய முத்துப்பேயன் பாலெண்ணாயிரங்
கோட்டைநெற் பாட்டத்தி லளந்தேன்.

---

*195.* கடிகை நமசிவாயப் புலவர் நல்கை - தமிழ் புலவர் நமசிவாயப் புலவர் தமிழ்ப்பணிக்கான நல்கை. துரை சொற்றவறாமல் - அரசனின் பேச்சைத் தட்டாமல்.

*196.* வெள்ளை அண்ணாவி குமாரர் நல்கை - வெள்ளை அண்ணாவி என்ற ஆசிரியர் மகனுக்கான நல்கை. வாழைச்சம்பா - உணவுக்குரிய நெல்.

*197.* கத்தன் குமாரெட்ட பாண்டிய தெய்வேந்திர கண்ணன் நாகூர் முத்துப்புலவன் நல்கை - நாகூர் முத்துப்புலவர் தம் தமிழ்ப்பணிக் கான நல்கை. நாகூர் முத்துப்புலவன் - (பின் இணைப்பில் காண்க).

*198.* குளவெட்டு - தண்ணீர்க் குளம் வெட்ட நல்கை. நோட்டம் பார்க்கின்ற ராக்கப்பன் செட்டியார் நல்கை - அரசு நன்மை கருதி நீர் நிலைகளைக் கண்காணிக்கின்ற ராக்கப்பன் செட்டியார்க்கு நல்கை.

*199.* கனக சபாபதியர் பிள்ளை - மக்கள் நன்மைக்கருதி புராண. முத்துப் பேயன்- இதிகாசங்கள்படிக்கும்கனகசபாபதியாபிள்ளைக்கான நல்கை.

200. உவணகிரி சுற்றித் தேரோட்டி வைப்பதற்
கொன்பதி னாயிரங் கோட்டை நெல்
லெவருமகிழ குமாரவேல்மணி யத்துக்
கேற்கவே தீர்க்கமா யளந்தேன்.

201. சம்பாதி வெற்புக் குமரகுருபரர்
சன்னதிச் சத்திரம் நடக்கவென்றே
சொம்பு பெறவே தொண்ணூற் றொருகோட்டைநெற்
சுப்பன் பகுத்தியிலளந்தேன்.

202. இந்தவகை யன்பத் தீராயிரத் தெழுநூற்
றொரு கோட்டை நெல்நீக்கிச் சேரில்
வந்த நெல் தொண்ணூற் றிரண்டு லட்சங்
கோட்டை சொந்தத் திருப்புக் காணாண்டே

203. சம்பிறுதிப் பிள்ளை வயித்திய லிங்கத்
தயாலெழுதுங் கைக்கணக்கின்படி
யம்பாரஞ் சேரிற்களஞ்சியந் தோறும்
அனேகநெற்கட்டினே னாண்டே.

204. இத்தனை நெல்லு முள்ளூர் மணியம்
வெங்கடேசு ரெட்டுவேள் முன்னிலைக்கே யின்று
கர்த்த னுத்தாரப் படிக்களந்தே சேரிற்
கட்டிவைத்தேன் பண்ணையாண்டே.

### கலிப்பா

205. கண்டநெல் லுக்குள்ள கணக்கனைத்துங் கண்டபள்ளன்
கொண்டபெண் டென்றேன் கணக்குக்கூ ராத்தேதெனவே
வண்டனைய மைக்கருங்கண் மானாளர் மூத்தபள்ளி
துண்டரிகப் பள்ளியர்முன் சொல்லத் துணிந்தாளே

---

*200.* உவணகிரி - ஓர் ஊர். தேரோட்டி வைப்பதற்கு - ஊர்த்திருவிழா விற்கான தேரோட்டம் நடப்பதற்கான நல்கை.

*201.* சம்பாதி வெற்புக்குமர குருபரர் சன்னதி சத்திரம் நடத்த நல்கை - சம்பாதி மலையில் எழுந்தருளியுள்ள குமரகுருபரர் சன்னதி சத்திரத்திற்கான நல்கை.

*202.* சொந்தத்திருப்பு - கணக்கிருப்பு, மீதம் உள்ள கணக்கு.

*203.* சம்பிறுதிப் பிள்ளை வயித்திய லிங்கத்தயாள் கைக்கணக்கு சம்பிறுதிப்பிள்ளை வயித்திய லிங்கத்தயாள் எழுதும் செலவுச்சிட்டை.

*204.* உள்ளூர் மணியம் - உள்ளூர் கிராமத்தலைவன்.

*205.* கண்ட நெல்லுக்குள்ள கணக்கு - நெல்லுக்கான கணக்கு.

**சிந்து**

206. பொக்குவாய் பண்ணை யாண்டார்
ஞாயங் கேளாரோ நீக்குப்
போக்கறியாப் பண்ணையாண்டார்
ஞாயங் கேளாரோ
வெட்க மில்லாப் பண்ணை யாண்டார்
ஞாயங் கேளாரோ சொரிமேல்
அழுக்குப் பண்ணையாண்டார்
ஞாயிங் கேளாரோ
கொக்கு மூஞ்சிப் பண்ணையாண்டார்
ஞாயங் கேளாரோ
தொக்கிலே ரெண்டுகுடி கொண்ட குடும்பன்
செய்த்துன் மார்க்கந் தன்னைச் சற்றே கேளும் பள்ளீரே.

207. மேதினி புகழெட்டையாபுரத்துப் பள்ளியாசை
விட்டுவிட்டே னென்று தலைதொட்டடித்தானே
ஊதப் பரக்கும் பதரைப் பாதி கலந்தே
உனக்குள்ள திந்தாவென்றே பெட்டி
யள்ளிக்கொடுத்தாள்
பாதகனவள் மேலாசை போதவே கொண்டேரண்டு
பட்டடை நெல்லெல்லாம்
வாரிக்கொட்டிக்கொடுத்தான்
சாதியாரே யூரவரே நீதிகேளுங் கோயிந்தக்
கற்பனை செய்வாரு முண்டோ செப்பும் பள்ளீரே.

208. ஏசல் பசபசப்பாய்ப் பேசுகிறா யிளசைப் பள்ளி
இந்தப் பகுமானந் தானுனக்குத் தகுமோ சொல்வாய்
விசையஞ் செறி யெட்டையபுரத்துப் பள்ளி யினி
வெளியேறு மூலையிற் போயொளியாதடி
மெட்டிமிஞ்சிப்

---

206. பொக்குவாய் - பற்போனவாய். ஞாயம் - நியாயம்; நீதி. நீக்குப்போக்கு அறியா - வழிவகை அறியா. சொரிமேல் அழுக்கு - சொரியின் மேல் படிந்த அழுக்கு. கொக்குமூஞ்சி - கொக்கு முகம் போன்ற அழகற்ற முகம் .

207. விட்டு விட்டே - அடுக்குத்தொடர் (விடுத்து). ஊதாப் பறக்கும் பதர் - நெல்மணியில்லாத காரணத்தால் சிறிய காற்றுக்குக் கூடப்பறக்கும் பதர். பாதகன் - பாவம் செய்பவன்

208. சொல் - வசைபாடல். பசபசப்பு - ஏய்த்தல். பகுமானம் - கர்வம். விசையம் - விசயம்; செய்தி.

பேசுகிறாய் மூத்தபள்ளத்தி சும்மா விட்டுவிடுவேனோ
போடிசொட்டு வெள்ளாட்டி நட்டனையேன்
விட்டுவிடு
சின்னப்பள்ளத்தி நண்டுநரி முன்கரணம் போட
ஞாயமல்லடி உத்தண்டமாய்ப் பேசுகிறாய்
மூத்தபள்ளத்தி
யூசிக்கூசி யெதிர்பாய்வது தானுண்டோ சொல்லடி
மெத்தப் படித்துப் பேசாதே சின்னப் பள்ளத்தி பாம்பின்
விடமதின் பல்லில் அல்லால் வேறுண்டோ போடி
துள்ளித் துடிக்கிறாய் சும்மாமூத்த பள்ளத்தி
கூழுச்சுடுவது சுண்டைக்காய்க்குச் சேதமல்லவோ
கள்ளிக்கு வாய்முந்து மல்லோ யிளையபள்ளி
யுள்ளங்கையினில் வைகுண்ட மிங்கே காட்டாதே போடி
பஞ்சுப்பெட்டிபோல் நரைத்து மூத்தபள்ளியுந்தன்
பரபரப்புங் கரகரப்புந் தீரவில்லையே
கொஞ்சக் காரி போடிபோடி யிளையபள்ளிபுலி
குத்தப் போறபோதுஞ் சரசத்தைச் சொல்வாரோ
முலையொரு முழம்வீழ்ந்தும்) மூத்த பள்ளத்தி சின்ன
மொட்டத் தலைப்பயல்களை விட்டா யிலையே
குலையாதே கடிநாய் போற்சின்னப் பள்ளத்தி யிந்தக்
குணத்தை யென்னிடத்தினிற் கூறாதே போடி
உள்ளபடியே மொழிந்தாய் மூத்தபள்ளத்தி யிந்த ஊரும்நம்
முறவின் யாரும்மறிவார் யெள்ளளவு
சுணையில்லாயிளைய
பள்ளியிந்த யெக்களிப்பேன் சக்களத்தி வெட்கமில்லையோ
வெட்கமெனக் கில்லையென்றாற் மூத்த பள்ளத்தி
எந்தவிதத் திலுரைத்தா யுந்தன் அக்கிரமமோ
உட்கட்டெல்லாமறிவேன் சின்னப்பள்ளத்தி பள்ளனும்

---

நண்டு நரி முன்னம் கரணம் போட ஞாய மல்லடி - நண்டுக்கும் நரிக்கும் முன்னம் உடல் வளைத்துக் கர்ணம் போட்டால் பயன் ஏதும் இல்லை. அதுபோல் நீதி அற்றவனிடத்து நியாயம் பேசிப் பயனில்லை என்பதே இதன் கருத்து. யூசிக்கூசி - விளிச்சொல். பாம்பின் விடம் அதன் பல்லில் அல்லால் வேறுண்டோ - பாம்பின் விடம் அதன் பல்லில் என்பது போல. கூழுச்சுடுவது சுண்டைக் காய்க்குச் சேதமல்லவோ - ஒரு மரபுத் தொடர் கேலி பேசுதல் இன்பம் பயக்கும் என்றாலும் அதனால் கேடுதான் விளையும் என்பது பொருள். சுடும் கூழுக்குத் துணைக்கறியாக சுண்டை வற்றல் அமைவது போல அநியாயம் செய்பவன் நியாயத்தின் முன் தலைகுனிவான்.

உந்தையாய்க் கண்டல்லோ வடந்தேறுறாய் அடர்ந்தேற
வென்னாலாமோ மூத்தபள்ளத்திப்பண்ணையாண்டார்
வலுக்கொண்டு மண்ணைத் தாண்டியே வந்தாய் நடந்த
நடத்தை சொன்னார் சின்னப் பள்ளத்தியிந்த நாட்டிற்
பழங்கதை யாக நாட்டலாகுமே வரவர மெட்டுமீறி மூத்தப்
பள்ளத்தி யேதுவலியச் சண்டைக்கு வந்தாய்
புலிபோலவே விரலுரலாச்சுதென்றால் சின்னப்
பள்ளத்தி யுறல்மேரு வினையாமே வந்து பாரடி
பள்ளி கண்ணுக்குத் திரணமென்றாய் மூத்த பள்ளத்தி
புலிபசித்தால் புல்லைத் திண்ணுமோ பஞ்சைச்சிறுக்கி
நரியெதிர்த் தாக்காற் சிங்க மூத்தபள்ளத்தியினி
நானுஞ்சரி நீயுஞ்சரி நாரவெள்ளாட்டி
சரிசரியென்று சொன்னாற் சின்னப் பள்ளத்தி மாட்டுச்
சாணியுஞ் ச(வ்)வாதுஞ் சரிதானாமோ போடி
சாணி நீ சவாது நானே மூத்தபள்ளத்தி யுந்தன்
றலைப் பேனைக் குத்திப்பாரு சல்லிச் சிறுக்கி
ஆணிப் பொன்னான் பித்தளை நீ சின்னப் பள்ளத்தி மல
ரன்ன மதுக்கிணைகாக மாகுமோ போடி

இப்படியாய்ச் சொல்லவந்தாய் மூத்தபள்ளத்தி
வெளியேற்றி யுனையூரறியத் தூற்றுவன் கண்டாய்
அப்படி நான்சொல்லக் கேள் சின்னப் பள்ளத்தி சின்ன
னந்தி சந்தி யுன்னிடத்தில் வந்ததும் பொய்யோ
சக்கன் மகள் வக்கணையாய் மூத்த பள்ளத்தி நீதான்
சன்னை சொல்லி யழைத்ததைப் பொன்னறிவாய்
சிக்கியுந்தன் செய்கையை நானறியா தல்லவயல்த்
திட்டும் வைக்கற் கட்டுங் கோட்டை நெட்டுஞ்
சொல்லுமே

---

கள்ளிக்கு வாய் முந்து மல்லோ - ஒரு மரபுத் தொடர்; ஏமாற்றுக்காரிக்கு தற்காப்பு ஆயதமாக இருப்பது அவள் வாய்தானே. உள்ளங்கையினில் வைகுண்டங் காட்டாதே - ஒரு மரபுத் தொடர்; பொய் சொல்லாதே என்பதை உள்ளங்கையில் வைகுண்ட மிங்க காட்டாதே எனத் தென்பாண்டி நாட்டில் கூறுவர். போடிப் போடி - அடுக்குத்தொடர். புலி குத்தப் போற போதுஞ் சரசத்தைச் சொல்வாரோ - ஒரு மரபுத் தொடர்; புலி குத்தப் புறப்படும் ஆண் மகனிடம் காதல் களியாட்டம் செய்ய முயலுவதால் எந்தப் பயனும் விளையாது. முலையொரு முழம் வீழ்ந்தும் - வயது ஏற்றத்தினாலும் தாய்மைப் பேற்றினாலும் பெண்களின் தனங்கள் சரிதல் இயற்கை.

கண்ணனுனைப் பண்ணினது மூத்தபள்ளத்திகள்ளிக்
காகும் நெல்லுஞ் சூடுமுந்தன் வீடுஞ் சொல்லுமே
யெண்ணிப் பார்த்துப்பேச வேணுஞ் சின்னப்பள்ளத்தி
மூப்பும்
இளமையும் பாராமல் குளறுகிறாய் வயதுக்குத்.
தக்கதாக மூத்தபள்ளத்தி வாயில் வந்ததெல்லாஞ்
சொல்லிவிட்டேன்
மதியாமலே அயலல்லநீயம் நானுஞ் சின்னப்
பள்ளத்தியினி
யக்காளுக்குந் தங்கச்சிக்குந் தக்கமாகுமோ புத்திபுத்தி
தென்னிளசை மூத்த பள்ளத்தி பிழை பொருப்பவரே
பெரியோர் பூதத்திலே சத்திய வசனமிதுவே சின்னப்
பள்ளத்தி பள்ளனன் றன்னுட நாமிருவருஞ் சார்ந்து
வாழ்கலாம்
வாழ்வதற்கோர் தாழ்வுமில்லை மூத்தபள்ளத்தி நாளு
மனநன்மை மன்னுயிரைக் காக்குங் கண்டாயே.

வேளிளசைக் குமாரெட்டேந்திரன்
வாழ்க வாழியென்று
மிகவக மகிழ்வோடு புகழுவமே-

---

எக்களிப்பு - ஏளனம். சக்களத்தி - கணவனைப் பிரிந்து கொள்ள போட்டியாக வந்த பெண். அக்கிரமம் - அடாத செயல். வரவர - அடுக்குத்தொடர். புலிபசித்தால் புல்லைத் தின்னுமோ - மரபுத் தொடர்; புலி புல்லை உண்ணாது. நல்லோர் கனவிலும் தீமை செய்யார், கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே என்ற ஔவையின் சொல்லை ஈண்டு எண்ணுக. பச்சைக்கிறுக்கி - பயித்தியக்காரி. சரிசரி - அடுக்குத்தொடர். சாணியுஞ் சவ்வாதுஞ் சரிதானாமோ - சாணியும் சவ்வாதும் மணத்தாலும், தன்மையாலும் சரிசமமன்று. உயர்ந்த குணம் கொண்டவரும் இழிந்த செயல் புரிவோரும் ஒன்றெனுக் கருதப்படமாட்டார். வக்கணையாய் - உபசாரமாய். புத்தி புத்தி - அடுக்குத்தொடர். புகழுவமே - போற்றுவமே.



# சொல்லகராதி

ஆ



இ

ஈ



உ

கா

**கி**



**கீ**



**கு**

### கெ



### கே



### கை



### கொ

சீ



சு

**சை**



**சொ**



**த**

**தா**



**தி**

**தீ**



**து**



**தூ**

ந



நா

**நே**



**நொ**



**ப**

பா



பி

பி



பு



பூ

### பெ



### பே



### பை



### பொ

### மூ



### மெ

மே



மை



மொ



மோ



ய



யா



யு



யூ

**யெ**



**யே**



**யோ**



**ர**



**ரா**



**ல**



**வ**

**வா**



**வி**

**வே**



**வை**

## சிறப்புச் சொல்லகராதி

### இறைப்பெயர்

**மக்கள் பெயர்**

**விலங்குப் பெயர்**



**பறவைப் பெயர்**

**ஊர்வன**



**மாட்டினப் பெயர்**



**மீன் பெயர்**

**ஆயுதப் பெயர்**



**நெற் பெயர்**



**ஊர்ப் பெயர்**

**நிலப் பெயர் (வயற்சாட்டுப் பெயர்)**



**வேளாண் சொற்கள்**

**பிறமொழிச் சொற்கள்**



**அடுக்குத் தொடர்**

**இரட்டைக் கிளவி**



**வட்டார வழக்குச் சொற்கள்**

**வசைச் சொற்கள்**



**சோதிடம் மற்றும் காலச் சொற்கள்**



**உறவுமுறைச் சொற்கள்**

**உடல் உறுப்புச் சொற்கள்**



**நதிப் பெயர்**



**நீர் தொடர்புடைய சொற்கள்**

### அரண்மனைத் தொடர்புடைய சொற்கள்



### உலோகப் பெயர்கள்



### உண்ணு பொருட் சொற்கள்



### குலப்பெயர்

**வீட்டுப் பொருட்கள்**



**முகத்தல் அளவை**



**எண்ணுப் பெயர்**



**வழிபாட்டுத் தொடர் புடைய சொற்கள்**

**இளசை பற்றி**



**கட்டளை**

## பாடற் முதற் குறிப்பு அகராதி

இணைப்பு-1

# பள்ளு இலக்கியப் பட்டியல்

## காலவாரியாக

| | நூல் | ஆசிரியர் |
|---|---|---|
| | **16ஆம் நூற்றாண்டு** | |
| 1. | திருவாரூர் பள்ளு | சுடலை ஞானப் பிரகாசர் |
| | **17ஆம் நூற்றாண்டு** | |
| 2. | இரும்புலிப்பள்ளு | – |
| 3. | குருகூர்ப்பள்ளு | சடகோபப்புலவர் |
| 4. | மன்னார் மோகனப் பள்ளு | – |
| 5. | முக்கூடற்பள்ளு | – |
| | **18. ஆம் நூற்றாண்டு** | |
| 6. | வையாபுரிப்பள்ளு | வேலச்சின்னோவையன் |
| 7. | வைசியப்பள்ளு | சங்கர மூர்த்திப்புலவர் |
| 8. | வடகரைப் பள்ளு | கடிகை முத்துப் புலவர் |
| 9. | பருளை விநாயகர் பள்ளு | சின்னதம்பிப் புலவர் |
| 10. | தில்லைப்பள்ளு | மாரி முத்துப் பிள்ளை |
| 11. | திருமலை முருகன் பள்ளு | பெரியவர் கவிராயர் |
| 12. | திருப்புவன வாயிற் பள்ளு | சர்க்கரைப்புலவர் |
| 13. | தண்டிகைக் கனகராயன் பள்ளு | சின்னக்குட்டிப் புலவர் |
| 14. | ஞானப்பள்ளு | தெல்லிப்பழை பேதறுப் புலவர் |
| 15. | சேற்றூர்ப்பள்ளு | சங்கரமூர்த்திக் கவிராயர் |
| 16. | செண்பகராமன் பள்ளு | – |

| | | |
|---|---|---|
| 17. | சீகாழிப்பள்ளு | சிதம்பரநாத முனிவர் |
| 18. | சிவசயிலப்பள்ளு | இராமநாதன் கவிராயர் |
| 19. | குற்றாலப் பள்ளு | – |
| 20. | கதிரை மலைப்பள்ளு | – |
| 21. | கண்ணுடையம்மன் பள்ளு | முத்துக்குட்டிப்புலவர் |

**19ஆம் நூற்றாண்டு**

| | | |
|---|---|---|
| 22. | ராசைப் பள்ளு | கவிக்குஞ்சர பாரதி |
| 23. | கொடுமனூர்ப் பள்ளு | நல்ல வீரப்பப் பிள்ளை |
| 24. | கோட்டூர்ப் பள்ளு | வெள்ளையப்புலவர் |
| 25. | ஞானசித்தர் பள்ளு | வேலாயுதசாமி |
| 26. | தரும சாத்திரப் பள்ளு | கவிக்குஞ்சர பாரதி |
| 27. | திருவிடைமருதூர்ப் பள்ளு | வெறிமங்கையாகக் கவிராயர் |
| 28. | தென்காசைப் பள்ளு | இராமநாதக் கவிராயர் |
| 29. | புதுவைப் பள்ளு | பொன்னு செட்டியார் |
| 30. | போரூர்ப் பள்ளு | – |
| 31. | மாந்தைப் பள்ளு | சிதம்பர தாண்டவ மதுர கவிராயர் |
| 32. | முக்கூட்டுப்பள்ளு | பழநிசாமிப் பிள்ளை |
| 33. | பொய்கைப் பள்ளு | அங்கமுத்துப் புலவர் |
| 34. | வேதாந்தப் பள்ளு | ஆவிடை அம்மாள் |
| 35. | பழனிப்பட்டி செட்டிப்பள்ளு | – |

**பெயரளவில் தெரியவரும் பள்ளு நூல்கள்:**

1. உரிமை நகரர் பள்ளு
2. சுங்க நாயகர் பள்ளு
3. கூடற்பள்ளு

4. தஞ்சைப் பள்ளு
5. திருக்கோட்டியூர்ப் பள்ளு
6. திருச்சுழியல் துணை மாலையம்மை பள்ளு
7. திருச்செந்தில் பள்ளு
8. திருநீலகண்டன் பள்ளு
9. வைத்தியப்பள்ளு

**நூல்களின் குறிப்புகள் வழியாக அறியவரும் பள்ளு நூல்கள்:**

1. திருமக்காப்பள்ளு
2. சாமாத்தூர் மாவாணராய சுபேந்திரன் பள்ளு
3. ஏம்பல் முத்தையசாமிப் பள்ளு
4. பெருநாழி வில்லியணைத் தேவர் பள்ளு
5. சாத்துடையான் பள்ளு
6. திருநெல்வேலி வண்ணாரப்பேட்டை வேலாயுத அடிகள் பள்ளு
7. கழுமலைப் பள்ளு
8. வேளாளர் பள்ளு

– சிற்றிலக்கியச் செல்வம்
டாக்டர் ந.வீ. செயராமன்
மணிவாசகர் நூலகம்
சென்னை 1980

# எட்டைய புரம் சமத்தானத்துடன் தொடர்புடைய புலவர் பெருமக்கள்

**ஆண்டான் கவிராயர்**

இவர் பாண்டி நாட்டிலுள்ள ஒட்டைப்பிடாரத்திற் பிறந்தவர். இவர் காலம் 180 ஆண்டுகட்கு முன்னர் என்பர். இவர் சிச்சிலிச் சோழியர்; வைஷ்ணவர். தந்தையார் பெயர் வைகுந்தநாதர். அவர் ஊரிலள்ள உலகம்மையின் அருள் பெற்றுப்பாடத் தொடங்கியவர். இவர் ஆழ்வார் திருநகரில் கோயிலில் விநியோகம் வாங்கப் போன பொழுது சொல்லிய

**சேலடி பட்டு வராலுக ளும்குரு கூரிற்சென்று**
**மாலடி போற்றி வினியோகம் வாங்க வணங்கி நின்றேன்**
**வேலடி பட்டது போலே கதவடை யானைவிட்டுத்**
**தோலடி சாதிப்பர் வேண்டாமென் றாலுந் துரத்தி வந்தே''**
**(கதவடையான் - சாத்தாதவன்)**

ஒரு சமயம் தாதனொருவன் இவரைப் பொடி கேட்ட பொழுது இவர் **போதாதா** என்றாராம்.

ஒரு சமயத்தில் யாரோ ஒருவர் இழிவுக் குறிப்பாக எச்சிக்கலை யெடுப்பவனல்லவா என்ற பொழுது எச்சிக்கலையும் எடுப்பேன் என்றாராம்.

**ஆறுமுக மங்கலத்துக் காரொருவர் போனாலுஞ்**
**சோறுகொண்டு போங் கோள் சொன்னேன் சொன்னேன்**
**ஆற்றோடே போனாலு மாத்தூரோடு போகாதே**

என்ற தொடர்களெல்லாம் இவர் சொன்னவை என்பர். இவர் காலத்தில் இருந்தவர் சிந்துக் களஞ்சியப் புலவர்; அவர் ஏறி வந்த பல்லக்கில் அவர் இல்லாத சமயத்தில் இவர் ஏறினர் என்றும், அது பற்றி அவர் சில பாடல் சொன்னதுண்டென்றும், இவர் பிரதி சொன்னாரென்றும் கேள்வி.

இவர் சாபானுக்கிரகசக்தி உடையவர் என்பர். ஆண்டான் கவிராயர்ன விலைக்கு வாங்கிய குதிரை சரியாக நடவாத பொழுது சொல்லியது.

**என்னைச் சுமக்க வறியாய் சுமக்கு மியல்பறியாய்**
**பொன்னைப் பறித்துக் கொடுத்தா யொருகட்டுப்**
**புல்லுந்தின்பாய்**

**பின்னைச் சவுக்கடிக் கஞ்சா யடிக்கடிப் பேண்டுகொள்வாய்**
**உன்னைக் குதிரையென் றேபடைத்தான் மல ருள்ளவனே.**

இவர் வறுமையினால் மிக்க வருத்தமடைந்து கொண்டிருந்த பொழுது தமது தகப்பனார் "சருக்கரை வேண்டும் சருக்கரை வேண்டும்" என்று அலட்டிக் காலத்தில் பாடிய செய்யுள்:

**"நக்கத் தவிடற் றுடுக்கச்சீ லையுமற்றிந் நாட்டிலுள்ளே**
**எக்கப்ப டும்பஞ்ச காலத்தி லேயுள் ளறிவுகெட்டுச்**
**சிக்கையில் வைகுந்த நாதா சவலைச் சிறுபிள்ளைபோற்**
**சர்க்கரை சர்க்கரை யென்றே சிணுங்கத் தலைப்பட்டையே!**

இவர் சொக்கப் பழங்கரை யென்னு மூருக்குப் போன போது அவ்வூரார் தம்மை உபசரியாதது பற்றிப் பாடிய செய்யுள்:

**காருக்குத் தீய்ந்துவிருங் கார்போய்ச் பிசானம்வரி**
**லூருக்குள் வெள்ளமெடுத் தோடுமே பாருக்குள்**
**ஆற்றுக் கடுத்தவூர்க் கரையி னின்றவூர்**
**சோற்றுக் கலந்தவூர் சொக்கப்பழங் கரையே."**

"சுருக் கவிழ்ந்த" என்பது இவர் செய்த செய்யுளே. இதில் "உசனப் பிரமன் போட்டானே" என்பது பாடம்.

ஆண்டு கொண்டான் ஆண்டான் கவிராயரென்றும் இவர் கூறப்படுவர். ஆண்டு கொண்டானென்பது திருநெல்வேலியைச் சார்ந்த தோரூர். இவருடைய சரித்திரம விரிவாகத் தண்டபாணிப் பர தேசியார் செய்த புலவர் புராணத்தில் உள்ளது.

ஒருவரையுமே மதியாது வசை பாடுதலையே நியமமாகக் கொண்டவராதலின் வசைகவி ஆண்டானென்றும் கூறப்படுவார்.

தனிப்பாடல்களாகவும் சிலபாடல்கள் இவர் செய்தனவாக வழங்குகின்றன. இவர் இயற்றிய செய்யுட்களுள் ஒன்று வருமாறு:

காளை நகர்கண்டேன் கன்மவினை யைத்தொலைத்தேன்
ஆனைமடு விற்றீர்த்த மாடினேன் - ஞானம்
பொருந்தினேன் காளீசர் பொற்றா மரையில்
வருந்தினேன் பெற்றேன் வரம்.
(காளைநகர் - காளையார் கோயில்)

**உமறுபுலவர்**

இவர் இசுலாமிய சமயத்தின் பேரிலக்கியமாகத் தமிழில் திகழும் 'சீறா' என்ற புனித நூலைப் படைத்தவர். எட்டையபுர அரசுக்கவிஞராக விளங்கிய கடிகை முத்துப் புலவரின் மாணாக்கர். செய்தக்காதி என்ற பிரபு இவரின் தமிழின்பாற் இன்புற்று இவர் வாழ்வின் நிழற்குடையாய் நின்றவர். 'சீறாப்புராணம்' என்ற பெயரில் இன்னும் நிலைத்திருக்கும் இப்பனுவல் நபிகள் நாயகத்தின் புனிதமான வாழ்க்கையை விளக்கும் தன்மையது.

சுமார் 6000 பாடல்களைக் கொண்டது இந்நூல். இது போன்று வேறு ஒரு நூல் இன்னும் அச்சமயம் சார்ந்து எழவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

உமறுப்புலர் பெயரர்கள்: 1. அப்துல் காதர் 2. நயினார் முகமது.

நயினார் முகமது உமறு புலவருடைய மகள் வயிற்றுப் பெயரர். அப்துல்காதர் உமறுப்புலவர் மகன் வயிற்றுப் பெயரர். அப்துல்காதர் திருநெல்வேலியில் வாழ்ந்திருந்தார். நயினார் முகமது மதுரைக்கும் கிழக்கேயுள்ள மேலூரில் வாழ்ந்திருந்தார். நயினார் முகமது மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடம் கல்வி கற்றவர். அப்துல்காதர் இளமையில் கல்வியில் நாட்டம் கொள்ளவில்லை. இருப்பினும் தனது மைத்துனர் நயினார் முகம்மதுவின் அறிவுரைப்படி முப்பதாம் அகவையிற் கற்கத் தொடங்கிப் பத்தாண்டுக் காலம் கல்வி கற்றுத் தேறிய பண்டிதர் ஆனார். சிறந்த அவதானியாகவும் விளங்கினார்.

இவரின் வளர்ச்சிகண்டு அப்துல்காதர் பெரிதும் பெருமை கொண்டார். மதினத்து அந்தாதி என்பது இவர் தமிழ் அன்னைக்குத் தந்த அணிகலனாகும்.

**கடிகை முத்துப்புலவர்**

இவருடைய ஊர் எட்டையபுரம், அரண்மனைப் பண்டிதர். எட்டையபுரம் மன்னர் பரம்பரையில் உதித்த வேங்கடேசு வரரெட்டன் மீது அதிகம் பாடியவர்.

இவர் இயற்றிய நூல். மதன வித்தார மாலை என்ற நூலை ஊற்று மலையார்மீதும், சமுத்திர விலாசம், மற்றும் காமரச மஞ்சரி என்ற நூல்களை எட்டையபுரத்தார் மீதும் திக்குவிஜயம் என்ற நூலை சிவகிரியார் மீதும் பாடியுள்ளார்.

இவர் செய்த யமகமுந் திரிபுமாகிய தனிப்பாடல்கள் மிக அதிகம். இறந்து போகுந்தருவாயில் இவரது கடைவாய் வழியே பால் வழியக் கண்ட அருகிலுள்ளார். 'ஏன் உண்ணவில்லை?' 'பால் கசக்கின்றதோ' என்று கேட்ப இவர் பால் ஒழுகு துணியின் அசுத்தத்தைப் புலப்படுத்தற் பொருட்டு பாலுங் கசக்கவில்லை. துணியுங் கசக்கவில்லை என்று அங்கதமாகச் சொன்னார் என்றும், அச்சமயத்தில் இவருடைய மைந்தர் சமீபத்தில் வந்து இனி எங்களைக் காப்பார் யார் என வினவ இவர் அவரைப் பார்த்து. "நீ யேன் வருந்துகிறாய். ஓரப்பன் போனால் உன்னைக் காத்தற்கு எட்டப்பனுண்டு என்று சொன்னார் என்று ஒரு செவிவழிச் செய்தி உண்டு.

இவரைப்பற்றிய சுவையான செய்தி ஒன்று உண்டு. ஒருசமயம் சிவகரி சமீன்தார் வரகுணராம பாண்டியன் பேரில் "பூதர விலாசம்" என்று ஒரு நூல் பாடிக்கொண்டு போய் நேரில் படித்துக் காட்டி மகிழ்ச்சியாகப் பேசிக்கொண்டிருக்கும் போழ்து இப்பிரபந்தத்தில் அருமை நோக்கி சமீன்தார் இப்பனுவலுக்கும் பரிசுப் பொருள் அதிகம் வரவேண்டி வருமோ எனக் துணுக்குற்றார். இதனை அறிந்த புலவர் மன்னரிடம் அவருக்குப் பணத்தில் விருப்பமில்லை என்றும் மரியாதையிலேயே தான் விருப்பம் என்றும் தெரிவித்தார் அதுகுறித்துக் கூறும் போது புலவர் அவர்கள், 'இப்பிரபந்தம் அரங்கேற்றி முடிந்ததும் பட்டணப் பிரவேசம் வரும்போது தான் ஏறிச்செல்லும் பல்லக்கின் முன் கொம்பைத் மன்னர் சுமந்து வரல் வேண்டும் என வேண்டினார். மன்னரும் அதற்கு இசைந்தார்.

ஆனால் விழாவன்று மன்னர், மக்கள்முன் பல்லக்கின் முன்பகுதியைச் சுமந்து வருவது அத்தனை சிறப்பாக இராது எனக்கருதி தனது மந்திரியைச் சுமந்துவரக் குறிப்பால் உணர்த்தினார். இவற்றையெல்லாம் குறிப்பால் உணர்ந்த புலவர் அவர்கள்.

வாக்கிரண்டு பேசா வரகுணராம பாண்டியன் வாக்கிரண்டு பேச மனம் வைத்தான் என்று இரண்டு அடிகள் கூறியவுடன், எங்கே புலவர் பின்னும் மற்ற இரண்டு அடிகளைக் கொண்டு அறம்பாடி விடுவாரோ என்று அஞ்சிதான் தயாராக இருப்பதாகக் கூறி பல்லக்கின் முன்கொம்பு தாங்கி நடந்தார். உடனே புலவர்.

தாக்கும் - மருவலரைக் கொல்லென்றான்

வந்தடைந்தபோது, வெருவாமற் காவென்றான் மேல்

என்று மற்றைய வடிகளைப் பூர்த்தி செய்தார் என்ற ஒரு செவி வழிச் செய்தியுண்டு.

**கடிகை நமச்சிவாயப்புலவர்:**

எட்டையபுரத்திலே அரண்மனைக் கவிஞராக வீற்றிருந்தவர். இவர்கடிகை முத்துப்புலவரின் பரம்பரையினர். இவர் பர்த்துருஹரியையும் வல்லீ பரிணயம் என்ற வடமொழி நூல்களைத் தமிழ்ப்படுத்தியுள்ளார். வேறு நூல்கள் எதுவும் செய்துள்ளாரா என்ற விவரம் அறியக்கூடவில்லை. இவரை உவே.சா. ஐயர் அவர்கள் நேரிற் பார்த்துள்ளார் என்றும் மிக்க சாந்தமும் அடக்கமும் உடையவர் என்றும் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

**எட்டையபுரம் கருத்த முத்துப்பிள்ளை**

இப்புலவரின் ஊர் எட்டையபுரம் ஆகும். பரம்பரைச் சைவ வேளாளர் வகுப்பினர். இவர் 70 அகவை வரை வாழ்ந்தவர் என்பது தெரிய வருகிறது. எட்டையபுர ஜமீன்தார். இராமநாதபுர ஜமீன்தார், திருவாவடுதுறை ஆதீனக்கர்த்தர், சேறைச் சுப்பிரமணிய கவிராயர் மற்றும் புலவரின் மைந்தர் ஆகியோர் துணையால் இப்புலவரின் வாழ்க்கை வரலாற்றை அறிய முடிகிறது.

இப்புலவருக்கு திருச்செந்தூரில் ஒரு தெருவில் சிற்சில வீடுகள் இவருக்குண்டு. இவருடைய நெருங்கிய நண்பராக விளங்கியவர் கடிகை நமச்சிவாயப் புலவர் ஆவர்.

இவரைப்பற்றி ஐயர் அவர்கள் குறிப்பிடும்போது அடக்கம், அன்பு, வணக்கம், பிறரை மதித்தல் முதலியன இவரிடமிருந்த சிறந்த குணங்கள், இவர் பெரும்பாலும் இருந்து காலங்கழித்த இடம் எட்டையபுரம். இவருடைய நிறம் கறுப்பு; குட்டையுருவம். சிறந்த வித்துவானாகவே இவரை அனைவரும் மதித்தனர்; என ஐயர் குறிப்புத் தருகிறார்.

இவர் எட்டையபுரம் சிவகாமி நாத பிள்ளையின் இளைய கனிஷ்டர். இவர் செய்த நூல்கள் பின்வருமாறு:-

மருதூர் எனப்படும் நயினார்கோயில் எனும் கிழக்கு இராமநாதபுரத்தைச் சார்ந்த வில்வவனத்தலப்புராணத்தைத் தமிழ்படுத்தியவர் 1. சிவதத்துவசுதா நிதி, 2. திரிபுவனப் புராணம். 3. வேளாளர் பள்ளு. 4. சிவகிரிப் பிள்ளைத்தமிழ். 5. கழுகு மலைப் பள்ளு. 6. திருச்செந்தில் கலித்துரையந்தாதி. 7. வெண்பாவந்தாதி.(செந்தூர்), 8. பதிற்றுப்பத்தந்தாதி (செந்தூர்) ஆகிய நூல்கள்.

**எட்டையபுரம் சிவகாமிநாத பிள்ளை:**

இவரது ஊர் எட்டையபுரம். நாற்கவி வல்லுநர். எட்டையபுர கருத்தமுத்துப் புலவரின் முதல் மைந்தர். எட்டையபுரத்தைச் சார்ந்த கழுகுமலை என்ற தலத்தில் எழுந்தருளியுள்ள குமரக்கடவுள் மீது 'கழுகாசலக் கோவை' என்று ஒரு நூல் சமைத்துள்ளார். இவர் எண்பது வயது வரை வாழ்ந்தவர். இறைப் பற்றாளர்.

**இலக்கண முத்துக்கவிராயர்:**

சிவஞானபுரத்தைச் (எட்டையபுரம்) சார்ந்த ஊரான பொன்மய புரத்தில் வாழ்ந்தவர். இலக்கணத்தில் வல்ல வராகவும் ஆசானாகவும் திகழ்ந்தார் எனத் தெரிகிறது. இவர் மதுரையை அடுத்துள்ள சோழவந்தான் சின்னிமடம் சுவாமிகளிடம் அணுக்கத் தொண்டராக இருந்து கல்வி கேள்விகளிற் சிறந்து பண்டிதராக விளங்கியவர்.

தமிழ்ப் புலவர் வரிசை 14 ஆம் புத்தகத்தில் இவரது ஊர் பொம்மையாபுரம் என்றும் சோழவந்தான் சின்னிமடம் என்பது கிண்ணிமடம் என்றும் குறிக்கப்பட்டுள்ளன.

இவர் இயற்றிய நூல்கள், எந்த அரண்மனை இவருக்கு ஆதரவு அளித்தது போன்ற விபரங்கள் கிடைக்கவில்லை.

**நாகூர் முத்துப்புலவர்:**

இவரது ஊர் நாகூர் ஆகும். இவர் எட்டயபுரத்தில் அரண்மனைக் கவிஞராக விளங்கியவர். இயற்கையிலேயே இனிமையான சாந்தமான குணத்தைப் பெற்றவர். நாற்கவி வித்தகர். இவர் எட்டையபுர சமீனைச் சார்ந்த வேங்கடேசுவர எட்டப்பபூபதி மேற் பாடிய செய்யுட்கள் ஐம்பத்தொன்று ஆகும். வித்தாரக் கவிகள் பாடுவதில் வல்லவர். இவர் இயற்றிய முழுமையான நூல்கள் பற்றி அறியக்கூடவில்லை.

**கந்தசாமிப்புலவர்:**

இவர் தென்பாண்டி நாட்டில் தாமிரவருணி ஆற்றுப் படுகையில் எட்டையபுரம் சமீபமாக அமைந்துள்ள முத்தாலங் குறிச்சி என்ற ஊரினைச் சேர்ந்தவர். சிறந்த சிவநேயர். முருகன்பால் ஈடில்லாப் பற்றுக் கொண்டவர். ஈழுவ மரபினர். சிறந்த சொல் ஆற்றல் மிக்கவர். இவர் கூறியது அவ்வாறே நடக்கும் என்பது அன்றைய மக்களின் நம்பிக்கை.

ஒருசமயம் இரண்டு கண்களும் தெரியாமற் போக திருச்செந்தூர் முருகக் கடவுள் மீது பல சிருங்காரக் கீர்த்தனைகள் பாடி மகிழ்வித்தவர். இறைவன் முருகப் பெருமான் வேண்டுகோளின்படி ‘திருச்செந்தூர் நொண்டி நாடகம்’ என்ற சிற்றிலக்கியத்தை இயற்றியவர்.

பாஞ்சாலங்குறிச்சியிலிருந்த கட்டபொம்மு நாயக்கருக்கும் இவருக்கும் நல்ல நட்பு உண்டு. திருவிதாங்கூர் மார்த்தாண்ட வர்ம குலசேகரராமராஜ மகாராஜா அவர்கள் இவரை அன்புடன் அழைக்க அழைப்பை ஏற்றுச் சென்ற புலவர், புரவலரின் வேண்டுகோற்படி திருவனந்தபுர நொண்டி நாடகம் என்னும் பிரபந்தம் பாடியவர். கீழக்கரைச் சீதக்காதியிடம் சென்று பரிசில் பெற்றவர்.எட்டையபுர அரசின் மீதும் நட்புடன் விளங்கியவர் என்பர்.

சீதக்காதி நொண்டி நாடகம், திருச்செந்தூர் நொண்டி நாடகம், திருவனந்தபுரம் நொண்டி நாடகம் என்ற நூல்களை அன்றி இவர் செய்ததாக வேறொரு பிரபந்தமும் உண்டு என்பர்.

**சுப்பிரமணிய பாரதியார்**

த்ாம் பிறந்த தேசம், வாழ்ந்த இடம், பழகும் மனிதர்கள் முதலிய தொடர்புகளால் ஒருவருடைய வாழ்க்கையில் சில பழக்கங்கள் அமைகின்றன. ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் எட்டயபுரத்திற் பிறந்தவர். இவர் பிறந்த பாண்டிநாடு தமிழுக்கு உரிய நாடு. தமிழ் நாடென்று பழைய காலத்தில் அதற்குத்தான் பெயர். கம்பராமாயணத்தில் ஆஞ்சநேயர் முதலியவர்கள் சுக்கிரீவனால் தென் தேசத்துக்கு அனுப்பப்பட்டபோது அங்கே உள்ளவற்றைச் சுக்கிரீவன் சொல்லுவதாக உள்ள பகுதியொன்றுண்டு. அங்கே ஒரு பாட்டில்,

''தென்றமிழ்நாட் டகன்பொதியிற் றிருமுனிவன்
தமிழ்ச் சங்கம் சேர்கிற் பீரேல்
என்று மவனுறை விடமாம்''

என்று அவன் கூறியதாக இருக்கிறது. நீங்கள் பாண்டிய நாட்டை அடைந்தால், அங்கே உள்ள பொதியில் மலைக்கருகில் செல்லும் பொழுது போகும் காரியத்தை மறந்துவிடக் கூடாது; ஏனென்றால் அம்மலையில் அகத்தியருக்குரிய தமிழ்ச் சங்கத்தை அணுகினால் தமிழ் நயத்தில் ஈடுபட்டு விடுவீர்கள்'' என்று அவன் சொன்னதாகத் தெரிகிறது. இதனால் பாண்டி நாட்டின் பெருமை வெளிப்படுகிறதல்லவா?

பாரதியார் பிறந்த எட்டையபுர ஸமஸ்தானத்தில் பல வித்துவான்கள் இருந்தார்கள். அந்த ஸமஸ்தானத்து வித்துவானாகிய கடிகை முத்துப் புலவருடைய பெருமையை யாவரும் அறிவார்கள். அவருடைய மாணாக்கருள் ஒருவராகிய உமறுப் புலவரென்னும் முகம்மதிய வித்துவான் முகமத் நபியின் சரித்திரமாகிய சீறாப்புராணத்தை இயற்றியிருக்கிறார். அந்நூல் ஒரு தமிழ்க் காவியமாக இருக்கிறது. எட்டையபரத்தில் அங்கங்கே உள்ளவர்கள் தமிழ்ப் பாடல்களைச் சொல்லியும்

கேட்டும் இன்புற்று வருபவர்கள். இதனால் பாரதியாருக்கு இளமை தொடங்கியே தமிழில் விருப்பம் உண்டாயிற்று. அது வர வர மிக்கது.

இவர் இளமையில் ஆங்கிலக் கல்வி கற்றார். தம்முடைய தமிழறிவை விருத்தி செய்துகொள்ளும் பொருட்டு மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் சேர்ந்து சிலகாலம் படித்தார். சிறு பிராயம் முதற்கொண்டே இவருக்குச் செய்யுள் இயற்றும் பழக்கம் உண்டாயிற்று. அக் காலத்திலேயே தேசத்தின் நிலைமை இவருடைய மனத்திற் பதிந்தது. தெய்வத்தினிடத்திலும், தேசத்தினிடத்திலும், பாஷையினிடத்திலும் அன்பில்லாதவர் களைக் கண்டு இவர் மிக வருந்தினார். முயற்சியும் சுறுசுறுப்பும் இல்லாமல் வீணாகக் காலத்தைப் போக்குபவர்களை வெறுத்தார். புதிய புதிய கருத்துக்களை எளிய நடையில் அமைத்துப் பாட வேண்டுமென்ற உணர்ச்சி இவருக்கு வளர்ந்து கொண்டே வந்தது.

இவர் சில காலம் சேதுபதி ஹைஸ்கூலில் பண்டிதராக இருந்ததுண்டு. பிறகு, சென்னைக்கு வந்தார்; இங்கே ஸ்ரீ.ஜி. சுப்பிரமணிய ஐயர் இவரிடத்தில் ஈடுபட்டுச் 'சுதேசமித்திரன்' உதவி ஆசிரியர்களுள் ஒருவராக இருக்கச் செய்தார். கட்டுப் பாடான வேலைகளைச் செய்வதிற் பிரியமில்லாத பாரதியார் அந்த வேலையில் அதிக காலம் இருக்கவில்லை.

சென்னையில் இவர் இருந்த காலத்தில், நான் இவரோடு பலமுறை பழகியிருக்கிறேன். பிரசிடென்ஸி காலேஜில் வாரந்தோறும் நடைபெறும் தமிழ்ச் சங்கக் கூட்டத்துக்கு வருவார்; பேசுவார்; புதிய பாட்டுக்களைப் பாடுவார். வருஷ பூர்த்திக் கொண்டாட்டங்களில் புதிய செய்யுட்கள் செய்து வாசிப்பார். ஒருமுறை ஸ்ரீ.வி. கிருஷ்ணசாமி ஐயர் தலைமையில் அச்சங்கத்தில் ஜி.ஏ. வைத்தியராமையர் பேசினார். ஸ்ரீ கிருஷ்ணசாமி ஐயருடைய தமிழபிமானமும், தமிழ் வித்துவான்களை ஆதரிக்கும் இயல்பும் தெரியாத பலர், 'இவருக்குத் தமிழ் பாஷையில் பழக்கம் இல்லையே; தமிழில் என்ன பேசப் போகிறார்?'' என்று நினைத்தனர். அவரோ 'தமிழைப் பற்றி அதிகமாகப் பேசுவானேன். உலகத்திலுள்ள பல பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டு விளங்கும்

திருக்குறளைத் திருவள்ளுவர் இயற்றிய பாஷை இந்தப் பாஷை நவரஸமும் பொருந்திய இராமாயணத்தைக் கம்பர் செய்த பாஷை இது. எல்லோருடைய மனத்தையும் கரைத்து உருக்கித் தெய்வ பக்தியை உண்டாக்கும் தேவாரத்தை நாயன்மார்கள் இயற்றிய பாஷை இது'' என்று உத்ஸாகத்தோடு பிரசங்கம் செய்தார். கேட்ட யாவரும் ஆச்சரியமுற்றார்கள். அந்தக் கூட்டத்திற்கு வந்திருந்த பாரதியார், அந்தப் பிரசங்கத்தில் மிகவும் ஈடுபட்டார். பின்பு கிருஷ்ணசாமி ஐயர் பாஷையின் பெருமையையும் தேசத்தின் பெருமையையும் வெளிப்படுத்தி யாவருக்கும் விளங்கும் படியான பாட்டுக்களைப் பாடியனுப்ப வேண்டுமென்று என்னிடம் சொன்னார். எனக்கு அவகாசம் இல்லாமையால் வேறொருவரை அனுப்பினேன். அவருடைய பாட்டுக்கள் அவருக்குத் திருப்தியை அளிக்கவில்லை. பிறகு பாரதியாரே அவருடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்தார். ஸ்ரீ கிருஷ்ணசாமி ஐயரது பிரசங்கத்தில் இருந்த கருத்துகளே பாரதியார், ''கம்பன் பிறந்த தமிழ்நாடு'' என்பது போன்ற பகுதிகளை அமைத்துப் பாடுவதற்குக் காரணமாக இருந்தன.

தேசத்தின் பெருமையை யாவரும் அறிந்து பாராட்டும் படியான பாட்டுக்களைப் பாட வேண்டுமென்ற ஊக்கம் இவருக்கு நிரம்ப இருந்தது. அதனால் இவர் பாடிய பாட்டுக்கள் மிகவும் எளிய நடையில் அமைந்து படிப்பவர்களைத் தம்பால் ஈடுபடுத்துகின்றன. இவர் உண்மையான தேசபக்தியுடன் பாடிய பாட்டுக்களாதலின் அவை இவருக்கு அழியாத பெருமையை உண்டாக்குகின்றன.

பாரதியார் தேசீயப் பாட்டுக்களைப் பாடியதோடு வேறுபல துறைகளிலும் பாடியிருக்கிறார். இசைப் பாட்டுக்கள் பலவற்றைப் பாடியிருக்கிறார். இவர் சங்கீதத்திலும் பழக்கம் உடையவர். கவிகளின் தன்மையை உபமானமாக வைத்து ஒரு புலவர்,

''கல்லார் கவி போற் கலங்கிக்
 கலைமாண்ட கேள்வி
வல்லார் கவிபோற் பலவான்றுறை
 தோன்ற வாய்த்துச்

**செல்லாறு தோறும் பொருளாழ்ந்து**
**தெளிந்து தேயத்**
**தெல்லோரும் வீழ்ந்து பயன் கொள்ள**
**இறுத்த தன்றே''**

என்று சொல்லியிருக்கிறார். அதற்கேற்ப விளங்குபவை இவருடைய செய்யுட்கள். இப்பாட்டில், ''தேசத்து எல்லாரும் வீழ்ந்து பயன் கொள்ள'' என்றது இவருடைய பாட்டுக்களுக்கு மிக்க பொருத்தமுடையதாகும். (வீழ்ந்து - விரும்பி.)

பாட்டுக்களின் பாகம் ஐந்து வகைப்படும். அவை நாளிகேர பாகம், இக்ஷு பாகம், கதலீ பாகம், திராக்ஷாபாகம், இட்சீரபாகம் என்பனவாம். நாளிகேர பாக மென்பது தேங்காயைப் போன்றது. தேங்காயில் முதலில் மட்டையை உரிக்க வேண்டும்; பிறகு ஓட்டை நீக்க வேண்டும்; அதன் பிறகு துருவிப் பிழிந்து வெல்லம் சேர்த்துச் சாப்பிட வேண்டும். இந்த வகையிலுள்ள பாட்டுக்கள் சில உண்டு. அதைப் பாடுபவர்கள் தம்முடன் அகராதியையும் எடுத்துக்கொண்டு போக வேண்டும். சில சமயங்களில் அவர்களுக்கே தாங்கள் செய்த பாட்டுக்களுக்கு அர்த்தம் விளங்காமற் போய்விடும்.

இக்ஷுபாகமென்பது கரும்பைப் போன்றது. கரும்பைக் கஷ்டப்பட்டுப் பிழிந்து ரஸத்தை உண்ண வேண்டும். கதலீபாகமென்பது வாழைப்பழத்தைத் தோலுரித்து விழுங்குவது போலச் சிறிது சிரமப்பட்டால் இன்சுவையை வெளிப்படுத்துவது. திராக்ஷாபாகம் முந்திரிப்பழத்தைப் போல எளிதில் விளங்குவது. இட்சீரல்பால்பாகம் அதனிலும் எளிதில் விளங்குவது; குழந்தை முதல் யாரும் உண்பதற்குரியதாகவும் இனிமை தருவதாகவும் உடலுக்கும் அறிவுக்கும் பயன் தருவதாகவும் இருக்கும் பாலைப் போல் இருப்பது. பாரதியாருடைய கவிகள் இட்சீரபாகத்தைச் சார்ந்தவை. சிலவற்றைத் திராக்ஷாபாகமாகக் கொள்ளலாம்.

ஆங்கிலம், வங்காளம் முதலிய பாஷைகளிற் பழக்கமுடையவராதலால் அந்தப் பாஷைகளிலுள்ள முறைகளை இவர் தம் கவிதைகளில் அமைத்திருக்கிறார். இவருடைய கவிதைகள் ஸ்வபாவோக்தியென்னும் தன்மை நவிற்சி யணியை யுடையவை. பழைய காலத்தில் இருந்த

சங்கப் புலவர்கள் பாடல்களில் தன்மை நவிற்சிதான் காணப்படும். அனாவசியமான வருணனைகளும் சொல்லடுக்குகளும் கவியின் ரஸத்தை வெளிப்படுத்துவன அல்ல. சில காலங்களில் சில புலவர்கள் தங்கள் காலத்திலிருந்த சில ஜமீன்தார்கள், பிரபுக்கள் முதலியவர்களுடைய வற்புறுத்தலுக்காக அனாவசியமான வருணனைகளை அமைத்ததுண்டு.

பாரதியாருடைய பாட்டுக்களில் தெய்வ பக்தியும் தேச பக்தியும் ததும்புகின்றன. தனித்தனியாக உள்ள பாட்டுக்கள் இயற்கைப் பொருள்களின் அழகை விரித்தும், நீதிகளைப் புகட்டியும், உயர்ந்த கருத்துக்களைப் புலப்படுத்தியும் விளங்குகின்றன.

இவருடைய வசனத்தைப் பற்றிச் சில சொல்ல விரும்புகிறேன். பாட்டைக் காட்டிலும் வசனத்திற்குப் பெருமை உண்டாயிருப்பதன் காரணம் அது பாட்டைவிட எளிதில் விளங்குவதனால்தான். பாரதியாருடைய பாட்டும் எளியநடையுடையது; வசனமும் எளிய நடையுடையது. வருத்தமின்றிப் பொருளைப் புலப்படுத்தும் நடைதான் சிறந்தது. பாரதியாருடைய பாட்டும் எளிய நடையுடையது; வசனமும் எளிய நடையுடையது. வருத்தமின்றிப் பொருளைப் புலப்படுத்தும் நடைதான் சிறந்தது. பாரதியாருடைய வசனம் சிறு வாக்கியங்களால் அமைந்தது. அர்த்த புஷ்டியுடையது. இவருடைய கவிகளின் பொருள் படிக்கும்போதே மனத்துக்குள் பதிகின்றது. வீர ரஸம், சிருங்கார ரஸம் ஆகிய இரண்டும் இவருடைய பாட்டுக்களில் அதிகமாகக் காணப்படுகின்றன. பாரதியார் அழகாகப் பேசும் ஆற்றல் வாய்ந்தவர்.

இவருடைய பாட்டுக்கள் எல்லோருக்கும் உணர்ச்சியை உண்டாக்குவன; தமிழ் நாட்டில் இவருடைய பாட்டை யாவரும் பாடி மகிழ்வதனாலேயே இதனை அறிந்து கொள்ளலாம். கடல் கடந்த தேசங்களாகிய இலங்கை, பர்மா, ஜாவா முதலிய இடங்களிலும் இவருடைய பாட்டுக்கள் பரவியிருக்கின்றன. அங்கே உள்ளவர்களில் சிலர் இவரைப் பற்றி எழுத வேண்டுமென எனக்குக் கடிதங்கள் எழுதியதுண்டு. ‘‘மணவைமன் கூத்தன் வகுத்த கவி,

தளைபட்ட காலுடனேகட லேழையுந் தாண்டியதே'' என்று ஒரு புலவருடைய கவியைப் பற்றிவேறொரு புலவர் பாடியிருக்கிறார். ஸ்ரீராமனுடைய கவியாகிய ஆஞ்சநேயர் ஒரு கடலைத்தான் தாண்டினார்; மணவைக் கூத்தன் கவியோ ஏழு கடல்களையும் தாண்டி விட்டது. ஸ்ரீ ராமனுடைய கவி தளையில்லாமல் தாண்டியது. அங்ஙனம் செய்தது ஆச்சரியமன்று. இந்தப் புலவர் கவியோ, தளையுடைய காலோடு ஏழு கடலைத் தாண்டியது என்கின்றார். தளையென்பதற்கு விலங்கென்றும் கவிக்குரிய லக்ஷணங்களுள் ஒன்றென்றும் பொருள். இந்தப் பாட்டுக்கு இப்போது இலக்கியமாக இருப்பவை பாரதியாருடைய கவிகளாகும்.

பாரதியார் தாம் எவ்வளவு கஷ்டப்பட்டாலும், ஜனங்களுக்கு நன்மை உண்டாக வேண்டுமென்ற கொள்கையுடையவர்; தைரியமுடையவர். இவருடைய புகழ் தமிழ் நாட்டின் புகழாகும்.

– பிற்காலப் புலவர்கள்
வித்துவான் என். வைத்தியநாதன்
டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம்
சென்னை 1986

# எட்டையபுரத்து மன்னர்களில் ஒருவரான வேங்கடேசு ரெட்டன் மீது பாடப்பெற்ற சில தனிப்பாடல்கள்

## கலித்துறை

206. திருக்கரங்கம் வருக்க வயில் செலுத்து படையான
சலக்கை யாமா
தருக்காங்கம் பயிற்றுதுரையி னசைவேங்க டேசுரெட்டன்
தழுவா நாளில்
அருக்கரங்கம் பாம்புகுந்தா ரம்புலியும் வெம்புலிபோ
லாச்சே கண்டாய்
உருக்கரங்கம் பாந்துடைக்க வருக்காம்பிதந்தானென்
றுருகு வாளே.

## (இதுவுமது)

207. கடிமுடிந்தா ருதவுமிள சைவேங்க டேசுரெட்டக்
கன்னன் சொன்ன
பொடிமுடிந்து தாளிவிடம் வருவதுனஞ் சகியாமற்
புகலு முனான்
கொடிமுடிந்து தனித்திருந்த வரிவையிவ ளாமகனே
கூறு மென்சொற்
படிமுடிந்த தாவிலையா நேரிலிவள் கைக்களவைப்
பார்த்தி டாயே.

208. தரும்புலிக்கு மருவ.... த்தாக்கும் வேங்கடேசு ரெட்ட
சாமி மாலை
வரும்பலிக்கு நினைத்தபடிக் கிப்போது தப்பாது
வலத்தி ருந்த
திரும்பலிக்கு ரலைப்பார்க்கிற் செயமடிபெண்ணே மதனன்
செங்கை யாலெய்
அரும்பலிக்கு மென்னபயஞ் சுகமாக வாழ்வாயுன்
னதிர்ஷ்டந் தானே.

## விருத்தம்

209. வேலையி லேதுயில் முகுந்தன் போலும்
வேங்கடேசு ரெட்டன் விந்தையாக
வாலையிலே தானடந்த செய்தி தன்னைச்
சொல்லையிலே வண்டு பாயுஞ்
சோலையி லேயித ழுருந்தச் சொல்லையிலே
முலையையெட் டித்தொடப் பாவாடைச்
சேலையி லேயமு தெழும்பிச் சிந்தையிலே
மயங்கியதென் சிந்தை தானே.

210. விகடத் தந்திமதி காய்மார வேள்விடுக்கு
மந்திரந் தைத்தூடு ரவ்வென்
மகடத் தந்திவலை யாடுங் கட்புனல்
வடியத் தந்தி யிசைவெறுப் பாவளோ
சகடத் தந்தி பரித்திரள் கூட்டிய
சத்துருத் திரட்டைக்குத் திடத்தரும்
புகடத் தந்தி யுதையச் சயதரா
பூதரா! வேங்கடேசு ரெட்டந்தினே.

## தனிப்பாடற்றிரட்டு

211. புகட் பாத வுனையே நினைத்தமும்
புல்கி யின்பந் தராதென் சொல்லெந்தன்
மகடப் பாத வராபுரிந் தாண்மனம்
வஞ்சம் விட்டு மருவிப் புணருவாய்
சகடப் பாதக னாருயிர் மாய்ந்திடச்
சாற்று மாங்கவர்க் கென்ன வளர்ந்திடும்
விகடப் பாதங் கொடிச்சீறி மோதிய
வீர ராகவ னேயரங் கேசனே.

212. சுந்தரர் சுந்தரா தரங்கண்டிலை யந்தரா
சுகந்தா ரீரிப்போ தென்ன
விந்தரர் சுந்தரா வரப்பேதை யரிந்தரா
சகிக்கு என்னசொல் லாகுமோ
சுந்தரர் சுந்தரா வென்னு மாதர்
சுதந்தரா பாதரா புத்தி ராபுய
மந்தரர் சுந்தரா வுடையார் சுத
மருது பாண்டிய ராச கிரீடியே.

213. கொண்டலாய்ப் பைங்கிளிக் கூந்தலிற்
கொண்டலாபங் கூறுவ ளாயிது
கண்டலாபங் கனிவீறு தெறலகற்
கண்டலாது கனிவா யரும்புமோ
குண்டலா கண்டலா மீனவர்
குலசேகரா வுடையார்வேள் சுதாகரா
மண்டலாதி பதிராச சேகரா
மருந்துபாண் டியராச கிரீடியே.

214. ....ராண மாமுலைகளுக் குத்தானவா
வண்டள பத்தலே....
லானவாறு மறியா னிவள் கண்ணீ
ரான வானு மரியாணமின் னாரன்றோ
வானவர் கண்டலர் மண்டலாதிபர்
மானவா வளவா மதுராபுரி
மீனவா விசையா மீனகேதனா
வேங்கடேசு ரெட்டம ராயனே.

215. போர்க்கலக்க முற்றவருக் குதவும்
வேங்கடேசு ரெட்டன் புனைதாரான்
ஊர்க்கலக்க முற்றகணை மதன்றொடுத்தா
லாற்றுவளோ வோகோகிண்....
சார்க்கலக்கம் மியன்கடைந்த செப்பல்
தானே திரண்டதனுத் தினூடே
வார்க்கலிக்கண் ணீருகுத்தாள் வண்டினங்காள்
கண்செய்தி வழு....

### விரகதாபமுற்ற தலைவி கூற்று

216. எந்தனஞ்சும் மாயிருக்கை யில்லை
யிறைவோ னுண்ண
வந்தனம்சும் மாசகிக்கற் றென்மனஞ்
சகியாநிற்ப வழுத்தக் கேண்மின்!
கந்தனஞ்சு மாறுமுகந் திருவுரர்க்
கயல்வரவு காணேன் போன
சந்தனஞ்சும் மாவந்தாற் பூசலாம்
எனக்கும்தன் றனக்குந் தானே.

217. முத்துக் கந்தனைப் பெற்றவர் போலப்
பெண்பா லிலாசை போனபூ வரிசையால்
முத்துக் கந்தனை யுள்ளங் கொளாமலே
முளரித் தாளின் மனம்வைப்.... கன்றுக
கொத்துக் கந்தனை யில்லாத பைந்தரு
குலவு வானவர் கோவான செ....
வித்துக் கந்தனை யானை முளித்தசை
வேல னேமலை வில்லிதன் பாலனே.

218. அடியக்கா மதப்பயலை பிடியடி
வில்லொடி யென்விழி யானம்பு
வடியக் காலின்மலரை வருத்திய
மாம தற்முச் சொல்லி
கொடியக்கா லென்னெனவே கொள்ளை
முருகன் வராக்கொடுமை பாலே
வெடியக்கா லென்னெனவே விலகுறான்
மதப்பயலும் வேளேதானே.

219. சங்கு முழங்குந் தமிழ்நாடன்
தம்மை நினைத்த போதெல்லாம்
பொங்கு கடலு முறங்காது
பொழுதோ நாளும் விடியாது
திங்க ளுறங்கும் புள்ளுறங்கும்
தென்ற லுறங்கும் சிலகாலம்
எங்கு முறங்கு மிராக்காலம்
என்க ணிரண்டு முறங்காதே.

**கொச்சகக் கலிப்பா**

220. நஞ்சாச்சு வேம்பாச்சு நாவுக்கா காவெட்டிப்
பிஞ்சாச்சு நானுமக்குப் பேசவந்த வார்த்தையெல்லா
மஞ்சாச்செ னுங்கூந்தல் வல்லி சொன்ன சொல்லுமக்கு
பஞ்சாட் சரமாச்சே பஞ்சநதி நாயகரே!

221. அங்கா வித்தரா யணைவ துகண்டின்பமுறு
பங்கா வித்தாரா பதியேயென் றேங்குவளோ
துங்கா வித்தாரா துணைமுலையா ராசைகொள்ளும்
செங்கா வித்தாரா திருமலைவே லேந்திரனே.

222. மங்கைக்கோ தண்டா வனமுலைப்பொன் பூத்ததடா
வெங்கைக்கோ தண்டா விதையமதன் கைப்படையோ
சங்கைக்கோ தண்டந் தகைவிதுரன் பின்தொடரச்
செங்கைக்கோ தண்டா திருமலைவே லேந்திரனே.

**தலைவி வாடைக்காற்றுக்கஞ்சிக் கூறியது**

**கட்டளைக்கலித்துறை**

223. வெள்ளைமுகங் குங்குழையா வாடை முகந்தாலெனது
பிள்ளை முகக்குந் தனத்தைப் பிள்ளைமுகக் கப்படுமோ
வெள்ளை முகக்கும் பிறையை வெண்ணெயென்று
மேடையிற்பைங்
கிள்ளை முகக்கும் புரணி புகக்கோள் நராதிபனே.

**கட்டளைக்கலிப்பா**

224. அன்றிலுக்கு மாங்குயிற்கு மங்கசவேள் கொண்டகணை
மன்றன் மலருக்கும் வருந்துவது மல்லாமல்
வென்றிபெறு கும்பமுனி மேவும் பொதியவரைத்
தென்றலுக்கென் செய்வேனான் சிங்கார வேலவனே.

225. முறுக்கி யெனைப்பார்த்து முனிந்தடையிற் கச்சை
யிறுக்கியடி யெந்தனிரு தனமேற்கைப் போட்டீர்
சுறுக்கையிங்கே காட்டாதீர் தூரநில்லு நானறியாச்
சிறுக்கியென்றோ ஏய்க்கவந்தீர் சிங்கார வேலவனே.

226. தூதெனவே கண்ணாத்துவண்டசிறைக் கோலமுமென்
மாதரசி போலவரு மாடப் புறாவின்மேல்
சீதரனே ராகுமனத் தேவரகு நாதனுக்கென்
பேதைமதி யால்விளைத்த பெண்பழிபோ காதெனுமோ!

227. ஆரால் வருகுமென்றல் குவைத்துப் பார்த்திருந்து
வாரா தயருமெந்தன் மாதை நிகர்க்குங்கீர்
சீராம னாகுமந்தத் தேவரகு நாதனுக்கென்
பேராசை மாற்றிடந்தப் பெண்பழிபோ காதெனுமோ.

**(அம்மானை)**

228. மட்டுமாக் குழல் வஞ்சி மனமகிழக்
கட்டுமா வொன்றுனது கச்சியிலே யம்மானை
கட்டுமா வொன்றுனது கச்சியிலே யாமாகில்
இட்டமாங் கனிகாய்ப்ப தில்லையோ வம்மானை
இல்லாமற் கல்லா லெறிவா ரம்மானை.

229. அறத்தமகன் றிருச்செந்தூர் ரமர்ந்தவடி வேலவன்றான்
குறத்தியெனும் வள்ளிதனைக் கொண்டான்கா ணம்மானை
குறத்தியெனும் வள்ளிதனைக் கொண்டானே யாமாகிற்
றிறத்துடனே பூனைகுத்தித் தின்பனோ வம்மானை
தின்றான்காண் பூனைகுத்தித் தினைமாவி லம்மானை.

230. அத்தியு ரிதரித்த வாலங்காட் டப்பருக்கு
நெற்றிக்கண் ணொன்று நெருப்புகா ணம்மானை
நெற்றிக்கண் ணொன்று நெருப்புகா ணாமாகில்
பத்தியருஞ் சடையி லிராதோ வம்மானை
படருமென்றே கங்கை பதுவிருந்தா ளம்மானை.

231. பூங்காவ னஞ்சூழும் புள்ளிருக்கும் வேலூரான்
பாங்கான தென்மதுரைப் பாணனேகா ணம்மானை
பாங்கான தென்மதுரைப் பாணனே யாமாகிற்
றாங்கா திழையெடுத்துத் தைப்பானோ வம்மானை
தையலுக்கு நல்ல சமர்த்தன்கா ணம்மானை.

232. எண்ணரிய கச்சியிலே வம்...பம்பரக்கடல்
அண்ணவ் றிருமேனி தானாகாச ம்மானை
அண்ணன் றிருமேனிதானாகாச மாமாகில்
வண்ண முலையாலே வடுப்படுமோ வம்மானை
மாவடியில் வாழ்வார்க்கு.... தோவம்மானை.

233. மாவுறங்கின புள்ளுறங்கின வண்டுறங்கின தண்டலைக்
காவுறங்கின வேந்தன் மானிரு கண்ணுறங்கிலன்
கையணைக்
கோவுறங்கு கடைத்தலைக் குலதீப வள்ளைத் தட்டிதின்
றாவுறங்குபு காரஞ்சல் அஞ்சலென்ன வடுக்குதே.

## வெண்பா

234. வாக்குக் கருணகிரி வாதவூ ரர்கனிவு
தாக்குக்கு மெஞ்ஞான சம்பந்தர்-போக்குக்கு
நக்கீரர் நாக்கு நயத்துக்குச் சுந்தரராம்
சொற்குறுதி யப்பரெனச் சொல்.

235. நேசரைக்கா ணாவிடத்தல் நெஞ்சாரத் தோத்திரஞ்செய்
யாசானு மப்படியே யனுதினமும் - வாச
மனையாளைப் பஞ்சணையல் மைந்தரைத்தன் னெஞ்சில்
வினையோரை வேலைமுடி வில்,

236. சங்குக்குச் சங்கிட்டாள் தாமரைக்குத் தாளிட்டாள்
கொங்கைக்கு வடங்கோத் திட்டாள் - தங்க
தமரிட்ட முத்துந் தமரிடா முத்தும்
எவரிட்டார் மங்கைக் கிசைந்து.

237. கனிவந்த சொல்லியர் வேள்கரு மாணிக்கன் கப்பை வெற்பிற்
றனிவந்தன மொருவேட்டை யென்றான் பின்பு தந்தியென்றான்
முனிவந்த கோட்டுக் கலையதென்றான் பின்முயல தென்றா
னினிவந்து சிற்றெறும் பானாலுமாமிவ னெய்ததுவே.

## வெண்பா

238. ஆடெடுத்த கள்ளன் வரத்தாண் டவனை
மாடெடுத்துப் போகுதென்ன மாயமோ - தேடெடுத்த
தேனத்தார் போற்றுகின்ற தில்லைச் சிதம்பரரைக்
கானத்தார் பார்த்திருக்கத் தான்.

239. வண்டேநீ சொல்லுவாய் செஞ்சொன் மலைமருந்தைக்
கண்டேயென் சொல்லினாக் கஞ்சொல்லித் -திண்டோள்பொற்
கல்லணிதா மஞ்செங்கா ரங்கொண்டு வைகாமல்
வல்லைக்கிளி னெஞ்சின் வா.

இணைப்பு-4

## நாயக்கர் காலத்தில் உருவான பாளையங்கள்

1. பாஞ்சாலங்குறிச்சி
2. எட்டையபுரம்
3. நாகலாபுரம்
4. ஏழாயிரம் பண்ணை
5. காடல்குடி
6. குளத்தூர்
7. மேல் மாந்தை
8. ஆற்றங்கரை
9. கொல்லபட்டி
10. கோலார் பட்டி
11. கடம்பூர்
12. மணியாச்சி
13. தலைவன் கோட்டை
14. நெற்கட்டஞ் சேவல்
15. சொக்கம்பட்டி
16. ஊற்றுமலை
17. சேற்றூர்
18. சிவகிரி
19. சிங்கம்பட்டி
20. அழகாபுரி
21. ஊர்க்காடு
22. சுரண்டை
23. சந்தியூர்
24. எழுமலை
25. இரசக்கன்னூர்
26. கோட்டையூர்
27. மருங்காபுரி

28. மன்னார்கோட்டை
29. பாவாலி
30. இலக்கையனூர்
31. முல்லையூர்
32. இடையகோட்டை
33. கடவூர்
34. நிலக்கோட்டை
35. தேவாரம்
36. இராமகிரி
37. கல்போது
38. கன்னிவாடி
39. தொட்டப்ப நாயக்கனூர்
40. கம்பம்
41. காடையூர்
42. வாராப்பூர்
43. தோகைமலை
44. படதூர்
45. ஆயக்குடி
46. சமுத்தூர்
47. விருப்பாச்சி
48. படமாத்தூர்
49. கண்டவநாயக்கனூர்
50. காமய நாயக்கனூர்
51. தும்பிச்சி நாயக்கனூர்
52. நத்தம்
53. வடகரை
54. வெள்ளிகுன்றம்
55. மலையபட்டி
56. அம்மையநாயக்கனூர்
57. போடிநாயக்கனூர்

58. சக்கந்தி
59. மதனானையூர்
60. ரோசலைப்பட்டி
61. வீரமலை
62. பெரியகுளம்
63. குருவிகுளம்
64. ஆத்திப்பட்டி
65. இளசை
66. மதுவார்ப்பட்டி
67. கோம்பை
68. கூடலூர்
69. கவண்டன்பட்டி
70. குமாரவாடி
71. உதயப்பனூர்
72. கொல்ல கொண்டான்

– பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் (முதற்பாகம்)
ஜெகவீர பாண்டியனார் (இரண்டாம் பதிப்பு)
வரதராஜுலு நாயுடு பிரஸ், சென்னை. 1954
(பக்.55-56)

## துணைநூற் பட்டியல்


1. அகநானூறு
எஸ். இராஜம்
மர்ரே அண்டு கம்பெனி
சென்னை 1958

2. அமிர்த மதனகூத்து நாடகம்
(பதி.) த. பூமிநாகநாதன்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 1996

3. இலக்கியத் திறனாய்வு
டாக்டர் சு. பாலச்சந்திரன்
அணியகம் (முதற்பதிப்பு)
சென்னை 1996

4. ஐங்குறுநூறு
நியு செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை 1957

5. ஒப்பியல் இலக்கியம்
க. கைலாசபதி
சென்னை புக் ஹவுஸ் (பி) லிட்.
சென்னை 1969

6. கலித்தொகை
எஸ். இராஜம்
மர்ரே அண்டு கம்பெனி
சென்னை 1957

7. கலைக்களஞ்சியம்
தொகுதி - 10
தமிழ் வளர்ச்சிக் கழகம்
சென்னை

8. குறுந்தொகை
எஸ். இராஜம்
மர்ரே அண்டு கம்பெனி
சென்னை 1957

9. கோயிலொழுகு
ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி
ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்த பிரகாச ஸமதி
திருச்சி 1976

10. சதுரகராதி
வீரமாமுனிவர்
இ.மா. கோபாலகிருஷ்ணக்கோன் வெளியீடு
மதுரை 1928

11. சாதிநூல்
ஞானப்பிரகாச சுவாமி
கலாநிதி அச்சுக்கூடம்
சென்னை 1875

12. சிந்து இலக்கியம்
க. கையிலாசபதி
சென்னை புக்ஹவுஸ் (மூன்றாம் பதிப்பு)
சென்னை 1982

13. சிலப்பதிகாரம் மூலமும் உரையும்
(பதி.) டாக்டர் உ.வே. சாமிநாதையர்
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர் 1985

14. சிற்றிலக்கியச் செல்வம்
டாக்டர் ந.வீ. செயராமன்
மணிவாசகர் நூலகம்
சென்னை 1975

15. சிற்றிலக்கியத் திறனாய்வு
டாக்டர் ந.வீ. செயராமன்
இலக்கியப் பதிப்பகம்
சென்னை 1980

16. சிற்றிலக்கியத் தோற்றமும் வளர்ச்சியும்
டாக்டர் முத்துசண்முகம் & நிர்மலா மோகன்
மதுரை 1979

17. சீவக சிந்தாமணி
(பதி.) உ.வே. சாமிநாதையர்
கபீர் அச்சுக்கூடம்
சென்னை 1969

18. சுவாதீன சுதந்தரி, க. துரைசிங்கம்,
தியோடர் பிரண்டர்ஸ் மற்றும் ஞானானுகூல பிரஸ் ,
சென்னை 1923

19. ஞானப்பள்ளு
(பதி.) சதாசிவம்,
கொழும்பு 1968

20. தமிழ் இலக்கியக் கொள்கை - 6
(பதி.) டாக்டர் ச.வே. சுப்பிரமணியன்
டாக்டர் கடிகாசலம்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 1981

21. தமிழ் இலக்சிகன் (7 தொகுதிகள்)
சென்னை பல்கலைக்கழகம்
சென்னை 1982

22. தமிழ் இலக்கிய வகையும் வடிவும்
ச.வே. சுப்பிரமணியன்
தமிழ்ப் பதிப்பகம்
சென்னை 1984

23. திராவிட மொழிகளின் ஆராய்ச்சி
பேராசிரியர். வையாபுரிப்பிள்ளை

24. தொல்காப்பியம் (பொருள் - இளம்பூரணர்)
கழக வெளியீடு
சென்னை 1953

25. தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம்
மு. அருணாசலம் பிள்ளை
மதுரைப் பல்கலைக் கழகம்
மதுரை 1975

26. நந்தனார் சரித்திரக் கீர்த்தனை
லாங்மேன்ஸ் கிரீன்ஸ் அண்டு கோ
சென்னை 1915

27. நவநீதப் பாட்டியல்
(பதி.) வையாபுரிப்பிள்ளை
மயிலைத் தமிழ்ச் சங்கம்
சென்னை 1943

28. நற்றிணை
எஸ். இராஜம்,
மர்ரே அண்டு கம்பெனி
சென்னை 1957

29. பத்துப்பாட்டு
(பதி.) டாக்டர் உ.வே. சாமிநாதையர்
சென்னை 1993

30. பள்ளு இலக்கியம் ஒரு சமூகவியல் பார்வை
கோ. கேசவன்
அன்னம் பிரைவேட் லிமிடெட்
சிவகங்கை 1981

31. பிற்காலப் புலவர்கள்
மகாமகோ வாத்தியாய
டாக்டர். உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம்
சென்னை 1986

32. வாழ்வியற் களஞ்சியம் - தொகுதி
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர் - 19

33. வையாபுரிப் பள்ளு
பழனி இம்முடிப்பட்டம்
வேலச் சின்னோ வையன்
பழனி தண்டபாணி தேவஸ்தானம் வெளியீடு
உடுமலை 1943

34. A Dravidian Etymological Dictionary
Burrow and M.B. Emenear
Oxford University Press
London 1966

35. A History of Tinnevelly
Bhisop R Caldwell
Asian Educational Services
New Delhi 1982

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## வெளியீடுகள்

| | ரூ. பை. |
|---|---|
| சங்க இலக்கியத்தில் கலையும் கலைக்கோட்பாடும் | 65.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் பகுதி - 1 | 100.00 |
| திருக்குற்றாலநாத சுவாமி கோயில் வரலாறும் பண்பாடும் | 60.00 |
| காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயில் ஓர் ஆய்வு | 60.00 |
| வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் வாழ்வும் பணியும் | 65.00 |
| தமிழ்நாட்டு வரலாற்றின் இலக்கிய ஆதாரங்கள் கி.மு. 200 - கி.பி. 1300 | 100.00 |
| நன்னூல் மூலமும் கூழங்கைத் தம்பிரான் உரையும் | 65.00 |
| உத்தரராம சரிதம் (பவபூதி) (ம.ப) | 30.00 |
| தில்லைக் கோவிந்தன் (ம.ப.) | 25.00 |
| பாஸ மகாகவியின் இரட்டை நாடகங்கள் | 36.00 |
| திராவிட மொழியின் மூவிடப் பெயர் (ம.ப.) | 40.00 |
| பரணர் | 85.00 |
| முல்லை | 25.00 |
| யாப்பருங்கலம் (ம.ப.) | 170.00 |
| தமிழ்த் தூது (ம.ப.) | 20.00 |
| தேவநேயப் பாவாணரின் மொழியியல் - வரலாற்றுக் கொள்கை (அ.சொ.) | 35.00 |
| பாணினியின் அஷ்டத்தியாயி - தமிழாக்கம் - பகுதி 1 | 95.00 |
| பாணினியின் அஷ்டாத்தியாயி - தமிழாக்கம் - பகுதி 2 | 60.00 |
| பாணினியின் அஷ்டாத்தியாயி - தமிழாக்கம் - பகுதி 3 | 90.00 |
| தமிழ் வள்ளல் பாண்டித்துரையார் | 25.00 |
| இராசேந்திரன் (நாடகம்) (ம.ப.) | 50.00 |
| தமிழ் நாடக மேடை முன்னோடிகள் | 40.00 |
| சூடாமணி நிகண்டு : ஒரு சொல் பல்பொருள் விளக்கம் | 65.00 |
| இயற்கை மொழியாய்வு - தமிழ் | 75.00 |
| தொல்காப்பியம் இலக்கியக் கோட்பாடுகள் | 115.00 |
| சின்னணைஞ்சான் கதை | 75.00 |
| Persona in Tolkappiyam | 50.00 |
| நாடகமேடை நினைவுகள் | 166.00 |
| தமிழின் பாவடிவங்கள் | 35.00 |
| சங்க இலக்கியம் : கவிதையியல் நோக்கு, சிந்தனைப்பின்புல மதிப்பீடு | 110.00 |
| Porulatikaram of Tolkappiyam (An English Version) | 40.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடிவிளக்க அட்டவணை - தொகுதி - 1 | 75.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடிவிளக்க அட்டவணை - தொகுதி - 2 | 70.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடிவிளக்க அட்டவணை - தொகுதி - 3 | 70.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை - தொகுதி - 1 | 110.00 |
| செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப்பணி | 20.00 |
| Tamil India | 40.00 |
| Studies in Tamil Prosody and Poetics | 45.00 |
| புதிய அமைச்சகம் புரிந்த பணிகள் | 10.00 |
| தனிநாயகம் அடிகளாரின் ஆய்வுகள் | 22.00 |
| மன்னான் சின்னாண்டிக் கதைப்பாடல் | 18.00 |
| தமிழ்நாட்டில் பைரவர் வழிபாடு | 19.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| பொருள் புதிது | 35.00 |
| அறநூல் | 38.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை - தொகுதி - 2 | 110.00 |